# குறையொன்றுமில்லை

(ஆறாம் பகுதி)

முக்கூர் ஸ்ரீ லக்ஷ்மி நரசிம்மாச்சார்யார்



வானதி பதிப்பகம்
23, தீனதயாளு தெரு,
தி.நகர், சென்னை – 17.

| | | |
|---|---|---|
| முதற் பதிப்பு | : | ஜுன், 2004 |
| இரண்டாம் பதிப்பு | : | அக்டோபர், 2004 |
| மூன்றாம் பதிப்பு | : | ஆகஸ்ட், 2005 |
| நான்காம் பதிப்பு | : | டிசம்பர், 2005 |
| ஐந்தாம் பதிப்பு | : | ஆகஸ்ட், 2006 |
| ஆறாம் பதிப்பு | : | மே, 2007 |
| ஏழாம் பதிப்பு | : | ஏப்ரல், 2008 |
| எட்டாம் பதிப்பு | : | ஜுன், 2009 |
| ஒன்பதாம் பதிப்பு | : | ஜுலை, 2010 |
| பத்தாம் பதிப்பு | : | அக்டோபர், 2011 |
| பதினொன்றாம் பதிப்பு | : | பிப்ரவரி, 2013 |
| பன்னிரெண்டாம் பதிப்பு | : | ஜுலை, 2014 |
| பதிமூன்றாம் பதிப்பு | : | ஜனவரி, 2016 |



**திருநாவுக்கரசு தயாரிப்பு**

**விலை : ரூ.100.00**

*ஓவியங்கள் : வேதா*

| | | |
|---|---|---|
| TITLE | : | KURAIONDRUMILLAI (Part- VI) |
| AUTHOR | : | MUKKUR SRI LAKSHMI NARASHIMACHARYAR |
| LANGUAGE | : | TAMIL |
| SUBJECT | : | RELIGIOUS |
| EDITION | : | THIRTEENTH EDITION, JANUARY, 2016 |
| PAGES | : | iv + 232 = 236 |
| PUBLISHED BY | : | **VANATHI PATHIPPAKAM** 23, Deenadayalu Street, Thyagaraya Nagar, Chennai-17. ☎ 24342810, 24310769 E-mail : vanathipathippakam@gmail.com |
| PRICE | : | **₹ 100.00** |

Printed at : Novena Offset Printing Co., Chennai - 5 ☎ 28446891, 28446166



முக்கூர் லக்ஷ்மி நரசிம்மாச்சார்யார்

# பதிப்புரை

முக்கூர் ஸ்வாமிகளின் அறுபதாவது பிறந்த தினத்தை முன்னிட்டு அவருடைய 'குறையொன்றுமில்லை' ஆறாவது பகுதியை வானதி பதிப்பகம் பக்தியுடன் வெளியிட்டு வாசகர்களுக்கு அளிப்பதில் மட்டற்ற மகிழ்ச்சியடைகிறது.

முக்கூர் ஸ்வாமிகளின் அருளுரைகளான குறை யொன்றுமில்லை ஆறாவது பகுதியை கல்கி வார இதழ் தொடர் கட்டுரைகளாக வெளியிட்டதனால் வாசக அன்பர்களுக்கு ஞானக்களஞ்சியம் கிடைத்துள்ளது.

இது போன்ற ஞானக் களஞ்சியங்களைப் பெரியவர்கள் படிப்பது மன அமைதிக்காக மட்டுமே என்று கொள்ளலாம். ஆனால் அவர்கள் எவ்வகையி லேனும் தங்களுடைய இளம் தலைமுறையினருக்கும் இந்த நூல்களைப் பக்குவமாக எடுத்துச் சொல்லி அறிமுகம் செய்யவேண்டும் என விரும்புகிறேன்.

இளைஞர்கள் இது போன்ற இலக்கியங்களைப் படிக்க முன்வருவார்களானால், அது இந்த தேசத்துக்கும், பண்பாடுகளுக்கும் ஏற்றம் தருவதாய் அமையும்.

இந்தக் கட்டுரைகளை நூல் வடிவில் வெளியிட அனுமதி வழங்கியுள்ள ஸ்ரீ முக்கூர் ஸ்வாமி அவர்களின் குடும்பத்தாருக்கும் வானதி பதிப்பகத்தின் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அனைவரும் படித்து இன்புற வேண்டும். வாழ்த்துகள்.

அன்பன்

**வானதி ஏ. திருநாவுக்கரசு**

# குறையொன்றுமில்லை

## ஆறாம் பகுதி

## 1

அம்புப் படுக்கையில் பீஷ்மர் உத்தராயணத்தை எதிர்பார்த்துப் படுத்துக் கொண்டிருக்கிறார்.

சுவச்சந்த ம்ருத்யு என்று பெயர் அவருக்கு. பீஷ்மப் பிரதிக்ஞை என்று சொல்வதுண்டு. பீஷ்ம: என்றால் பயப் படத்தகுந்தவர் என்று அர்த்தம். அவரைப் பார்த்தாலே நடுங்கும். அப்படிப்பட்ட பயப்படத் தகுந்த பிரதிக்ஞை பண்ணியவர் அவர்.

ராமாயணத்திலே பரதன் பிரதிக்ஞை பண்ணினார். பாரதத்திலே பீஷ்மர் பிரதிக்ஞை பண்ணினார். அவர் அப்பாவுக்காக அவர் 'கல்யாணமே பண்ணிக்க மாட்டேன்' என்று இருந்தார்.

சந்தனு மகாராஜா இருக்கிறாரே, அவருக்கு சாந்தனவர் என்று பெயர். அந்த சந்தனு மகாராஜா தன் பிள்ளைக்கு வரம் கொடுத்தார் - 'நீயே விரும்பும் போதுதான் உன்னை ம்ருத்யு வந்தடையும்' என்று அனுக்கிரஹம் பண்ணினார் சந்தனு.

அவ்வாறே பீஷ்மர் சுவச்சந்த ம்ருத்யு, விரும்பும் போது மரணத்தைச் சந்திக்கக் கூடியவர் ஆனதனாலே, உத்தராயணத்தை எதிர்பார்த்து அவரால் காத்திருக்க முடிகிறது.

அப்படிப்பட்ட உத்தராயண புண்ணிய காலத்திலே, அந்த எம்பெருமானை நேரே சேவித்து, அவனை ஸ்தோத்திரம் பண்ணினார். பகவானும் அவரை அப்படியே ஆகர்ஷிக்கிறான்.

தன்னிடத்திலே இல்லாததையெல்லாம் பீஷ்மாச் சார்யாருக்குக் காட்டினான் பகவான்!

குதிரையை ஓட்டியதனாலே அவன் கைகள் சிவந் திருக்கின்றன.

குதிரையினுடைய குளம்பு பட்டுக் கிளப்பிய தூளியெல்லாம் மேலே படிந்திருக்கிறது.

அம்புகள் பட்டு, பகவான் உடம்பிலிருந்து ரத்த மாகக் கசிகிறது!...

ரத்தம் உண்டா பகவானுக்கு...?

வியர்வை உண்டா...?

சிரமம் உண்டா...?

- இதெல்லாம் பகவானுக்குக் கிடையாது. எது தன்னிடத்தில் இல்லையோ, அதையெல்லாம் அவருக்குக் காட்டினான்! பீஷ்மாச்சார்யர் அப்படியே நடுங்கிப் போகிறார்.

"இப்படியெல்லாம் கூட உண்டா...? ஆச்ருத பரதந்த்ரனாக, இவ்வளவு காரியம் பண்ணுகிறாயே...?" என்று நடுங்குகிறார்.

சுவதந்த்ரனான பகவான், தன்னை ஆச்ரயிக்கும் அடியார்களுக்காக, அவர்கள் தேவைக்காக ஓடோடி வந்து, தன்னை மாற்றிக் கொள்கிறான் - பரதந்த்ரனா கிறான்.

அர்ஜுனன் என்ன பண்ணுகிறான்...? பகவானை வேலை வாங்குகிறான்.




''ரதத்தை அங்கே நிறுத்து, இங்கே நிறுத்து'' என்று சொல்கிறான். "எவ்வளவு நேரம் நிறுத்தினால் அவர்களையெல்லாம் என்னால் பார்க்க முடியுமோ, அவ்வளவு நாழி நிறுத்து..."

அர்ஜுனன் இட்ட வழக்காக பகவான் வேலை செய்து கொண்டிருக்கிறான். அவன் சொன்ன இடத்திலெல்லாம் நிறுத்துகிறான். நிறுத்தி, கையைச் சுட்டிக் காட்டிச் சொல்கிறான்

"அதோ நிற்கிறாரே... அவர்தான் பீஷ்மர்.

அதோ நிற்கிறாரே... அவர்தான் துரோணர்.

அதோ இருக்கிறானே... அவன்தான் துரியோதனன்.

அதோ இருப்பது கர்ணன்." – இப்படி ஒவ்வொருத்தரையும் சுட்டிக் காட்டுகிறான்.

ஏன், அர்ஜுனனுக்குத் தெரியாதா...? இவர்களெல் லாம் யார் என்று தெரியாதா? பீஷ்மரைத் தெரியாதா? துரோணரை அவனுக்குத் தெரியாதா? ஏன் இப்படிச் சுட்டிக்காண்பிக்க வேண்டும்...?

பகவான் சுட்டிக் காண்பிக்கிற க்ஷணத்திலேயே தெரிந்து போய்விடும்... அப்படி அவர் சுட்டிக் காண்பிப்பவர் 'போய் விடுவார்' என்று உறுதியாகும். பகவானே அவர்களை முடிக்கிறான். நிமித்த மாத்திரம் முடிக்கிறான். நிமித்தமாக வைத்துக் கொண்டு, கையைக் காட்டியே முடிக்கிறான்! அதனால்தான் துரோணாச் சார்யாரிடம் பகவான் போனான். போய் அவரைப் பார்த்துக் கேட்டான்...

"துரோணாச்சார்யரே! உம்மை அழிக்க வேண்டு மானால் என்ன பண்ணுவது...?'' அதற்கு அவர் சொல்கிறார்...

"என் கையில் ஆயுதங்கள் இருக்கும் வரைக்கும் என்னை யாராலும் அழிக்க முடியாது" என்கிறார்.

"அப்படியா! ஓஹோ!" என்று தலையைச் சொறிந்து கொண்டு திரும்பி வருகிறான் பகவான்!

ஏன்?... பகவானுக்கு ஒன்றும் தெரியாதா? அவரைக் கேட்டுத்தான் தெரிந்து கொள்ள வேண்டுமா...? இருந்தாலும் அப்படி ஒரு நாடகம் ஆடுகிறான் பாருங்கள், பகவான்! அஞ்ஞானியாக வேஷம் போடுகிறான்! துரோணாச்சார்யருடைய நேர்மையைக் காட்ட வேண்டும் என்பதற்காகவும், அப்படி அவன் வேஷம் போடுகிறான். ஆயுதம் இருக்கிறவரை அவரை அழிக்க முடியாது.

மீண்டும் துரோணாச்சார்யாரிடம் கேட்கிறான் பகவான்... "ஆயுதங்களைஎப்போது நீ கீழே போடுவாய்...?"

அதற்கு அவர் சொல்கிறார் “என்னால் தாள முடியாத ரொம்பவும் மனத்தை அப்படியே உலுக்கிவிடக் கூடிய கஷ்டத்தைக் கேட்டால், அனுபவித்தால், ஆயுதங்களைக் கீழே போட்டு விடுவேன். அதுவரையில் போட மாட்டேன்.”

“ஓஹோ, அப்படியா!” என்று பகவான் நேரே அர்ஜுனனுடைய ரதத்துக்கு வரவில்லை... தர்மபுத்திரரின் ரதத்துக்குப் போனார். அங்கே போய்...” தர்ம நந்தனா! நீ ஒரு பொய் சொல்ல வேண்டும்” என்றார்.

அதற்கு தர்மபுத்திரர் சொல்கிறார்:

“என்னைப் போய் பொய் பேசும்படி சொல்கிறாயே அப்பா! நான் பொய் சொல்லலாமா...? நீ சொன்னால் அது பெருமை அடையும். பகவான் பொய் சொன்னால் அது தர்மமாகப் போய்விடும். ஆனால் நான் சொன்னால் தப்பு. நான் தர்மத்துக்கு விரோதமாகப் பொய் சொல்ல மாட்டேன்...” என்றார்.

இதிலே தர்மபுத்திரருடைய பெருமை தெரிகிறது. பகவானிடமே அவர் மறுக்கிறார். பொய் சொல்ல மாட்டேன் என்று மறுத்துப் பேசுகிறார்.

பகவான் விடுவானா!” அப்பா! நீ பொய் சொல்ல மாட்டாய் என்று தெரியும். இப்போது நான் ஒரு காரியம் பண்ணுகிறேன். நான் பண்ணுகிற காரியத்தைச் சொல்லுவாய் அல்லவா...?”

“சரி” என்றார் தர்மபுத்திரர்.

உடனே போய் ஒரு யானையைப் பிடித்துக் கொண்டு வந்தான் பகவான். அதற்கு நாமகரண உத்ஸவம் நடக்கிறது. குருக்ஷேத்ர பூமியிலே, அந்த யானைக்கு அச்வத்தாமா என்று பெயர் வைக்கப்படுகிறது. “இப்போது இந்த சமர் அரங்கிலே இதற்கு அச்வத்தாமா என்று பெயர்

வைக்கப்படும்" என்று பகவானே நாமகரணம் செய் கிறான்.

செய்துவிட்டு தர்மபுத்திரரைக் கேட்கிறான். "சரி, இப்போது இந்த அச்வத்தாமா என்கிற யானை இறந்து விட்டது என்று சொல்லுவாயா...?"

"அந்த மாதிரி மாண்டு போனால் சொல்லுவேன்..."

"மாண்டு போனால் என்ன சொல்லுவாய்?" என்று கேட்டான் பகவான்.

"குருக்ஷேத்திரம் என்கிற பூமியிலே, சமர் நடந்த போது, அச்வத்தாமா..." என்று நீண்ட நெடும் வாக்கிய மாக ஒப்பிக்க ஆரம்பித்தார் தர்மபுத்திரர்.

"இந்த மாதிரி இவ்வளவு பெரிய வாக்கியமா சொல்லுவார்கள்? உன்னை யார் இப்போது உபன்யாசம் பண்ணச் சொன்னது! சூட்சுமமாகச் சொல்ல வேண்டும் - நான் கற்றுக் கொடுக்கிறேன் பார்...

**"அச்வத்தாமா ஹத: குஞ்சர:"** என்று பகவானே வாக்கியம் அமைத்துக் கொடுத்தான்.

'அச்வத்தாமா என்கிற யானை விழுந்து மாண்டது' என்று பொருள்படச் சொன்னான்.

யுத்தத்திலே அந்த அச்வத்தாமா அடித்து வீழ்த்தப் படுகிறது. வீழ்த்தப்பட்டவுடனே தர்மபுத்திரருக்குக் கை காண்பிக்கிறான் பகவான்.

அப்போது பெருங் குரலில் தர்மபுத்திரர், **"அச்வத்தாமா ஹத: குஞ்சர:"** என்கிறார். அந்த க்ஷணத்திலே பகவான் என்ன பண்ணினான்...? துரோணர் காதில் இது நன்றாக விழவேண்டும் என்பதற்காக, சமர் அரங்கத்தையே நிசப்தமாக்கினான். அடுத்த க்ஷணமே சங்கத்தை எடுத்து 'பம்பம்பம்' என்று ஊத ஆரம்பித்தான்.

"ஹத:" என்று சொல்கிறவரை நிசப்தமாய் இருந்த அரங்கு, தர்மபுத்திரர் குஞ்சர: சப்தத்தைச் சொல்கிற போது அப்படியே ஒலிமயமாகிவிட்டது. "குஞ்சர:" சப்தம் காதில் விழாமல், துரோணாச்சார்யர், அச்வத்தாமா என்ற தமது மகன் மாண்டதாக எண்ணி, சோகம் தாளாது ஆயுதத்தைக் கீழே போட்டார்.

அர்ஜுனனின் ரதத்திலே சித்தமாக உட்கார்ந்திருக் கிறான் பரமாத்மா. துரோணாச்சார்யாரைக் கொல்வதற்கு அர்ஜுனனிடம் சமிக்ஞை செய்தான்.

**து**ரோணாச்சார்யரை யார் கொன்றார்கள் என்று கேட்டார், அர்ஜுனனா கொன்றான்? அந்த பகவான் இந்த மாதிரி ஒரு காரியம் பண்ணியிராவிட்டால் அவரை முடிக்க முடியுமா...? யாரால் முடியும்?

**பீ**ஷ்மாச்சார்யார் சிரஸில் கிரீடத்தை எடுத்துப் போட்டுக் கொண்டிருக்கிறார். கவசங்களெல்லாம் அணிந்திருக்கிறார்... முதல் பத்து நாள் யுத்தத்தை நடத்தியவர் அவர்தான். அப்படிப்பட்டவர் யுத்தத்துக்கு ஆயத்தமாக வந்த போது, துரியோதனன் அவரைக் கேட்டான், "உங்களிடத்தில் ஒன்று கேட்க வேண்டும்..."

"என்ன கேட்க வேண்டும்?"

"இப்போது என் பக்கத்திலே இருந்து பத்து நாள் சண்டை போடப் போகிறீர்கள். பஞ்ச பாண்டவர்களை நீங்கள் எத்தனை நாளில் கொல்வீர்...?"

அவர் பார்த்தார்... 'மகா பாபி! அவர்களை அழிக்க வேண்டும் என்று நினைக்கிறானே? அவ்வளவு கெட்ட எண்ணம் இவனுக்கு!'

இருந்தாலும் மறுபடியும் கேட்டார்...

"நீ கேட்ட கேள்வி என்ன? மறுபடியும் கேளு..."

எத்தனை நாளில் பாண்டவர்களை அழிப்பீர்?"

உடனே பீஷ்மர் சொன்னார்:

"அப்பா துரியோதனா! எனக்கு நாள் எதற்கடா? ஒரு நிமிஷத்துக்குள்ளே, ஒரே பாணத்துக்கு அத்தனை பேரையும் இலக்காக்குவேன். அத்தனை பேரையும் அழிப்பேன்..."

ஒரு எகிறு எகிறி, ஒரு குதி குதித்தான் துரியோதனன். அவர் பேசி முடிப்பதற்குள்ளாக குதித்துக் கொண்டேயிருக்கிறான்...

"ஆனால்..." என்று அவனை இடைமறித்தார் பீஷ்மாச்சார்யார்.

எகிறிக் குதித்தவனுக்குத் தயக்கம் வந்து விட்டது.

'என்ன சொல்லப் போகிறாரோ...?' என்று அவரைப் பார்த்தான்!

## 2

'ஆனால், என்று பேச்சை ஆரம்பித்தாலே அனர்த்தம்தான். அதுவும் பீஷ்மாச்சார்யார் வாயிலே யிருந்து அப்படி ஒரு சொல் வருகிறது என்றால்... கேட்டுக் கொண்டிருக்கும் துரியோதனனுக்குத் தயக்கம் வருகிறது. என்ன சொல்லப் போகிறாரோ என்று யோசனை வருகிறது.

"ஸர்வகாரணபூதனான பகவான் கிருஷ்ணன்– பரமாத்மா–அவர்கள் (பாண்டவர்கள்) பக்கத்தில் இருந்து உபகாரம் பண்ணாது போனால், பஞ்சபாண்டவர்களை ஒரே நொடியில் நாம் அழிக்க முடியும்" என்றார் பீஷ்மர்.

துரியோதனன் அவரைத் திரும்பிப் பார்க்காமலே புறப்பட்டுப் போய்விட்டான். பீஷ்மர் இனி மீதிப் பேரைப் பார்த்தால் என்ன, போனால் என்ன... கொன்றால் என்ன! ஒரு பிரயோஜனமுமில்லை என்று புறப்பட்டுப் போய் விட்டான்.

பஞ்ச பாண்டவர்களிடமிருந்து கிருஷ்ணனைப் பிரிக்க முடியுமா...!

**ஸர்வம் விது: கிருஷ்ண:** அந்த கிருஷ்ணனையே ஸர்வத்துக்கும் ஆச்ரயித்தார்கள் அவர்கள். அவர்கள் பக்கம் நின்றான் பகவான்.

மனு ஸ்ம்ருதி என்ன சொல்கிறது என்றால், ‘ஆததாயி’ என்று ஒருவன் அகப்பட்டால், விசாரிக்காமலே அவனைக் கொல்லலாம் என்கிறது.

விசாரணையே கிடையாது என்று சொல்லி விட்டது!

ஆததாயி என்றால் யார்...?

வீட்டிலே நெருப்பு வைக்கிறவன்; ஒருத்தரை விஷம் கொடுத்துக் கொல்கிறவன். கையிலே எப்போதும் ஆயுதம் தாங்கிக் கொண்டு பகைமை பாராட்டுகிறவன்; மற்றையோர் பொருளை அபகரிக்கிறவன், நில புலன்களை அபகரித்தல் போன்ற செயல்களில் ஈடுபடுகிறவன். இதில் ஏதேனும் ஒன்று பண்ணினாலே குற்றம். அவன் ஆததாயி ஆகிவிடுகிறான்.

ஒரு வீட்டுக்கு நெருப்பு வைக்கிறான் என்றால், எதற்காக வைக்கிறான் என்று கேள்வி உண்டா! ஒருவரை விஷம் கொடுத்துக் கொன்றால், எதற்குக் கொன்றாய்? என்று கேள்வியா கேட்டுக் கொண்டிருக்க முடியும்...?

பிறன் மனையாடல் என்கிற காரியம் ஒருத்தன் பண்ணலாமா! இவை எல்லாவற்றுக்கும் விசாரிக்காமலே கொல் என்கிறது மனுநீதி.

துரியோதனாதிகளோ இதிலே ஒரு பாதகம் மட்டும் பண்ணி நிறுத்தி விடவில்லை. மொத்தத்தையும் பண்ணி யிருக்கிறார்கள் அவர்கள்.

அரக்கு மாளிகை கட்டி, அதிலே தீயை வைத்தார்கள். பீமசேனனுக்கு விஷத்தைக் கொடுத் தார்கள். பாண்டவர்களின் பொருளையெல்லாம் அபகரித்தார்கள். சூதாட்டத்திலே சொத்துக்களை யெல்லாம் அபகரித்தார்கள். க்ஷேத்திரங்களை, நிலங்களை அபகரித்தார்கள். பத்னியையும் நடுசபையிலே வைத்து

மானபங்கம் பண்ணினார்கள். எதைத்தான் அவர்கள் பண்ணவில்லை?

அந்த ஆததாயிகளின் பக்கத்திலே இருந்ததால் தாமும் ஆததாயிதான் என்ற முடிவு பீஷ்மாச்சார்யாருக்கு.

அதர்மமாக ஒருவர் நடந்துகொள்ளும்போது, அவர்களைத் திருத்துவதற்காக எடுத்துச் சொல்ல வேண்டாமா? 'நீ பண்ணுவது ரொம்பத் தப்பு' என்று எடுத்துச் சொல்ல வேண்டும். தெரிந்தும் சொல்லாமல் இருப்பது ரொம்பத் தப்பு. சொல்லியும் அவர்கள் கேட்கவில்லையானால், அவர்களை விட்டுவிட்டு தூர ஓடிப் போய்விட வேண்டும். அவர்கள் பக்கமே இருந்தால் அது அனர்த்தம். தர்மத்தைச் சொல்லாமல் போனால் மகா பாவம்! தர்மத்தைச் சொல்வதற்கு நாம் யாரிடத்திலும் பயப்பட வேண்டியதேயில்லை.

விபீஷணன் பாருங்கள்... ராவணன் சபையிலே நின்று துல்லியமாகத் தர்மத்தைச் சொன்னான்.

ஆகவே தர்மத்தைச் சொல்ல யாரும் பயப்பட வேண்டியதில்லை. அதர்மத்தைச் சொல்லத்தான் பயப்பட வேண்டும்.

ஆகவேதான் துரியோதனன் பக்கத்திலிருந்தும், வாயை மூடிக் கொண்டிருந்த தம்மையே ஆததாயி என்று பழித்துக் கொள்கிறார் பீஷ்மர். அதற்கு மேலும் ஒன்று சொல்கிறார்...

"இந்த கோபஸ்த்ரீகள் பண்ணின உயர்ந்த விஷயம் போல் வேறு உண்டோ! அவர்களுடையது போன்ற பக்தி உலகிலே வேறு வருமோ!" என்று கேட்கிறார்.

நாராயண பட்டத்ரி சொல்கிறார்: "கோபிகாப்யோ நமோஸ்து".

'சாஸ்திரக் கூட்டங்களையெல்லாம் குப்பையிலே போடு' என்கிறார். உத்தமரான அவரே சொல்கிறார், தூக்கிப் போட்டுவிடு என்று...

சாஸ்திரங்களெல்லாம் எதற்கு...? இந்த மாதிரி பக்தி பார்த்ததுமில்லை; கேட்டதுமில்லை. "கோபிகா பக்தி அன்யத்ரசம்" - வேறெங்கும் அது போன்ற பக்தி பார்க்க முடியாது என்று பொருள். அப்படியொரு விசேஷமான பக்தி அது. பகவானையே இழுத்துவிட்டார்கள் அவர்கள்.

யதிராஜ சப்ததி என்று ஒரு ஸ்தோத்திரம். அதிலே சுவாமி தேசிகன் சொல்கிறார். அழகாகச் சொல்கிறார்.

"பிரும்மாவைப் போய்ச் சரணடைந்து அவரிடத்திலே பற்றலாம் என்று போனேன். பிரும்மா என்னடாவென்றால், பெரிய ஸ்த்ரீலோலனாக இருக்கிறார். வாக்கிலேயே சரஸ்வதியை வைத்துக் கொண்டிருக்கிறார்.

"அடுத்து கைலாசத்துக்குப் போனேன். அங்கே பரமசிவன் பாதி சரீரத்தையே ஒரு ஸ்த்ரீக்குக் கொடுத்து விட்டு அர்த்தநாரீஸ்வரனாய் இருந்து கொண்டிருக்கிறார்.

"சரி இனிமேல் எங்கே போவது... என்று யோசித்தபடி வைகுண்டம் போனேன். போய்ப் பார்த்தால், இவர்கள் இரண்டு பேருமே பரவாயில்லை போலிருக்கிறது... அது இன்னும் மோசம்! இவர்களாவது பத்னியோடு இருக்கிறார்கள். அங்கே, ஆளையே காணவில்லை. வைகுண்டத்திலே எங்கே காணோமே என்று தேடிவிட்டுப் போய்ப்பார்த்தால், கோபி ஜனஸ்ய வசமாய் இருக்கிறார். மும்மூர்த்திகளே இந்தக் கதியிலே இருந்தால் நான் என்ன பண்ணுவது...? யதிராஜனாகிய உன் திருவடியைப் பற்றுவதுதான் வழி. அதைப் பற்றியவர்களுக்குக் காமம் உள்ளே புகுமா? காமத்தைப்



போக்கக்கூடிய உயர்ந்த திருவடியல்லவா அது!" என்று கேட்கிறார் சுவாமி தேசிகன்.

இதிலே தத்துவம் என்னவென்றால், கோபிகா பக்திக்குப் பரமாத்மா ஓடி வந்து அங்கே நின்று, அவர்களுக்கு விசேஷ அனுபவத்தைக் கொடுத்தான். ஆகையினாலே, ஆய்ச்சியரோடு கலந்து, இடக்கை வலக்கை தெரியாது ஆடிப் பாடி மகிழ்ந்தானே பரமாத்மா...

அந்த வழியைத்தான் ஆண்டாள் பின்பற்றினாள்.

'கோபிகாப்யோ நமோஸ்து' என்று சொன்னது இதனால்தான். அவன் பண்ணியதையே பண்ணி, இந்த

கோபஸ்திரீகள் எல்லோரும் மோக்ஷத்தை அடைந்திருக்கிறார்கள்.

ஒருத்தி (ஒரு கோபஸ்த்ரீ) என்ன பண்ணினாளாம்... பீஷ்மாச்சாரியார் சொல்கிறார்:

ஒருத்தி ஜடை பின்னலைப் பிடித்து ஓர் இழு இழுத்தாளாம்! நீதான் காளிய ஸர்ப்பம் - நான் உன்மேல் ஏறி நாட்டியம் ஆடுவேன்... என்று அவள் தலைமேல் ஏறி நின்று நாட்டியம் ஆட ஆரம்பித்தாளாம்! இன்னொரு கோபஸ்த்ரீ, வேறொருத்தியைக் கீழே தள்ளி, 'நீதான் பூதனை! உன்னை நான் சம்ஹாரம் பண்ணுகிறேன்' என்று சொல்லி அவள் மேல் ஏறி உட்கார்ந்து கொண்டு விட்டாளாம்...

இப்படியெல்லாம், கிருஷ்ணன் பண்ணியதையே பண்ணி, மோக்ஷத்தை அடைந்துவிட்டார்களாம் கோபிகைகள். ஆகையினாலே அனுகாரத்துக்குப் பயன் இருக்கிறது - ஆண்டாள் இதேபோல்தான் அனுகரித்தாள். இதைத்தான் ஆசார்யர்கள் சொல்கிறார்கள். அந்த தனுர்மாஸ பூஜையை அவள் அனுகாரம் செய்தாள் - அவர்கள் (கோபிகைகள்) பண்ணியதை இங்கே நடத்திக் காட்டினால், பகவான் அதற்கு விசேஷ பலனைக் கொடுக்கிறான்.

அப்பேர்ப்பட்ட உயர்ந்த கதியை அந்த கோபிகைகள் எல்லோரும் அடைந்தார்கள். ஆகையினாலேதான் பீஷ்மாச்சார்யர் கோபிகைகளை உதாரணம் சொல்லிப் பேசுகிறார்.

குருக்ஷேத்திர பூமி இருக்கிறது பாருங்கள்... அது எல்லா க்ஷேத்திரங்களைக் காட்டிலும் உயர்ந்தது.

பிரயாகை என்று ஒரு க்ஷேத்திரம்; காசி என்று ஒரு க்ஷேத்திரம் இருக்கிறது. காசி, பிரயாகை முதலான

க்ஷேத்திரங்களைக் காட்டிலும் குருக்ஷேத்திரத்துக்கு ஓர் ஏற்றம்.

காசியிலே ஸ்தலத்தில் மரித்தால்தான் கௌரவம். ஜலத்திலே மரித்தால் முக்தி கிடையாது. அந்த ஸ்தலத்திலே மரணம் அடைந்தால், அந்த காத்யாயனி காமுகன் பரமசிவன் என்ன பண்ணுகிறார்... அந்த விச்வேச்வரன், அந்த ஜீவனுடைய வலது செவியிலே வந்து ராம தாரக மந்திரத்தை இன்றைக்கும் சொல்லிக் கொண்டிருக்கிறார். எவ்வளவு ஆதரவு பாருங்கள்! நான்கு தடவை இந்தத் தாரக மந்திரத்தை அவர் சொல்லுவதாக ஆதிசங்கரர் சொல்கிறார்.

ஆகவே, காசியிலே மரணமானால் முக்தி.

பிரயாகை இருக்கிறது பாருங்கள். அதிலே ஸ்தலத்திலும் முக்தி கிடைக்கும், தீர்த்தத்திலேயும் முக்தி கிடைக்கும்.

குருக்ஷேத்திரம் இருக்கிறது பாருங்கள். ஸ்தலம், தீர்த்தம், அந்தரிக்ஷம் – மேலே ஆகாசம் என்று மூன்றிலும் முக்தியைக் கொடுக்கும்! ஆகாசமா?... அப்படியென்றால்...?

பீமசேனன் யுத்தம் பண்ணுகிறபோது. ஒரு யானையின் காலைப் பிடித்து அப்படியே தூக்கி, சுழற்றி மேலே போடுகிறான். இன்றைக்குக் கதை சொல்கிற வரைக்கும் அது திரும்பி வந்து விழவில்லை! தூக்கிப் போட்டது போய்க் கொண்டேயிருக்கிறது.

மேலே போனது புவி ஆகர்ஷண சக்திக்கு உள்ளே வந்தால், வந்து விழுந்து விடும். இது ஆகர்ஷண சக்தியைத் தாண்டிப் போய்விட்டது! அந்த வேகத்தில் போயிற்று என்றால் அதற்குப் பிராணன் இருக்குமோ...? அது எங்கே போயிற்று என்று கேட்டால், நேரே மோக்ஷத்துக்கே போய்

விட்டது. ஆகவே, குருக்ஷேத்திரத்தில் மரித்தால் அந்தரிக்ஷத்திலேயும் மோக்ஷம்! தர்ம க்ஷேத்திரம் என்று அதற்குப் பெயர். தர்மம் கொஞ்சமும் குறையவிடாமல் காக்கிற க்ஷேத்திரம்.. காசி, பிரயாகை, இவற்றையெல்லாம் விட உயர்ந்த க்ஷேத்திரம் குரு க்ஷேத்திரம்.

வாஜபேய மகா யக்ஞத்தில் எழுந்தருள்கிற மாதிரி எம்பெருமான் அந்தக் குருக்ஷேத்திரத்தில் குதிரைகளை ஓட்டிக் கொண்டு வருகிறார். அர்ஜுனன் அம்புகளால் அடிக்கிறான்... அடிக்கிறபோது எல்லோரும் விழுகிறார் கள். பகவானைப் பார்த்துக் கொண்டே விழுகிறார்கள் அவர்கள். மோக்ஷம் உடனேயே கிடைத்து விடுகிறது.

அப்போதுதான் பீஷ்மாச்சார்யார் சொல்கிறார். “அந்திமக் காலத்திலே, யாரைப் பார்க்க வேண்டுமோ அப்படிப்பட்டவனைப் பார்த்து, அவர்கள் எல்லோரும் மோக்ஷம் அடைந்துவிட்டார்களே! சுவச்சந்த ம்ருத்யுவாக இருப்பதனாலேதானே நான் இன்னமும் இருந்துகொண்டு கஷ்டப்படுகிறேன்...” என்று வருத்தப்படுகிறார்.

# 3

உயர்ந்த ராஜசூய யக்ஞம் நடக்கிறபோது சிசுபாலன் பகவானிடத்திலே கண்டவாறு ஏச ஆரம்பிக்கிறான். அக்ர பூஜை கூடாது என்று தடுக்கிறான்.

சிசுபாலன் பிறக்கிறபோது நான்கு கைகள், மூன்று கண்கள் அவனுக்கு... கழுதைபோல் கத்திக் கொண்டு பிறக்கிறான்.

அவன் அம்மாவுக்கு சுதஸ்ரவை என்று பெயர். அப்பா, தமகோஷன். இரண்டு பேரும் இப்படி விகாரமாக ஒரு குழந்தை பிறந்துவிட்டதே என்று வியசனப் பட்டார்கள். 'இப்படி ஒரு குழந்தை ஊரிலே இருந்தால் ஊரே அழிந்து போய்விடும்; இழுத்துக் கொண்டுபோய் மதில் சுவருக்கு அப்பால் விட்டுவிடுங்கள்' என்றனர். குழந்தையைத் தூக்கியபோது அசரீரி வாக்கு கேட்டது. "இந்தக் குழந்தையை யார் கையிலே எடுக்கிறபோது அதனுடைய அதிகப்படியான கைகளும் நேத்திரமும் மறைந்து போகிறதோ, யார் தூக்குகிறபோது இது ஸாதாரண சிசுவாக மாறுகிறதோ, அந்த மனிதரின் கையாலே தான் இதற்கு மரணம்; ம்ருத்யு அந்த மனிதர்தான் என்று தெரிந்து கொள்ளுங்கள்..." என்றது அசரீரி.

யாரெல்லாம் 'குழந்தை பிறந்ததா?' என்று விசாரித்துக் கொண்டு வீட்டுக்கு வந்தார்களோ, அவர்கள்

அத்தனை பேரிடத்திலும் குழந்தையைக் கொடுத்துப் பார்த்தாள் சுதஸ்ரவை. பகவான் கிருஷ்ணன் - வாசுதேவன், ஒருநாள் தேடிக் கொண்டு வந்தான். அவன் கையிலே கொடுத்துவிட்டாள் குழந்தையை... கொடுத்த வுடனே அதனுடைய அதிகப்படியான அங்கங்களெல் லாம் போய் விட்டன. சின்ன, அழகான குழந்தையாக அது மாறி விட்டது.

உடனே சுதஸ்ரவை கேட்கிறாள்... "கிருஷ்ணா! உன்னால்தான் என் குழந்தைக்கு ம்ருத்யு என்று ஏற்பட்டுப் போய்விட்டது. என் குழந்தையை நீதான் ரக்ஷிக்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டாள்.

அதற்கு பகவான் சொல்கிறான்... "அவன் செய்கிற நூறு தப்பு வரையில் பொறுப்பேன். அதற்கு மேல் பொறுக்க மாட்டேன்..." என்கிறான்.

அவ்வளவு அவகாசம் அவன் கொடுத்தானே என்று சுதஸ்ரவைக்கு சந்தோஷம்.

ஆனால், ராஜசூய யாகம் நடக்கிற நேரத்தில் சிசுபாலன் பகவானை ஏச ஆரம்பித்துவிட்டான்... பகவான் அதை - ஏச்சுக்களை, **"ஏகாசமே, திஸ்ரஸ்சமே"** என்று எண்ணுகிறான். 'ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு என்று எண்ணினால் அவன் வைகிற வேகத்துக்கு வெகு சீக்கிரம் நூறு முடிந்து போகும். ஆகவே அப்படி எண்ணமாட்டான் பகவான். நடுவிலே எண்ணாமல் விட்டுவிடுவான். அப்புறம் மறுபடியும் 'ஐந்து, ஆறு, ஏழு, எட்டு...' என்று வசவுகளை எண்ணுவான். நூறு வசவு மொழிகள் ஆன பிறகு அவனை முடிக்கலாம் என்று பகவான் திருவுள்ளம். அவனோ வைதுகொண்டே யிருக்கிறான். பகவான் எண்ணுவது மட்டும் சரியா யில்லையே!

'ஏன் எண்ணுவதில்லை நடுவிலே?' என்று கேட்டால் அதற்கு அழகாக பதில் சொல்கிறார் இங்கே...

ஏற்கெனவே வைத வசவு வருமானால் அதை எண்ண மாட்டான் பகவான்! புதிது புதிதாக என்ன வருகிறதோ, அதை மட்டும் எண்ணுவானாம்...! சிசுபாலன் இப்படிப் புதிது புதிதாகச் சொன்ன நூறு வசவுகளை மட்டும் எண்ணி, நூறு ஆன பிற்பாடு அவனை முடித்தான் பகவான்.

ஆகையினாலே, அக்ர பூஜை நடத்தக்கூடாது என்று சொன்ன சிசுபாலன் மாண்டு ஒழிந்தான். தன் அவதாரத்துடைய பிரயோஜனத்தை முடித்துக் கொண்டான். கடைசிவரை அவன் பகவானை வைதவாறே இருந்தான்.

ஆனால் பீஷ்மாச்சார்யார் ஞானி. "பேத ஞானம் என்க்குப் போய்விட்டது. ஸர்வாந்தர்யாமியாக பகவான் இருக்கிறான் என்பதை இன்று உணர்ந்தேன்" என்கிறார். பூரண பிரக்ஞையோடு இருக்கிறார். கடைசிவரை அந்த பூரணப் பிரக்ஞையும் ஞானமும் இருக்கின்றன.

சூரியன் மேலே பிரகாசிக்கிறான். இங்கே ஆயிரம் கலசங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. ஆயிரம் கலசங்களிலும் நீர் இருக்கிறது. சூரிய ரச்மி ஆயிரம் கலசங்களிலும் பட்டு, அவற்றில் சூரியன் தென்படுகிறான். அங்கே, ஆகாசத்திலே பிரகாசிக்கிற அதே சூரியன்தான். அதே மாதிரிதான்... எல்லா ஜீவன்களுக்குள்ளேயும் அந்தர்யாமியாக பகவான் உட்கார்ந்திருக்கிறான் – சர்வாந்தர்யாமியாக இருக்கிறான்.

உயர்ந்த ஆத்மாத்வைதம் என்கிற நிலை உண்டு. விசிஷ்டாத்வைதத்திலே ஆத்மாத்வைதம் என்று ஒரு விஷயம். இது என்னவென்றால், ஓர் ஆத்மாவைப்

பார்த்தால், இன்னொரு ஆத்மாவைப் பார்க்க வேண்டாம். ஒரே மாதிரி இருக்கும். அத்தனை ஆத்மாவுக்கும் அந்தர்யாமியாக இருக்கிற பகவானும் அததற்குள்ளே ஒரே மாதிரி இருக்கிறான்.

ஆகையினால் நாம் ஆத்மாத்வைதத்தை உணருதல் முக்கியம்.

"அப்படிப்பட்ட உயர்ந்த ரீதியிலே பகவானைப் பார்க்கிறேன்" என்று அந்த கிருஷ்ணனையே மனசிலே நினைத்துக் கொண்டு, அவனையே நேரே பார்த்துக் கொண்டு, பீஷ்மாச்சார்யர் தன் ஆத்மாவை கிருஷ்ணனுடைய திருவடியிலே சேர்த்தார்.

பட்சி - பறவைகளெல்லாம் இருக்கிறது பாருங்கள்... அவையெல்லாம் மத்தியான வேளையிலே இரை தேடுகிற பல இடங்களுக்குப் போய்விடுகின்றன. சாயங்காலம் இருட்டு வருகிறபோது, தங்கள் கூட்டிலே வந்து உறைகின்றன. அந்த மாதிரி பீஷ்மாச்சார்யருடைய ஆத்மா, எம்பெருமானுடைய திருவடி என்கிற கூட்டிலே போய்ச் சேர்ந்தது. அந்த மாதிரி, அந்த எம்பெருமானிடத்திலே நேரே ஆத்ம சமர்ப்பணம் பண்ணின உத்தம அதிகாரி அவர்.

வைகுண்டத்திலே கிடைக்கக் கூடிய போகம்; மோக்ஷத்திலே கிடைக்கக் கூடிய நிலை - சரீரத்தை இழந்து, உத்தம சரீரத்தால் அப்ராக்ருதமான திவ்ய மங்கள விக்ரகத்தோடு அனுபவிக்கக் கூடிய போகம்; அப்படிப்பட்ட போகத்தை இந்த உலகத்திலேயே அனுபவித்தார் பீஷ்மாச்சார்யார்.

அதனால்தான் இஞ்சிமேட்டு அழகிய சிங்கர் நித்யானுஷ்டானமாகவே பீஷ்ம ஸ்துதியைச் சொன்னார்.

இது அந்திமக் காலத்தில் மட்டும் சொல்கிற ஸ்லோகமல்ல. நித்யம் சொல்ல வேண்டும்; பீஷ்ம ஸ்துதியை.

அப்படிப்பட்ட பீஷ்மர், பகவானால் அனுக்ரஹிக்கப்பட்டவர், விஷ்ணு சஹஸ்ர நாமத்துக்குக் கர்த்தாவாக இருக்கிறார். அவர்தான் வக்தா; சொன்னவர் அவர்; சொல்லப்பட்ட விஷயமோ பரமாத்மா! கேட்டதோ... கிருஷ்ணனே அல்லவா கேட்கிறான்! ஆக, மூன்று விசேஷங்களும் சஹஸ்ரநாமத்துக்கு அமைந்திருக்கின்றன.

அப்படிப்பட்ட வக்தா, மோக்ஷத்தை அடைந்த தினம் பீஷ்மாஷ்டமி. அந்த திவ்யமான நாளிலே, பித்ரு தேவதைகளை உத்தேசித்து நாம் காரியங்கள் பண்ணினால் ரொம்ப விசேஷம்.

**வ**ருஷத்தில் தொண்ணூற்றாறு சிரார்த்தங்கள் பண்ண வேண்டும் என்று சாஸ்திரம் சொல்கிறது! தொண்ணூற்றாறு! சில நேரங்களில் சிரார்த்த திதியே இருக்காது. ஆனால், ஒரு மகான் வருவார். பெரிய மகான்... அவர் வந்துவிட்டால், அன்றைக்குச் சிரார்த்தம் பண்ண வேண்டும். ஏனென்றால், அந்த மாதிரி உத்தமர் மறுபடி கிடைக்க மாட்டார்.

அவர் வந்த தினத்தில் அவரை வரித்து, பித்ரு தேவதைகளை ஆவாஹனம் பண்ணி, அவருக்கு போஜன மிட்டு, பித்ரு சிரார்த்தம் பண்ண வேண்டும்.

அது தவிர, சாஸ்திரம் விதிக்கிற தினங்களிலே செய்ய வேண்டிய சிரார்த்தங்கள் தொண்ணூற்றாறு உண்டு.

பகவானே கேட்கிறான்... பித்ரு கீதம் என்பது விஷ்ணு புராணத்திலே ரொம்ப அழகான கீதம்: வாரிக் கொடுத்து, விதவிதமான போஜனமும் தயார் பண்ணி

பித்ரு தேவதைகளை ஆராதனம் பண்ணக் கூடிய ஒருவன் உதிக்க மாட்டானா...? அதற்குச் சக்தி இல்லை என்றால், வஸ்திரம், மணி எல்லாம் கொடுக்க வேண்டாம்... தக்ஷிணை மட்டும் கொடுத்து போஜனம் இட்டு, 'இன்றைய தினம் பித்ரு தினம்... பித்ரு தேவதைகள் திருப்தி அடையட்டும்' என்று சிரார்த்தம் பண்ணுகிற ஒருவன் உதிக்க மாட்டானா...?

அதற்கும் சக்தி இல்லை என்றால், கொஞ்சம் அரிசி, கொஞ்சம் வெல்லம் - ஒரே ஒரு வாழைக்காய், கொஞ்சம் பயத்தம் பருப்பு... இவற்றை வைத்து தக்ஷிணை வைத்து, ஒரு பிரும்ம வித்தை வரவழைத்து, 'இன்றைய தினம் பித்ருக்கள் தினம் - அதனாலே இன்றைக்குக் கொடுத்து திருப்தி அடைகிறேன்' என்று கொடுக்கக்கூடிய ஒருவன் உதிக்கமாட்டானா? அதற்கும் சக்தி இல்லை என்றால், ஒரு அரைப்படி எள்ளை வாங்கி, 'இன்றைய தினம் பித்ரு தினம், இவருக்குப் பண்ணுகிறேன்; அதனால் பித்ரு தேவதைகள் சந்தோஷம் அடையட்டும்' என்று சொல்லக் கூடிய ஒருவன் உதிக்க மாட்டானா? அதற்கும் சக்தி இல்லை என்றால், அந்த தில தானத்துக்குக் கூட வழியில்லை என்றால், ஒரு பிடி எள்ளை எடுத்து, இதனாலேயே பித்ரு தேவதைகள் திருப்தி அடையட்டும் என்று கொடுக்கும் ஒருவன் உதிக்கமாட்டானா? அதற்கும் சக்தி இல்லை என்றால், இந்த கட்டை விரலை ஜலத்தில் தோய்த்து, ஈரமான விரலை எள்ளின்மீது தோய்த்து, அதிலே பத்தோ பதினைந்தோ எள் ஒட்டிக் கொள்கிறது பாருங்கள்... அப்படி ஒட்டிக் கொண்ட எள்ளை ஜலத்திலே சேர்த்து, 'இன்றைய தினம் பித்ரு தினம்; வேறு எந்த வகையிலும் பித்ருக்களை ஆராதிக்கிற வகையற்றவன் நான்... இதோ எள்ளையும் தீர்த்தத்தையும் கட்டை விரல் நுனியினாலே திருப்பி விடுகிறேன்... இதனால் பித்ரு

தேவதைகள் திருப்தி அடையட்டும்' என்று சொல்லக் கூடிய ஒருவன் உதிக்கமாட்டானா...?

அதற்கும் சக்தியில்லை என்றால் ஊரைவிட்டு வெளியிலே போ... அரிவாளை எடுத்துக் கொண்டு போய் நல்ல புல் இருக்கிற இடத்திலிருந்து புல்லை அறுத்துக் கொண்டு வந்து பசுமாட்டுக்குப் போட்டு, அந்தப் பசு சாப்பிட வேண்டும். வேறு எதற்கும் சக்தி அற்றவன், 'இந்தப் புல்லை பசுவுக்குப் போட்டிருக்கிறேன். பசு திருப்தியாகச் சாப்பிடுகிறது. இந்த திருப்தி என் பித்ரு தேவதைகளுக்கு ஏற்படட்டும்' என்று சொல்கிறான்... இப்படிச் சொல்கிற ஒருவன் இருக்கமாட்டானா...? என்று பித்ரு கீதம் கேட்கிறது.

எவ்வளவு தூரத்துக்கு அது நமக்காக எளிமைப் படுத்தித் தருகிறது பாருங்கள்...?

# 4

பித்ரு காரியம் என்பது வீணான காரியம் என்று நினைக்கலாமா...? அதை சாஸ்திரம் எவ்வளவு தூரத்துக்கு எளிமைப் படுத்தித் தருகிறது என்பதைப் பார்த்தோம். நம் சந்ததிகளெல்லாம் பிற்காலத்தில் நல்ல முறையிலே வளர வேண்டுமானால், இந்த பித்ரு தேவதைகளின் அனுக்ரஹம் வேண்டும். ஆகவேதான் ஓஹோ என்று இல்லா விட்டாலும், கிரமமான முறையிலே இந்த பித்ரு தேவதைளை நாம் நடத்த வேண்டும்.

மேலும், இந்தப் பித்ரு தேவதாராதனம் மூலம் ஆராதிக்கப்படக்கூடியவன் யார் என்று கேட்டால், பகவான் நாராயணன் தான் என்று சொல்லப்படுவதனாலே, நாம் பித்ரு காரியங்களை பக்தி சிரத்தையோடு செய்தல் வேண்டும்.

ராமாயணத்திலே ஜாபாலி என்பவர் அயோத்யா காண்டத்திலே வருகிறார்... நிரீச்வர வாதம் பண்ணுகிறார்: "அப்பாவாவது, பிள்ளையாவது! யார் அப்பா? யார் பிள்ளை...? இங்கே வைக்கிற பிண்டம் அங்கே எப்படிப் போகும்?" என்று கேட்டார். ஸ்ரீ ராமனையே பார்த்துக் கேட்டார் அவர்!

எள்ளையும் தீர்த்தத்தையும் கட்டை விரலினால் விட்டால், அது எங்கே போகிறது என்பது இப்போது கேள்வி...

இங்கேயிருந்து ஒருத்தர் மூட்டை கட்டிக் கொண்டு கிளம்புகிறார். பிள்ளையிடமும் மருமகளிடமும் சொல்லி விட்டுப் புறப்படுகிறார். விமானத்தில் இரவு பதினொரு மணிக்குப் போய் டெல்லியில் சேர்ந்து விட்டார். சேர்ந்த பிற்பாடு, அங்கேயிருந்து ஃபோன் பண்ணுகிறார்.

'சௌக்கியமாக வந்து சேர்ந்து விட்டேன்' என்கிறார்.

மறுநாள் அதிகாலை, பிள்ளை சாப்பிட உட்கார்ந்தார். எப்போதும் அப்பா பக்கத்திலே உட்கார்ந்து சாப்பிடுகிற வழக்கம். இவர் என்ன பண்ணினார்... பக்கத்திலேயே ஓர் இலையைப் போட்டார். எல்லா பதார்த்தங்களையும் அதிலே வைத்துப் புரோக்ஷணம் பண்ணினார்...

"ராஜதானியிலே இருக்கிற எங்கள் அப்பாவை உத்தேசித்து, இது மொத்தத்தையும் இங்கே சமர்ப்பிக்கிறேன். இது மொத்தம் டெல்லியிலே போய், அங்கே பூரணமான ஆனந்தத்தை அவருக்குக் கொடுக்கட்டும்..." என்றார். உடனே அது மொத்தம் டெல்லிக்குப் போய் விடுமா...?

பூலோகத்தில், இரண்டாயிரம் கிலோ மீட்டருக்கு அப்பால் உள்ள இடத்துக்கு நம்மாலே அனுப்ப முடிய வில்லை... அவ்வளவு ஏன், பக்கத்து வீதிக்கு அனுப்ப முடியுமா?

- இந்த மாதிரியெல்லாம் சாஸ்திரமே அழகாக வகை வகையாகக் கேட்கிறது. ஜாபாலி என்கிற பாத்திரம் மூலம் ராமாயணத்தில் கேட்கிறது.

இதற்குப் பதில் என்ன...?

நமக்கு ஒரு விஷயத்தில் ஞானம் இல்லை என்றால், அது இல்லை என்று சொல்லிவிட முடியுமா? நமக்கு

ஞானமில்லாது போனால் என்ன, இன்னொருத்தருக்கு அந்த ஞானம் இருக்கிறதே!

ஆகவே, தெரியாத ஒன்றை இல்லை என்று சொல்கிற அதிகாரம் யாருக்கும் கிடையாது.

நாம் மனிதர்களாகப் பிறந்ததாலேயே எல்லா சக்தியும் நமக்கு வந்து விடுமா...?

சிறுவிரல்கள் தடவிப் பரிமாறச்
செங்கண் கோடச் செய்ய வாய் கொப்பளிப்பக்
குறுவெயர்ப் புருவம் குழலியப்பக்
கோவிந்தன் குழல்கொடு ஊதின போது
பறவையின் கணங்கள் கூடு துறந்து
வந்து சூழ்ந்து படுகாடு கிடப்பக்
கறவையின் கணங்கள் கால் பரப்பிட்டுக்
கவிழ்ந்து இறங்கிச் செவி ஆட்டகில்லாவே.

- பகவான் வேணுகானம் பண்ணுகிறான். அந்த சமயத்திலே பக்ஷி கணங்களெல்லாம் அப்படியே உபன்யாஸத்திலே வந்து உட்காருகிற மாதிரி எதிரே வந்து உட்கார்ந்து விடுமாம்; வேணுகானத்தைக் கேட்குமாம். மாடுகளெல்லாம் இருக்கிறது பாருங்கள் - பசுமாடுகள்... எதிரே படுத்துக்கொண்டு பகவானுக்கு எதிரில் ஒரு காலை நீட்டிக் கொண்டு, செவியாட்டாமல் அமைதியாய் இருக்கின்றன.

பசுக்கள் எப்போதும் காதை ஆட்டிக் கொண்டே இருக்கும். ஆனால் பகவான் வேணுகானம் பண்ணுகிற போது, அப்படியே காதை ஆட்டாமல் வைத்துக் கொண்டிருக்குமாம்... அந்த க்ஷணம் போய் விடுமோ அந்த ரஸம் என்று அப்படியே வைத்துக் கொண்டிருக்குமாம்.

காதை ஆட்டுவது என்பது பசுவுக்கு இயற்கையாக அமைந்திருக்கிறது. பசுவைப் போல நம்மால் காதை



ஆட்ட முடியுமா...? நம்மைக் காட்டிலும் பசு மட்டம் தானே! ஆனால், நாம் காதை ஆட்ட வேண்டுமானால், இரண்டு கைகளையும் இப்படிப் பிடித்துக்கொள்ள வேண்டும்; பிடித்துக்கொண்டு, கைகளால்தான் காதை ஆட்ட முடியும்!

கொஞ்சம் நாள் யோக சாஸ்திரத்திலே கை தேர்ந்தால், ஒரு பதினைந்து வருஷம் சிரமப்பட்டால், அந்த நரம்பை மாத்திரம் அசைக்க முடியுமேயொழிய, பசு காதை ஆட்டுகிற மாதிரி நம்மால் ஆட்ட முடியாது!

காதை ஆட்டுவதற்காகவாவது பிரயத்தனப் படலாம்; ஆனால், இன்னொன்றை நம்மால் செய்ய முடியவே முடியாது! பசு இருக்கிறதே... அது தவிடைச்

சாப்பிடுகிறது; வைக்கோலைச் சாப்பிடுகிறது; புண்ணாக்கு சாப்பிடுகிறது; ... இதையெல்லாம் சாப்பிட்டுவிட்டு, சர்வோப்ய ஜீவமான க்ஷீரம் - பாலைக் கொடுக்கிறது. பசு சாப்பிடுவது மொத்தத்தையும் நாம் சாப்பிட்டால், பசுவினிடத்திலிருந்து கிடைக்கக் கூடிய பால் நம்மிடத்தில் கிடைக்குமா...! அதற்கு அதிகாரி பசுதான்! பசுதான் கொடுக்க முடியும்!

'சதமானம் பவதி' என்று அக்ஷதை போட்டார் ஒருத்தர். அவர்தான் போட வேண்டுமோ? நாமே நமக்குப் போட்டுக் கொள்ளக்கூடாதா என்று கேட்பது போல் தான் இது! நாமே நமக்குப் புண்ணாக்கு போட்டுக் கொண்டு பால் வழங்க முடியுமா! அதே மாதிரிதான், வேதாந்தத்தை நன்கு உணர்ந்தவர்கள்தான் இன்னொருத் தரை ஆசீர்வாதம் பண்ண முடியும். - அவருக்குத்தான் அருகதை உண்டு.

எல்லாவற்றுக்கும் எல்லாரும் அதிகாரி ஆகிவிட முடியாது.

இதைத்தான் குலார்ணவம் என்கிற கிரந்தத்திலே ஈசுவரனே சொல்கிறார்! சுவாமி தேசிகன் எடுத்துக் காண்பிக்கிறார் இதை... இப்படிப் பல விஷயங்கள் சாஸ்திரத்தில் உண்டு.

ஸ்பரிச தீக்ஷா என்பது பறவைகளுக்கு உரியது. நல்ல காற்று அடிக்கிறது... மழை பெய்கிறது. தாய்ப் பறவை யினாலே வெளியிலே போக முடியவில்லை. குஞ்சுகளெல் லாம் கத்துகிறது. தாய்ப் பறவை என்ன பண்ணுகிறது...? குஞ்சுகளையெல்லாம் இறக்கையினாலே சேர்த்து அணைத்துக் கொள்கிறது. அணைத்துக் கொண்ட உடனேயே, குஞ்சுகளுக்கெல்லாம் பசி போய் விடுகிறது. ஸ்பரிச தீக்ஷா என்பது இதுதான். இந்த மாதிரி நம் கிருஹத்திலே குழந்தை அழுததானால், அதைக் கட்டி

அணைத்துக் கொண்டால், அழுகை ஜாஸ்தியாகிவிடும்! நமக்குக் கொடுக்கவில்லையே அந்த தீக்ஷையை.

அடுத்து த்ருக் தீக்ஷா... ஜலத்திலே இருந்து வெளியிலே எடுத்துப் போட்டு விட்டோமானால் மீன் துடிதுடித்து மாண்டு விடுகிறது... அந்த மாதிரி அல்ப பிராணி அது. ஆனால், மீனுக்கு இருக்கிற சக்தி நமக்கு இருக்கிறதா...? தாய் மீன் இப்படி வரும், சேய் மீன் அப்படி வரும்... இரண்டுக்கும் இடையிலே இடைவெளி இருக்கும். இரண்டும் ஒன்றை ஒன்று பார்க்கும்... பார்வையினாலேயே பசியைப் போக்கி விடும் மீன் ஜாதி! அந்த மாதிரி சக்தி நமக்கு இருக்கிறதா...?

ஆழ்வார்பேட்டையில் ஓர் ஆமை குட்டி போடுகிறது. குட்டி ஆமையைக் கொண்டு போய் அடியேன் என்னுடைய க்ருஹத்திலே கிணற்றிலே போட்டு விட்டேன். தாய் ஆமை இங்கே இருக்கிறது; குட்டி ஆமை அங்கே இருக்கிறது... தாய் ஆமை சுற்றிச் சுற்றிப் பார்க்கிறது... குட்டியைக் காணோம். உடனே அது கண்ணை மூடிக்கொள்கிறது. மூடிக் கொண்டு, தன் குட்டி எங்கு இருந்தாலும் அதற்குப் பசி நீங்கட்டும் என்று ஸ்மரண மாத்திரத்திலேயே பசியைப் போக்குகிறது. ஆமைக்குப் பகவான் இப்படியொரு சக்தியைக் கொடுத்திருக்கிறான். நம்மாலே முடியுமா?

ஆமை, பறவை, மீன்... இவையெல்லாம் நம்மைக் காட்டிலும் மட்டமானவை. மனிதனுக்கு அதீதமான சக்தியை பகவான் கொடுத்தாலும் இவையெல்லாம் இல்லையே!

ஆமை ஸ்மரண மாத்திரத்தில் பசியைப் போக்குகிறதே, அந்த மாதிரி நாமும் பக்தி சிரத்தையினாலே இங்கே பிண்டப் பிரதானம் பண்ணினால், ஏன் பித்ரு

லோகத்துக்குப் போய் அது திருப்தி அளிக்காது. அவ்வாறு நிச்சயம் அளிக்கும் என்கிற பூரண விச்வாசம் நமக்கு வேண்டும்.

இன்னொரு கேள்வி இங்கே எழும்... தந்தை சரணாகதி பண்ணி, வைகுண்டத்துக்குப் போய்விட்டார். அங்கே நித்ய சூரிகள் கோஷ்டியிலே நின்று கொண்டிருக் கிறார். இங்கே இவர் - மகன் - சிரார்த்தம் பண்ணுகிறார். இந்த சிராத்தமானது, நித்ய சூரிகளிடையே இருக்கிற அப்பாவுக்குப் போய்ச் சேர்ந்து திருப்தி அளிப்பதாவது! வைகுண்டத்திலே கூட பிண்டம் இருந்தால்தான் திருப்தி அடைய முடியுமா? இப்படிச் சொன்னால், அது வைகுண்டத்திலே இருக்கிற ஆனந்தத்துக்கே இழுக்கு அல்லவா! ஆகையினாலே இன்னொன்றை அந்த வைகுண்டவாசம் எதிர்பார்க்கலாமா...?

இந்த இடத்திலே அவருக்கு - அப்பாவுக்கு ஆனந்தத்தை அளிக்கிறது என்றால் அப்படி அர்த்தம் கொள்ளலாகாது.

பித்ரு தேவதைகள் - ருத்ராள், வசுக்கள் ஆதித்யாள் என்று இருக்கிறார்கள். பித்ரு காரியத்தில், நாம் அப்பா - அம்மா பேரைச் சொல்லி, கோத்திரத்தைச் சொல்லி, அன்றைய தினம் பித்ரு காரியம் பண்ணினால், அந்தக் காரியத்தினால் திருப்தி அடைபவர்கள், நமக்கு அப்பா - அம்மாவாக இருந்துவிட்டுப் போனவர்கள் அல்ல... பித்ரு லோகத்தில் இருக்கக்கூடிய பித்ரு தேவதைகள் திருப்தி அடைகிறார்கள். அவர்களுடைய அனுக்கிரஹத்தினாலே நம்முடைய சந்ததிகள் மேன்மையுறுகிறார்களேயொழிய, வைகுண்டத்திலே இருக்கிற அப்பாவுக்குப் போய்ச் சேருவது இல்லை நமது பித்ரு காரியம்!

தாய் - தந்தைக்குக் கர்மா பண்ணின உடனேயே சம்பந்தம் அறுபட்டுப் போகிறது. பிதா - புத்ர சம்பந்தம் அப்புறம் ஏது...?

பிறகு அவன் செய்யும் பித்ரு காரியங்கள் எல்லாம் பித்ரு தேவதா ஆராதனம்.

பித்ரு தேவதைகளை ஆராதிக்க வேண்டும் என்பது தொண்ணூற்றாறு விதமான சாஸ்திரத்தில் சொல்லப் பட்டிருப்பதனாலே, பீஷ்மருடைய திவ்யமான தினத்தில் அதைச் செய்யச் சொல்லியிருக்கிறது. பீஷ்மாச்சார்யார் உயர்ந்த கதியை அடைந்தார். சில சமயம், பித்ரு தேவதைகள் உயர்ந்த கதியை அடையாமல், எங்கேயாவது அவஸ்தைப் பட்டுக் கொண்டிருப்பார்கள். ‘நம் வம்சத்தில் ஒருவன் உதித்து, பித்ரு காரியம் பண்ண மாட்டானா?’ என்று கஷ்டப்படுவார்கள்.

அப்படி ஒருவன் தோன்றி, பண்ணுகிற போது அவர்களும் உயர்ந்த கதியை அடைவார்கள்.

ஆகவேதான் பீஷ்மர் முக்தியான தினத்தில் பித்ரு காரியம் பண்ணவேண்டும் என்கிறது. பித்ருக்கள் பரம சந்தோஷம் அடைந்து அனுக்ரஹம் பண்ணுவார்கள். பீஷ்மருக்குக் கிடைத்த உயர்ந்த முக்தி அவர்களுக்கும் கிடைக்கும்.

# 5

பீஷ்மாச்சார்யாரின் வைபவத்தைச் சொன்னேன். நம் கிருஹத்திலே அவரைப் போன்ற வயோதிகர்கள் இருந்தால் அவர்களையெல்லாம் ஜாக்கிரதையாக ரக்ஷிக்க வேண்டும்.

அடியேன் பம்பாயில் உபன்யாஸத்துக்காகப் போயிருந்தபோது, அங்கே பஜனை மடத்திலே உபன் யாஸம் நடந்தது. எதிரே சங்கர மடத்திலே தங்கி யிருந்தேன்.

ஒரு நாள் ஸ்த்ரீகளெல்லாம் - இருபது பேர் கையிலே டேப் ரிக்கார்டருடன் வந்தார்கள். "ஒரு மணி நேரம் ஏதாவது பேசினால், இதிலே டேப் செய்து கொண்டு போகிறோம்" என்றார்கள்.

'என்ன பேசுவது' என்று கேட்டபோது அவர்கள் அத்தனை பேரும் சொன்னார்கள்: "இங்கே சதாராவிலே காஞ்சி பெரியவர் எழுந்தருளியிருக்கிறார். அவரைப் போய் எல்லோரும் சேவித்தோம். அவர் ஓர் ஆக்ஞாபனம் பண்ணினார். "நீங்களெல்லாம் மத்தியான வேளையிலே வெறுமே தானே இருக்கிறீர்கள்...? நீங்கள் பிரசாரம் பண்ண வேண்டும். அயல் தேசத்திலே ஒன்று நடக்கிறது- வயதான காலத்திலே அப்பா - அம்மா வீட்டிலே இருந்தால், இடைஞ்சலாக இருக்கும் என்று, அவர்களுக் காக ஒரு சரணாலயம் ஏற்பாடு பண்ணி, அவர்களை



அங்கே போய் விட்டு விடுகிறார்களாம்... மாதத்துக்கு ஒரு தடவை பிள்ளையும் மாட்டுப் பெண்ணும் தங்கள் குழந்தைகளை அங்கே காட்டி, 'அதோ உட்கார்ந்திருக்கிறாரே, அவர் தான் உங்கள் தாத்தா. அதோ தெரிகிறாரே... அது தான் பாட்டி... இரண்டு பேரும் பேசிக்கொண்டிருக்கிறார்கள். இதெல்லாம் அவர்களுக்குப் பிடித்த பண்டங்கள்... கொண்டு போய் கொடுத்துவிட்டு வா அம்மா...'' என்று குழந்தைகளின் கையிலே கொடுத்து அனுப்புகிறார்கள்...

அரை மணி நேரம் இப்படிச் செலவிடுவார்கள். அப்புறம் கிளம்பிப் போய் விடுவார்கள். மறுபடியும் அடுத்த மாதம்தான் போவார்கள்!

ஒரு சமயம் இந்தக் கிழ்வன் கிழவி யெல்லாம் ஒன்று சேர்ந்து கொண்டு, 'நாங்கள் சாப்பிட மாட்டோம், நாங்கள் குளிக்க மாட்டோம்' என்று மறியல் பண்ணவே, அந்த இடத்தையே இழுத்து மூடிவிடும்படி ஆனது. இப்போது அங்கேயிருந்து நம் நாட்டுக்கு இந்தப் பழக்கம், தொத்திக் கொண்டு விட்டது..." - இப்படி காஞ்சி ஆசார்யாள் கவலைப்படுகிறார். இதை நன்றாகக் கவனிக்க வேண்டும் - "நம் நாட்டிலே, அதுவும் இந்த பம்பாய்க்கே இந்தப் பழக்கம் வந்து விட்டது. இது எல்லா இடங்களுக்கும் பரவிவிட்டதானால் நாளா வட்டத்திலே இதுவே தர்மமாகப் போய்விடும். இதைப் பார்க்கிற பிஞ்சு உள்ளங்களிலே படிகிறது அல்லவா... நாளைக்கு அவர் களும் தங்கள் அப்பா அம்மாவை அப்படிக் கொண்டு போய் வைப்பார்கள்! இதுவே நாளா வட்டத்தில் தர்மமாகப் போய் புத்தகத்திலே கூட வந்து விடும்... இதை நடக்க விட்டுவிடாமல் நீங்கள் பிரசாரம் பண்ண வேண்டும்" என்றார் ஆசார்யாள்.

"ஆகையினாலே புராண இதிகாசங்களிலே, தாய் தந்தையரை ரக்ஷிக்கிற விஷயத்தை யார் யார் பண்ணினார்கள், யார் யார் அதனால் பெருமை அடைந்தார்கள்? - இதைப் பற்றி நீங்கள் ஒரு மணி நேரம் சொன்னால், அதை நாங்கள் ரிகார்ட் செய்து ஒவ்வொரு வீட்டிலேயும் கொண்டு போய்ப் போட்டுக் கேட்கச் செய்வோம். இது ஆசார்யாள் ஆக்ஞை" என்றார்கள் அந்தப் பெண்கள்.

அந்திமக் காலத்திலே பெரியவர்களைக் கொண்டு போய் இப்படி நிராதரவாக விடலாமா? அவர்களைக்

காப்பாற்ற வேண்டாமா...? அதனால் இன்னொரு விஷயமும் கவனிக்க வேண்டும் இங்கே... அந்திமக் காலத்தில், ஒருத்தருக்கும் ஒரு சிரமமும் கொடுக்காமல் ஒருத்தர் உட்கார்ந்திருக்கிறார்... பிராணன் போய் விட்டது! 'யாருக்குமே சிரமத்தைக் கொடுக்கவில்லை; இந்த மாதிரி யார் அமைவார்கள்!' என்று பிள்ளையும் மாட்டுப் பெண்ணும் சொல்கிறார்கள். கூட இருந்த எல்லோருமே சொல்கிறார்கள்.

அனாயாசேன மரணம்! – போனவருக்கு இது அமையவேண்டுமேயொழிய, இருப்பவர்கள் அதைச் சொல்லிக் கொண்டிருக்கக் கூடாது என்கிறது சாஸ்திரம். அவர் சிரமப்படாமல் போக வேண்டும் என்பது போனவருக்கு மட்டும்தான் சொன்னது. இருந்து கொண்டிருப்பவர்கள் என்ன நினைக்க வேண்டும்...?

'ஒரு மாதமாவது அவருக்கு சிச்ருஷை பண்ண நமக்குக் கொடுத்து வைக்கவில்லையே!" என்று நினைக்க வேண்டும். அவர்கள் சிரமப்படுகிறார்கள் என்றால், தீர்த்தத்தை எடுத்துக் கொள்ள முடியவில்லை என்றால், நாம் கொண்டு போய்க் கொடுக்க வேண்டும். பாதத்தைப் பிடித்துவிட வேண்டும்; ஸ்நானம் பண்ணி வைக்கலாம்; அன்னத்தை ஊட்டலாம்...

அவர்கள் நினைக்கிறார்கள்... 'அடடா! இந்த துர்கந்தத்தைச் சகித்துக் கொண்டு நம் பிள்ளை இப்படிப் பண்ணுகிறானே, அவன் குழந்தைகளெல்லாம் நன்றாக இருக்கட்டும்' என்று அனுக்கிரஹம் பண்ணுகிறார்கள். அந்த அனுக்கிரஹம்தான் இவர்கள் சந்ததி பின்னால் மேன்மையுறுவதற்கு உதவுகிறது.

ஆகவே, சிரமம் கொடுக்காமல் இவர்கள் போய் விட்டால் நன்றாயிருக்குமே என்று ஒருபோதும் சொல்லக் கூடாது.

பெரியவர்களும் ஓடாய்த் தேய்ந்து, அந்திமக் காலத்திலே தங்களை ஒதுக்குகிறார்கள் என்று தெரிந்ததுமே 'கிருஷ்ணா – ராமா – கோவிந்தா' என்று சொல்ல வேண்டாமா? 'குழந்தை வந்து விட்டானா? வெளியே போன பேரன் வந்து விட்டானா?' என்று இவர்களுக்கு விசாரம். இவர்களுக்கு மமகாரம் போவ தில்லை! இப்படிப்பட்ட கிருஹத்திலே தேவதைகளெல் லாம் வர மாட்டார்கள்.

பெரியவர்கள் இல்லையென்றால் நாம் இல்லை. வயதான தாய் தந்தையர்களை ரக்ஷிப்பது, பித்ரு தேவதை களை ஆராதிப்பது, அவர்கள் ப்ரீதியைச் சம்பாதித்துக் கொள்வது... எல்லாம் ரொம்ப முக்கியமானதாலேதான், பித்ரு கீதத்திலே அதற்கு இவ்வளவு சிறப்புச் சொல்லப் பட்டிருக்கிறது.

பீஷ்மர் மோக்ஷமடைந்த தினத்தில் பித்ரு காரியம் செய்தால், ரொம்ப விசேஷம் என்றும் சொல்லப் பட்டிருக்கிறது.

பீஷ்மாச்சாரியார் அனுக்கிரஹத்தினாலேயும், அவரால் சொல்லப்பட்ட சஹஸ்ரநாம மகிமையினா லேயும், அந்த பீஷ்மாச்சார்யரை அனுக்கிரஹித்த வாசுதேவனுடைய பரிபூர்ண கிருபையினாலேயும் எல்லோருக்கும் சர்வ க்ஷேமமும் ஏற்படும்.

**ப**ரமாத்மா நாமத்தின் சிறப்பைப் பார்த்தோமா னால், அது வேதத்திலேயே சொல்லப்பட்டிருக்கிறது. அவன் **பரமாத்மா** என்பதை எண்கள் மூலம் சொல்கிறது வேத வாங் மயம்.

# 6

**வே**தவாங்மயமானது பரமாத்மாவை எண்களின் மூலம் காட்டித் தருகிறது.

தேவதைகளுடைய சந்தஸ்ஸாக விளங்கக் கூடியது ஏக் சந்தஸ் – ஒற்றைப்படை எழுத்துக்களைக் கொண்டது. மனுஷ்ய சந்தஸ் என்பதில் இரட்டைப் படை எழுத்துக்கள் அமைந்திருக்கும்.

வேத பாஷ்ய அதிகாரி வித்யாரண்ய சுவாமி சொல்கிறார், இதற்கெல்லாம் சாமான்யமான – கேவலம் ஒரு மனுஷனுக்கிருக்கிற புத்தியினாலே அர்த்தம் சொல்லி விட முடியாது என்கிறார். எவ்வளவுதான் சாஸ்திர பாண்டித்யம் இருந்தாலும் கூட, வேத பாஷ்யங்களுக்கு அர்த்தம் சொல்ல வேண்டுமானால் ஈச்வர அனுக்கிரஹம் வேண்டும்.

அதனால்தான் வேத பாஷ்யத்தை ஆரம்பிக்கிற போதே வித்யாரண்ய சுவாமி லக்ஷ்மி நரசிம்மரை தியானம் பண்ணுகிறார். அவன் அருள் இருந்தால்தான் அதைச் செய்ய முடியும் என்று பிரார்த்திக்கிறார்.

அந்த வேத பாஷ்யத்தை வாசிக்கச் சொல்லி இன்றைக்கெல்லாம் கேட்டுக் கொண்டேயிருக்கலாம்.

வேதம் என்றால் என்ன? வேதத்தோடு சம்பந்தப் பட்டவர்கள் யார்?... வேதத்தில் சொல்லப்படும் விஷயம் என்ன என்று கேள்வி கேட்டுக் கொண்டு, "நமக்கு

இஷ்டத்தை உண்டு பண்ணுவதிலேயும் அனிஷ்டத்தை நிவர்த்தி பண்ணுவதிலேயும் அலௌகிகமான - நம்மால் பார்த்து உணர முடியாத - பரோக்ஷமான, கண்ணுக்குப் புலப்படாத விஷயங்களை வேதம் சொல்வதனால் அதற்கு வேதம் என்று பெயர்'' என்று ஆரம்பித்து, விசேஷமான பாஷ்யம் ஒவ்வொரு மந்திரத்துக்கும் இயற்றுகிறார் வித்யாரண்ய சுவாமி.

எம்பெருமான் அருள் இல்லாவிட்டால் வேதத் துக்குப் பொருள் காண்பது அரிது என்பதைத்தான் திருமழிசை ஆழ்வாரும் சொல்கிறார். பரமாத்மா அவன் என்பதைச் சொல்வதற்கு,

பூ நிலாய ஐந்துமாய், புனற்கண் நின்ற நான்குமாய்
தீ நிலாய மூன்றுமாய், சிறந்த கால் இரண்டுமாய்
மீ நிலாயது ஒன்றும் ஆகி வேறு வேறு தன்மையாய்
நீ நிலாய வண்ணம் நின்னை யார் நினைக்க வல்லரே?

'ஐந்தும் ஐந்தும் ஐந்துமாய்' இருக்கிறான் பரமாத்மா என்று மூன்று தடவை சொல்கிறார். இதிலே ஒவ்வொரு ஐந்தும் ஒன்றைக் குறிக்கிறது. முதல் ஐந்து என்ன...?

விசேஷமான வேத யக்ஞங்கள், பூத யக்ஞங்கள், பித்ரு யக்ஞங்கள், மனுஷ்ய யக்ஞங்கள், பிரும்ம யக்ஞங்கள் என பஞ்சமஹா யக்ஞங்களைக் குறித்து விசேஷமாக விவரிக்கிறது.

இந்த பஞ்ச மஹா யக்ஞங்கள் மிக முக்கியம். இவற்றைப் பண்ணாமல் இருக்கக் கூடாது என்கிறது சாஸ்திரம். ஏனென்றால் இன்னொரு இடத்தில் வேதம் சொல்கிறபோது, 'மனிதன் பிறக்கும்போதே மூன்று கடன்களோடு பிறக்கிறான்' என்கிறது. பிறந்த பிறகு பூலோகத்தில் வைத்துக் கொள்ளும் கடன்களெல்லாம் வேறு...?

மூன்று பேருக்கு நாம் கடன்பட்டிருக்கிறோம்; **ரிஷிகளுக்குக் கடன்பட்டிருக்கிறோம்.** அதே மாதிரி, **தேவதைகளுக்குக் கடன்பட்டிருக்கிறோம்;** பித்ரு தேவதை களுடைய பிரபாவத்தைச் சொன்னேன் அல்லவா அந்த **பித்ரு தேவதைகளுக்கும் நாம் கடன்பட்டிருக்கிறோம்.**

பிரும்மசாரியாக இருந்து கசடற வேதங்களை ஆசார்யரிடத்திலே கற்று, இந்திந்த மந்திரங்களுக்கு இவரிவர் மஹரிஷி, இது இந்த சந்தஸ்ஸிலே இருக்கிறது; இது இந்த மந்திரத்திலே வினியோகம் என்று மந்திரார்த்த ஞானம் தெளிந்து நிற்க வேண்டும்.

அந்த மாதிரி மந்திரம் சித்தி பெற்றால், ரிஷிகளுடைய கடனைத் தீர்த்தவனாவான். விச்வாமித்ரர், ஜமதக்னி என்று வேதத்தில் வராத மஹரிஷிகளே கிடையாது. வேதம் முன்பு தோன்றியதா, இல்லை ரிஷிகள் முன்னதாகத் தோன்றினார்களா என்று சந்தேகம் வரும்... வரப் போகிற ரிஷிகளைப் பற்றி வேதம் முன்பே சொல்கிறது. வருங்காலத்தில் என்ன நடக்கும் என்று வேதங்களெல்லாம் நமக்கு எடுத்துக் காட்டுகின்றன. ஆதலால், 'இப்படிப்பட்ட மஹரிஷிகளெல்லாம் இந்த வேதத்தைக் கண்டுபிடிக்கப் போகிறார்கள்; ரொம்ப சிரமப்பட்டு மந்திரங்களைக் •காண்பார்கள்' என்று வேதம் முன் கூட்டியே சொல்லி வைத்து விட்டது.

நமக்கோ, ஒரு சிரமமும் கிடையாது, ரிஷிகள் அத்தனையையும் கண்டு எடுத்துக்கொடுத்து விட்டார்கள். அப்படி அவர்கள் செய்த பிறகு, இருக்கிற மந்திரத்தைச் சொல்வதற்கே நாம் சிரமப்படுகிறோம்! ஆனால் ரிஷிகள் சிரமப்பட்டு தபஸ் பண்ணி, அந்த மந்திரங்களை அனவரதமும் தியானம் பண்ணி, பல தடவை ஆவ்ருதி பண்ணி, ஆவ்ருதி ரஹிதமான மோக்ஷத்தை அடைவதற்

காகத் திருப்பித் திருப்பிப் பண்ணிக் கொண்டே யிருந்தார்கள். மந்திரங்களுக்கு உள்ளீடான தேவதை யினிடத்திலே அவர்களுக்கு விசேஷ அன்பு, பக்தி.

இன்னொரு இடத்தில் சாஸ்திரம் சொல்கிறபோது, ஒரு மந்திரத்தில் நாம் சித்தி அடைய வேண்டுமானால், அந்த மந்திரம் நமக்குப் பலனைக் கொடுக்க வேண்டு மானால், அந்த மந்திரம் லோகத்துக்கு க்ஷேமத்தைக் கொடுக்க வேண்டுமானால், அந்த மந்திரத்தைச் சொல்லக் கூடியவர் மூன்று விஷயங்களை கவனிக்க வேண்டும் என்கிறது.

மந்திரத்தினிடத்திலே ரொம்ப பக்தி, பகுமானம் இருக்க வேண்டும். ஓர் ஆசார்யரிடத்திலே நிற்கிறபோது எப்படி பக்தியோடு நிற்கிறோமோ, பவ்யமாக பகவானுக் கெதிரிலே நின்றால் எப்படி நிற்கிறோமோ, அந்த மாதிரி மந்திரோச்சாரண சமயத்திலே – 'இப்படிப்பட்ட உயர்ந்த மந்திரத்தை நாம் சொல்கிறோம். அதை ஆசார்ய முகமாகத் தெரிந்து கொண்டிருக்கிறோம்' என்று ரொம்ப பக்தியோடு இருக்க வேண்டும்.

– இதைத்தான் சொல்கிறது சாஸ்திரம் முதலில்.

'மந்திரம்' என்பதற்கு என்ன பொருள் என்றால், யார் அதை சுஸ்வரமாக, நல்ல முறையிலே உச்சரிக் கிறார்களோ, அவர்களை அது ரக்ஷிப்பதனாலே மந்த்ரம் என்று பெயர்.

அதற்கு மேலே போய், அந்த மந்திரத்துக்கு உள்ளீடான தேவதை – அதில் எந்த தேவதை சொல்லப் படுகிறதோ அந்த தேவதையிடத்திலே விச்வாசம் இருக்க வேண்டும். 'ஒரு நாளைக்குப் பதினொரு தடவை சொல்லச் சொன்னார், சொல்கிறேன்' என்று ஏதோ

சொல்லிவிட்டு, 'நாற்பத்தெட்டு நாட்களாக இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கிறேன், பலனையே காணோமே...' என்று ஒருத்தர் சொன்னால் அதற்குப் பலன் ஏற்படுமா என்ன!

அப்படி இருக்கக் கூடாது. மந்திரத்துக்கு உள்ளீடான தேவதையினிடத்திலே விசேஷ விச்வாசம், பக்தி நமக்கு ஏற்பட வேண்டும்.

ஆசார்யரிடத்தில் பக்தி இல்லாமல், அவர் சொல்லிக் கொடுத்ததை மாத்திரம் கேட்டுக் கொண்ட பிறகு, 'எங்கள் வம்சமே பண்டித வம்சம்; இவர் என்ன எனக்குச் சொல்லிக் கொடுத்து விட்டார்...!' என்ற எண்ணம் வரக் கூடாது; அகங்காரம் கூடாது.

ஆகையினாலே, ஆசார்ய பக்தியோடு, மந்திரத்தினிடத்திலே பக்தியோடு, மந்திரத்துக்கு உள்ளீடான தேவதையினிடத்திலே பக்தியோடு யார் பூரண விச்வாசத்துடன் சொல்கிறார்களோ, அவர்களுக்குத்தான் மந்திர பலன் விளையும்.

இவ்வாறு நாம் மந்திர ஞானமும் மந்திரார்த்த ஞானமும் அடைந்தோமானால் ரிஷிகளிடத்தில் பட்ட கடனைத் தீர்த்துக் கொள்ளலாம்.

பிரும்மசாரியாக இருக்கிறபோதே இந்தக் கடன் தீர்ந்து போய்விடுகிறது.

பிரும்மசர்ய விரதத்தையே இரண்டாகப் பிரித்திருக்கிறது சாஸ்திரம். கல்யாணம் ஆகிற வரை பிரம்மசாரியாக இருத்தல் ஒருவகை. நைஷ்டிக பிரம்மசாரி இன்னொரு வகை...

நைஷ்டிக பிரம்மசாரி என்றால் கல்யாணம் இல்லாமல் அப்படியே இருந்துவிடுதல். பீஷ்மாச்சார்யார் அப்படியே இருந்து விட்டார்.

ஒருவன் கல்யாணம் பண்ணிக் கொள்கிறான்; ஒரு கன்னிகையைக் கைப்பிடித்து கிரஹஸ்தாசிரமம் என்கிற உயர்ந்த இல்லறத்தைக் கைப்பற்றுகிறான்.

இந்த இல்லறத்திலே இரண்டு கடன்கள் தீருகின்றன. தனக்கு விதிக்கப்பட்ட மஹா யக்ஞுங்களெல்லாம் பண்ணி, 'எங்களுக்கு க்ஷேமம் ஏற்படட்டும் என்று வேண்டி இந்திரனை உத்தேசித்துப் பண்ணக்கூடிய யக்ஞும். - இந்திரன் என்றால், இந்திரனுக்கு அந்தர்யாமி யான பகவான்தான் சந்துஷ்டி அடைகிறான். தேவதை களுக்கு நாம் பட்ட கடன் தீர்கிறது. நமக்கு விசேஷ பலனை பகவான் தருகிறான்.

வம்சோத்தாரகனான உத்தம பிள்ளை பிறந்தானா னால், பித்ரு தேவதைகளெல்லாம் சந்தோஷப்படு கிறார்கள்.

வம்சம் விளங்க குழந்தை பிறந்தது என்று கேட்டவுடனேயே அந்த தந்தை இருக்கிறானே... அவன் கிடுகிடுவென்று ஓடி ஒரு நீர் நிலையிலே போய்த் தடாலென்று சந்தோஷத்தில் குதிக்கிறான். அவன் குதித்த வேகத்தில் தீர்த்தம் மேலே எழுகிறது. அதைப் பித்ரு தேவதைகள் அர்க்கியமாக ஏற்றுக் கொள்கிறார்கள். 'இந்த வம்சத்திலே ஓர் உத்தமமான பிள்ளை பிறந்தான்' என்று மகிழ்ச்சி கொள்கிறார்கள்.

அதனால்தான் **'சுமங்கலீரியம்'** என்று ஆரம்பித்துச் சொல்லும் ஆசீர்வாத மந்திரம் ஸ்தரீகளுக்கான மந்திரம் இது... அது என்ன சொல்கிறது?... 'நீ தீர்க சுமங்கலியாக இருக்க வேண்டும். அது மட்டுமில்லை, பத்து பிள்ளைகள் பெற்று, பதினொராவது பிள்ளையாக உன் பர்த்தாவை நீ நினைக்க வேண்டும்' என்கிறது. ஏனென்றால், கடைசி பிள்ளையினிடத்திலேதான் அம்மாவுக்கு ஆசை அதிகமாக இருக்குமாம். அதனால் கணவனை பதினொ ராவது பிள்ளையாக நினைக்க வேண்டும் என்றது.

நிச்சயதார்த்தத்தன்று ஒரு மந்திரம் இன்றைக்கும் சொல்லப்படுகிறது. பெண்ணுக்குப் புடவையைக் கொடுக்கிறபோது சொல்கிற மந்திரம். என்ன சொல்லி யிருக்கிறது அந்த மந்திரத்திலே...?

# 7

நிச்சயதார்த்த மந்திரம் என்ன சொல்கிறது...? பெண்ணைப் பார்த்துச் சொல்கிறது. 'விராட் சந்தஸ்' என்று ஒரு சந்தஸ் இருக்கிறது... பத்து எழுத்துக்கள் உடையது இந்த சந்தஸ்..." என்று சொல்கிறது.

அனுஷ்டுப் சந்தஸ்ஸில் முப்பத்தியிரண்டு எழுத்துக்கள். ஜகதீ சந்தஸ் என்றால் நாற்பத்தியெட்டு.

'பத்து எழுத்துக்கள் கொண்ட விராட் சந்தஸ் போன்று உனக்குப் பத்துப் பிள்ளைகள் பிறக்கட்டும்' என்று ஆசீர்வாதம் பண்ணுகிறது இந்த நிச்சயதார்த்த மந்திரம். 'உன் சத் - சந்தான செளபாக்யத்தினாலே' பித்ரு தேவதைகள் சந்தோஷமடையட்டும்' என்று ஆசீர்வாதம் சொல்கிறது.

ஹோம குண்டம் தயார் பண்ணினால் அதை கிழக்கு முகமாக தர்பத்தைப் போட்டு நன்றாக மூடிவிட வேண்டும். அதன் பிறகு, வடக்கு நுனியாக தர்பத்தைப் போட்டு மூட வேண்டும். 'கிழக்கு நுனியாகவும் வடக்கு நுனியாகவும் மாற்றி மாற்றிப் போட்டு நன்றாக மூடிவிடு...' என்கிறது சாஸ்திரம். இவ்வாறு ஹோம குண்டத்தைக் கட்டிவிட்டு யக்ஞத்தன்று... அது என்றைக்கு ஆரம்பிக் கிறதோ அன்றைய தினத்தில், அரணி மதனம் பண்ணி அக்னியைப் பிரதிஷ்டை பண்ண வேண்டும். அவ்வாறு பிரதிஷ்டை பண்ணுகிறதினத்திலே, யார் யக்ஞம்

பண்ணுகிறார்களோ, அந்த யஜமான தம்பதியை அழைத்து வந்து, 'இதைப் பாருங்கள்...' என்று காண்பிக்க வேண்டும். வடக்கு நுனியாக வைத்ததை எடுத்து, கிழக்கு நுனியாக வைத்ததை எடுத்து... இந்த மாதிரி வைத்த தர்பத்தையெல்லாம் கொஞ்சம் கொஞ்சமாக நீக்கிக் களைந்து, அந்த ஹோம குண்டத்தை அவர்களுக்குக் காண்பிக்க வேண்டும்.

எதற்காக இப்படி ஒரு காரியம்...? முதலில் எதற்காக மூடுவது? பிறகு ஏன் அதைத் திறந்து காண்பித்து 'இதைப் பாருங்கள்' என்று சொல்வது...? இதை எதற்காகப் பண்ணு வதாம்...? என்று நமக்கு விசித்திரமாகத்தான் தோன்றும்.

ஆனால், மஹான் ஆபஸ்தம்பர் என்ன சொல் கிறார்...? 'ஒரு காரணமாகத்தான் இவ்வாறு செய்யச் சொல்லியிருக்கிறது' என்கிறார்,

ஒரு வீட்டிற்கு நாம் போகிறோம் என்றால், முதலில் வீட்டின் எஜமானர் தென்படக் கூடாதாம் நமக்கு. வெளியே ஒருவர் நின்று கொண்டு, "எங்கப்பாவைப் பார்க்க வந்தீர்களா... உள்ளே இருக்கிறார், போங்கள்" என்று சொல்ல வேண்டுமாம். அங்கே போனால், "ஓ, எங்கப்பாவைப் பார்க்க வந்தீர்களா? அதோ அங்கே போய்ப் பாருங்கள்" என்று அவர் அனுப்ப, இன்னும் உள்ளே போனால், அவரோ, "எங்க அப்பாவைப் பார்க்க வந்தீர்களா?" என்று மற்றொரு இடத்துக்கு அனுப்ப, அங்கே இருப்பவரோ, "அப்பா – அம்மா உள்ளே பூஜை அறையிலே பூஜை பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். இதோ பூஜை முடியப் போகிறது; எல்லோரும் தீர்த்தம் வாங்கிக் கொள்ளப் போகிறோம், கொஞ்ச நேரம் இருந்தீர்களானால், பார்க்கலாம்..." என்று சொல்ல வேண்டும். உள்ளே பூஜை பண்ணுகிறாரே, அவருடைய பிள்ளை, பேரன், கொள்ளுப் பேரன் என்று இவர்கள்

மொத்தம் நூறு பேர் நிற்க வேண்டும், தீர்த்தம் வாங்கிக் கொள்ள...

- இது ஆபஸ்தம்பருடைய விளக்கம். ஒரு வீடென்றால் இதுதான் அழகு... எல்லோரையும் அனுப்பி விட்டு, இரண்டே இரண்டு பேர் இருக்கக் கூடாது வீட்டிலே. ஒரு கிருஹத்திலே நூறு பேர் இருக்க வேண்டும் என்று சாஸ்திரம் சொல்கிறது. கொள்ளுப் பேரன், எள்ளுப் பேரன் எல்லோரும் இருக்க வேண்டும். பூஜை மணி அடித்தால் இத்தனை பேரும் வந்து தீர்த்தம் வாங்கிக் கொள்ள வேண்டும். அந்த வீட்டு எஜமானரைப் பார்க்க வேண்டுமானால், எள்ளுப் பேரனைக் களைந்து, கொள்ளுப் பேரனைக் களைந்து, பேரனைக் களைந்து, பிள்ளையைக் களைந்து... - தர்பத்தைக் கொஞ்சம் கொஞ்சமாகக் களைந்து, ஹோம குண்டத்தைப் பார்க்கச் சொல்வதே இதற்குத்தான் என்கிறார் ஆபஸ்தம்பர்.

'தாத்தாவை அடியோடு தெரியவே தெரியாது, அப்பா தெரியாது' என்கிற நிலை கிருஹத்திலே இருக்கக் கூடாது. குழந்தைகளுக்கும் தெரிய வேண்டும்; பெரியவர்களுக்கும் தங்களுக்குப் பின்னால் இருக்கிற சந்ததிகள் எல்லோரையும் தெரிந்திருக்க வேண்டும்.

அப்படித் தெரிந்து வைத்துக் கொண்டவர்களுக்கு, வாஜபேய யக்ஞும் மந்திரம் சொல்லிக் கொண்டாடி ஆசீர்வாதம் பண்ணுகிறது. 'அமிர்தமயமான தங்கத் தாம்பாளத்திலே அவர்களை இறக்குங்கள்; அவ்வளவு புண்ணியம் அவர்கள் பண்ணியிருக்கிறார்கள்' என்கிறது. மனிதனுடைய ஆயுளை நூற்றியிருபது ஆண்டுகள் என்று சொல்கிறது இந்த மந்திரம்.

**தொ**ண்டரடிப் பொடியாழ்வார், ரங்கநாதரிடம் போய்க் கேட்கிறார் - "எனக்கு இனி பிறவியே

வேண்டாம்; பிறவாதிருக்க அருள்" என்று கேட்கிறார். இப்படிக் கேட்க என்ன காரணம்...?

பாதி ஆயுள் தூக்கத்திலேயே போய் விடுகிறது. நூற்றியிருபது வயதில் நாம் ஜீவித்திருப்பது அறுபது வயது தான். இதிலே பசி, பிணி, மூப்பு, துன்பம்... என்று கஷ்டங்கள் பலவாறு படுகின்றோம்.

இவற்றில் பிணியைப் பொறுத்துக் கொள்ளலாம், பசியைப் பொறுத்துக் கொள்ளலாம். ஆனால் மூப்புத் தன்மை இருக்கிறதே... அந்தச் சிரமம் மிகக் கொடியது. மூப்படைந்த இவராலும் ஒன்றும் பண்ணிக்கொள்ள முடியவில்லை; எதிரே இருக்கிறவர்கள் சகாயம் பண்ணும் படியான நிலை. அதை எதிர்பார்த்து காலம் தள்ளுவது ரொம்ப பயங்கரமான சமாசாரம்.

பிணி, பசி, மூப்பு, துன்பம் – இவையெல்லாம் அனுபவிக்க வேண்டியிருப்பதனாலே இந்தப் பிறவி எனக்கு வேண்டாம் என்கிறார் ஆழ்வார்.

இப்படியெல்லாம் பல கஷ்டங்கள் இல்லாதபடி பூரணமாக நூற்றியிருபது வருடம் வாழ வேண்டும் என்று தான் ஆசீர்வதிக்கிறது மந்திரம். 'அம்ருதம்வை ஹிரண்யம்'

விசேஷமாக எம்பெருமான் மந்திரத்தைத் தெரிந்து கொண்டு, யக்ஞ யாகாதிகள் பண்ணி, தேவதைகளுடைய கடனைத் தீர்க்கும்படியான நிலையே உலகிலே சிறந்த நிலை என்கிறது சாஸ்திரம்.

இவ்வாறு யக்ஞம், ஹோமங்கள் பண்ணுவதால் பல பேருக்கு க்ஷேமம் உண்டாகிறது. யக்ஞ பூமியான நம் பாரத தேசம் மொத்தம் ஒரே புகை சூழ்ந்து இருந்ததாம் ஒரு காலத்தில்... புகையானது ஹோமத்திலிருந்து வரக்கூடிய தூமம். அதை சுவாஸம் பண்ணினால், நமக்கு எந்த வியாதி வரும்! எதுவும் நம்மை அண்டாது.

ஆகவேதான் ஹோமம் பண்ணுகிற போது 'புகை வேண்டாம்' என்று எழுந்து போகக் கூடாது. அது நடக்கிற இடத்திலேயே உட்கார்ந்திருக்க வேண்டும். அந்தப் புகையை சுவாசிக்கக் கொடுத்து வைத்திருக்க வேண் டாமா...? அந்த இடத்திலே அக்னியிலே இடம்பெறும் திரவியங்கள் எவ்வளவு மந்திர பூர்வமாக, விசேஷமாக விழுகின்றன! ஆகவேதான், அந்தப் புகையை சுவாசிப்பது நமக்கு வியாதிகளைத் தீர்க்கிறது.

ஆகவே யக்ஞத்தில் தேவதைகளை ஆராதிப்பதால் தேவதைகளிடம் நம் கடன் தீர்கிறது. பித்ருக்களின் கடன் தீர்கிறது. ஸத்ஸந்தான செளபாக்கியத்தினாலேயும் சிரார்த்தங்களை சிரத்தையாய்ப் பண்ணுவதினாலேயும், அவர்களுக்கு நாம் பட்ட கடன் தீர்கிறது.

பித்ரு காரியங்களை சிரத்தையாகச் செய்ய வேண்டும். அதனால்தான் அதற்குச் சிராத்தம் என்றே பெயர். சில இடங்களிலே ஆரம்ப ஏற்பாடுகள் பிரமாதமாக இருக்கும். கிரியை என்று வரும் போது ரொம்ப குறை வைப்பார்கள்.

இரண்டு ஆட்டுக்கடாக்கள் சண்டையிடுவதைப் பார்க்கலாம்... கொம்பெல்லாம் பார்த்தால் வளைந்து, பயங்கரமாக இருக்கும்.

ஓர் ஆடு பத்தடி நகர்ந்து, பின்னால் போகும்... இன்னொரு ஆடு, தான் மேலும் பத்தடி நகர்ந்து இன்னும் பின்னாலே போகும்! அப்புறம் கிடுகிடுவென்று இரண்டும் ஓடி வரும். பார்த்துக் கொண்டிருப்பவர்கள் இது இரண்டும் கிழித்துக்கொண்டு சின்னாபின்னமாகி, நூறு சுக்கலாகப் போய்விடும் என்று நினைக்க, ஓடி வந்ததே, அந்த ஆடுகள் இலேசாகத் தொட்டுக் கொள்வதோடு சரி!

பண்ணுகிற காரிய கலாபத்தைப் பார்த்தால், இரண்டு ஆட்டுக்கும் முடிவு வந்துவிட்டதோ என்று தோன்றும். ஆனால் இரண்டும் சும்மா நிற்கும்.

பஹ்வாரம்பகா – லகுக்ரியா என்றது இதைத்தான்!

ஆகாசத்தில் படபட – டமடமவென்று இடிக்கிறதே மேகம்... அதனால் மழை வருமா...? வராது! ஆனால் அமர்க்களம் பார்த்தால் பயங்கரமாக, எட்டு சுழி மழை பெய்யும் போலிருக்கிறது. ஒரு சொட்டும் வராது!

சிராத்த காரியமானது இப்படி ஆகிவிடக் கூடாது.

சிராத்தத்தன்று – பிராமணாய பிராமணார்த்தம் – பிராமணர்களை வரிக்க வேண்டும். அவர்களை நம் கிருஹத்துக்கு வரவேண்டும் என்று அழைக்கிறபோதே, மந்திரத்தைச் சொல்லித்தான் அழைக்க வேண்டும். இப்போதெல்லாம் வழக்கம் மாறிவிட்டது. இப்படி அழைக்கிறதற்கான மந்திரத்தைச் சொல்லி நாம் அழைப்பதில்லை. சிராத்த தினத்தன்றே எல்லா மந்திரமும் சொல்லப்படுகிறது. அதற்கேற்ற வசதி, வாய்ப்பு நமக்கு இல்லை... இருந்த காலத்தில், நாலு நாட்கள் முன்னதாகவே அழைப்பார்கள். வருகிறவர்களும் நான்கு நாள் முன்னதாகவே வருவார்கள். வந்து சிராத்தத்தை நடத்திக் கொடுத்துவிட்டுப் போவார்கள்! அந்த மாதிரி பிறருக்காக வந்து தங்களை வருத்திக் கொள்வார்கள்.

தன் பித்ருதேவதைகளுக்காக ஒருவர் சிரமப்படுகிறார்... இன்னொருத்தர் ஏன் சிரமப்பட வேண்டும்? அவரும் சிரமப்பட்டு, பட்டினியிருந்து... 'ராத்திரி சாப்பிட்டால் தேவலை போலிருக்கே...' என்ற எண்ணம்கூடத் தோன்ற விடாமல் விரதம் இருக்கிறார். அந்த அளவுக்குப் பித்ரு காரியம் சிரத்தையாகச் செய்ய வேண்டும். நடத்திக்

கொடுங்கள் என்று இவர் பிரார்த்திக்கிற அழகே அழகு! ஒருத்தருக்காக தன் சுகத்தை விட்டுக் கொடுத்து, வருத்திக் கொண்டு இவர் வந்து நடத்திக் கொடுக்கிறாரே, அது இன்னொரு அழகு. அதுதான் அன்னி யோன்ய ஸத்பாவம் - அவ்வளவு பரஸ்பர அந்நியோன்ய ஸத்பாவம் சிராத்தத்திலே தெரிகிறது.

# 8

சிராத்தத்தில் பரஸ்பர அன்னியோன்ய ஸத்பாவம் தெரிகிறது என்று சொன்னேன்.

இன்னும் என்னவெல்லாம் நன்மை நடக்கிறது பாருங்கள்... கீழே அட்சதை, எள் எல்லாம் இறைக்கிறோம். பூமியிலே ஊர்ந்து செல்கிற சின்னச்சின்ன எறும்பெல்லாம் அதை எடுத்துக்கொண்டு போகிறது. ஒரு பிண்டம் காக்கைக்கு, இரண்டு பிண்டம் பசுவுக்கு வைக்கிறோம். பந்துக்களெல்லாம் உட்கார்ந்து சாப்பிடுகிறார்கள். ஒரு சிராத்தம் என்றால், எத்தனை விதமான தர்மங்கள்! பிராணிகளை நாம் சந்திருப்தி பண்ணி வைக்கிறோம். இப்படிப் பலவகை நல்லது நடப்பதனாலேதான், பித்ரு காரியம் - பித்ரு யக்ஞம் என்பது ரொம்ப முக்கியம். அதனால், வம்சமானது விசேஷமாகத் தழைத்து விளங்குகிறது.

அதற்கு மேலே பூத தயா - பூத யக்ஞம் என்று பெயர் எல்லா பிராணி வர்க்கத்தினிடத்திலேயும் அன்பு இருக்க வேண்டும். அது தான் பூத யக்ஞம். மரங்களை தடா லென்று அடியோடு வெட்டுவது, பிராணி வர்க்கங்களை ஹிம்சை பண்ணுவது, அவற்றை அடித்துக் கொல்லுதல் இத்தியாதி இருக்கக் கூடாது. எல்லா பிராணி களிடத்திலும் அன்பாக இருக்க வேண்டும். வியாஸகீட ஸம்வாஸம் என்பது பற்றிச் சொல்லியிருக்கிறேன்...

அரிசியிலே நெளிகிற சின்ன புழு... அது உடம்பை இழுத்துக் கொண்டு இழுத்துக் கொண்டு போகும்... அவசரமாக வியாஸர் முன்னிலையில் போயிற்று... அதைப் பார்த்த வியாஸர் "கீடமே (புழுவே) நில்லு!" என்றார். "என்ன வேகம்? எங்கே போகணும்? ஆஸ்திக ஸமாஜத் துக்குப் போகணுமா...? அங்கே போய் உபன்யாஸம் கேட்கணுமா? இவ்வளவு வேகமாகப் போகிறாயே... எதற்கு?"

அது வியாஸரைப் பார்த்து, 'அதோ பாரும்! ஒரு கட்டை வண்டி... மாடு பூட்டப்பட்டிருக்கு... அந்த வண்டி அதி வேகமா வரதே சுவாமி... அது என் மீது ஏறினா என் கதி என்ன...? அநியாயமாப் போய் விடுவேனே! வண்டி இங்கே வருவதற்குள்ளே கடந்து போக வேண்டும்... அதிவேகமாகப் போகிறேன்..."

வியாஸர் வாயை மூடிக் கொண்டிராமல், "அந்த வண்டி வந்து உன் மேல் ஏறினால் தான் என்ன? நீ போனால் தான் போயேன்? என்ன இப்போ...?" என்று சொல்லி விட்டார்.

ரொம்பக் கோபம் வந்து விட்டது புழுவுக்கு.

"மறுபடியும் சொல்லுங்கள்..." என்றது வியாஸரிடம்.

"நீ போனால்தான் போயேன், என்ன இப்போது!" என்றார்.

புழு சொல்லிற்று: "என்னைப் பார்த்தால் உமக்கு அசூயை! அசூயையினாலேதான் 'போனால் போ!' என்கிறீர். நான் என்ன, உம்மைப்போல் சந்தியாவந்தனம் பண்ணணுமா? மாத்தியான்னிகம் பண்ணணுமா? சாயங்காலம் ஆனால் திரும்ப சந்தியாவந்தனம் பண்ணணுமா?... விரதம் இருக்கணுமா? பெண்ணுக்குக் கல்யாணம், பிள்ளைக்கு உபனயனம் பண்ணணுமா...?"

என்று வரிசையாகக் கேட்க ஆரம்பித்துவிட்டது அந்தப் புழு!

வியாஸர் நடுநடுங்கிப் போய் விட்டார். புழுவுக்கு சந்தியாவந்தனம் கிடையாது; நமக்கு உண்டல்லவா! நாம் பண்ணாது போனால் புழுவைக் காட்டிலும் மட்டம்! அதனால்தான் புழு பரிகாசம் பண்ணிற்று.

மனிதனைப் படைத்து, அவனுக்கு இத்யாதி இத்யாதி சாஸ்திரங்களைக் கொடுத்து, இதைப் பண்ணு, இதைப் பண்ணாதே என்று பகவான் நியமித்து விடுகிறான்.

"எங்களுக்கு அப்படி ஒன்றையும் நியமிக்க வில்லை; நாங்கள் சுகமாக இருக்கிறோம். நான் இப்படி இருப்பது பொறுக்கலை உமக்கு. அதனால் 'போனால் போயேன்' என்று என்னைக் கண்டு அசூயைப் படுகிறீர்..." என்றது புழு.

புழுவினிடத்திலே கூட ஜாக்கிரதையாகப் பேச வேண்டும் என்று அன்றுதான் வியாஸர் தெரிந்து கொண்டார். வியாஸருக்கே இந்த நிலைமை!

பேச்சு என்பது எதை வேண்டுமானாலும் சொல்லும்... ஆனால், அப்பிரமாணமாகப் பேசினால், யாராவது ஒப்புக் கொள்வார்களா...! ஆகவே ஜாக்கிரதை யாகப் பேச வேண்டும்.

பூத தயை - எல்லோரிடத்திலும் அன்போடு இருக்க வேண்டும்; அன்போடு பேச வேண்டும்.

**வாக்வை சரஸ்வதி** என்கிறது வேதம். **வாசா அம்ருதம் விந்ததே** - வாக்கினாலே ஒருவன் அமிருதத்வத்தை அடைகிறான் என்கிறது.

துஷ்டனான ஒருவனுக்கு வாக்கு நன்றாக இராது. நல்லோருக்கு வாக்கு அமிர்தமாக இருக்கும். பாருங்கள்,



உலகிலே எல்லோரும் குயிலை விரும்புகிறார்கள். கழுதையை யாரும் விரும்புவதில்லை. பஞ்சம ஸ்வரத் துக்குக் கோகிலத்தை அழகாக உதாரணம் சொல்லி யிருக்கிறது ஏன்...?

குயில் நமக்கென்ன உபகாரம் பண்ணுகிறது? கழுதை என்ன அபகாரம் பண்ணிற்று...?

இதனால் உபகாரமும் இல்லை; அதனால் அபகாரமும் இல்லை. அப்படியிருந்தாலும் எல்லோரும் கழுதையை வெறுக்கிறார்கள்!

கழுதை கத்துவது கர்ண கடோரமாக இருக்கிறது. குயில் த்வனி அழகாயிருக்கிறது; ரம்யமாயிருக்கிறது. அதனாலே குயிலைக் கொண்டாடுகிறோம்.

அம்ருதத்வத்தை அடைய வேண்டுமானால் இப்படி, குயில் மாதிரி நல்ல வாக்கு அமைய வேண்டும். அந்த வாக்கும் பகவத் அனுக்கிரஹத்தினாலேதான் கிடைக்கும்.

இந்த நாக்கு இருக்கிறதே நம் வாய்க்குள், அது ஒரு நாள் யோசித்துப் பார்த்தது... பற்களைப் பார்த்துப் பேசியது;

"பற்களே! எந்தப் பொருளைக் கொடுத்தாலும், கடினமான வஸ்துக்களைப் போட்டாலும், அதை நன்றாக மென்று, அசை போட்டுச் சூர்ணமாக்கி, நான் அனுபவிக்கும்படியாக உருட்டிக் கொடுக்கிறீர்களே!" என்றது.

பொருள் விளங்காய் உருண்டை என்று ஒன்று உண்டு... வஜ்ரத்தால்தான் வஜ்ரத்தை அறுக்க முடியும் என்கிற மாதிரி, அந்தப் பொருள்விளங்காய் உருண்டையை இன்னொரு பொருள் விளங்காய் உருண்டையாலேதான் உடைக்க முடியும்! அந்த நிலையிலே, அப்படிப்பட்ட வஸ்துக்களையெல்லாம் கூட இந்தப் பல் கடிக்கிறது.

"இப்படிக் கடித்து உருட்டிக் கொடுக்கிறாயே! என்ன உபகாரம் பண்ணுகிறாய் நீ!" என்று நாக்கு ஆச்சர்யத் துடன் கேட்கிறது. "உனக்குப் பிரதியுபகாரம் நான் பண்ண வேண்டாமா...?" என்றது. அந்தப் பற்களெல்லாம் சொல்லிற்று: "நீ பிரதியுபகாரம் பண்ண வேண்டாம்... பகவான் உன்னையும் என்னையும் எப்படி வைத்திருக் கிறானோ, அதை நீ உணர்ந்து இருந்தால் போதும்" என்றது.

"எப்படி வைத்திருக்கிறான் நம்மை?" ? நாக்கு கேட்டது.

"எங்களை வெளியிலே வைத்து, உன்னை உள்ளே வைத்திருக்கிறான். நீ படிதாண்டாப் பத்தினியாக எங்களுக்குள்ளே கட்டுப்பட்டிருந்தால், எங்களுக்கு உபகாரம் பண்ணுவதைக் காட்டிலும் மேல்."

நாக்குக்குக் கொஞ்சம் வருத்தம், பாவம்...! அது சொல்லிற்று: "இவ்வளவு நிஷ்டூரமாகப் பேசுகிறீர்களே? நான் வெளியே வந்தால் என்னவாம்!" என்றது.

பற்களெல்லாம் சொல்லிற்று: "நீ வெளியே வந்தால் உனக்கு உபத்திரவம் இல்லை; எங்களுக்குத்தான்" என்றன.

"ஏனென்றால், எவனாவது எதையாவது நாக்கால் சொல்லிவிட்டுப் போய்விட்டால், எதிரே இருக்கிறவன், 'உன் நாக்கை அடக்குகிறேன் பார்!' என்று சொல்லுவதில்லை...' உன் பல்லை உடைக்கிறேன் பார்!" என்றுதான் சீறுவான். ஆகையினாலே, நீ தப்புப் பண்ணினால்கூட சிட்சை எங்களுக்குத்தானே வருகிறது... ஆகவே, அடங்கி இரு" என்றன பற்கள்.

**ந**மக்கு வாக்கு கொஞ்சம் வேகமாக, பௌருஷமாக வருகிறபோது, நாக்குக்கும் பல்லுக்கும் நடந்த இந்த சம்பாஷணையை நினைத்துப் பார்த்து உடனே அடக்கிக் கொள்ள வேண்டும்.

அதனால்தான் தசரதச் சக்கரவர்த்தி கஷ்டப் பட்டார்.

குலசேகர ஆழ்வார் சொல்கிறார்: இரண்டு கையாலேயும் தசரதன் வாயிலே அடித்துக் கொள்கிறானாம்... 'என்னை மாதிரி வாய் இந்த உலகிலே யாருக்கும் இருக்கக் கூடாது... வாயால் கெட்டவன் நான்' என்று தன் வாயில் அடித்துக்கொண்டே புலம்புகிறான்.

தசரதனின் புலம்பல் குறித்து குலசேகர ஆழ்வாருடைய அனுபவம் இது.

ஆகவே நாம் மிக ஜாக்கிரதையாகப் பேச வேண்டும். அவ்வாறு பேசாததால் வியாஸரையே ஒரு புழு சிக்ஷித்து விட்டது!

நல்ல வாக்கு நமக்கு அமைய வேண்டும். இந்த பூதங்களிடத்திலே தயையுடன் இருத்தல் வேண்டும். புழுவையும் ஹிம்சை பண்ணக்கூடாது. எல்லாம் நமக்கு வேண்டும்.

ஒரு கொசு பாருங்கள்... தட்டினால் பிராணன் போய்விடுகிறது. நுட்பமான பிராணி... ஆனால் சாஸ்திரம் என்ன சொல்கிறது...? கொசு உத்தமமான ஸ்ரீ வைஷ்ணவன் என்கிறது. ஏனெனில் நம்மிடமில்லாத ஓர் அனுஷ்டானம் கொசுவிடம் இருக்கிறது.

'நம்மிடமில்லாத அனுஷ்டானம் அதற்கு என்ன?' என்று கேட்டால்...?

கொசு இப்படியே பறந்து போய்க் கொண்டிருக்கும். ஆஸ்திக ஸமாஜம் வழியே சென்றால், அங்கே உள்ளே மகான்களெல்லாம் உட்கார்ந்திருக்கிறார்கள். 'இந்த இடத்தை நாம் விடலாமோ!' என்று உள்ளே வந்துவிட்டது கொசு! உள்ளே புகுந்து என்ன பண்ணுகிறது?... திருப்பாணாழ்வார் சொன்னதை அது பண்ணுகிறது!

மகான்களுடைய கால்கள் திருவடிகளைப் பார்க்கிறது... காலில் விழுந்து சுரீரென்று கடிக்கிறது. அவர் அதைக் கவனிக்காமல் விட்டுவிட, அங்கேயிருந்து மேலே ஏறிப் போய் சரீரத்திலே எங்கே சதை அதிகமாக இருக்கிறதோ அங்கே கடிக்கிறது. அப்புறமும் அவர் வாய் மூடி இருந்தால் காதிலே வந்து 'அபிவாதயே!' என்று ஆரம்பித்துத் தான் யார் என்பதைச் சொல்கிறது! மெதுவாக 'ரொய்ங்ங்...' என்று சொல்கிறது! அப்பவும் வெறுமே இருந்துவிட்டால், எந்த இடத்திலே துளை

இருக்கிறதோ, அங்கே உள்ளே நுழைந்து விடுகிறது கொசு! ஆத்ம சமர்ப்பணம் பண்ணுவதற்கே வந்திருக்கிறது அது! கிரமமாகத் திருவடியிலே ஆரம்பித்துத் திருமுடி வரை போகிறதே... அப்படியானால் கொசு உத்தம வைஷ்ணவன் தானே!

ஆகையினால், லோகத்திலே நாம் கவனித்துப் பார்த்தோமானால் ஒவ்வொரு பிராணி வர்க்கத்திடமும் ஓர் உத்தமமான அம்சம் இருக்கும். அதைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காகத்தான், பகவான் அதை நம் பக்கத்திலே வைத்திருக்கிறான். ஆனால் நாமோ, அதைத் திரும்பிப் பார்க்காமல் போய்க் கொண்டிருக் கிறோம்.

# 9

நமக்கு எல்லா நலத்தையும் ஞானத்தையும் கொடுக்கிற பரமாத்மா, கடைசியிலே ஒன்றுக்கும் பிரயோஜனமில்லாமல், அதைக் காட்டிலும் மட்டமாக இருக்கும்படியான ஒரு நிலையையும் கொடுத்து விடுகிறான்.

கும்பகர்ணன் இருக்கிறான் பாருங்கள்... அவனுக்கு ஏகமாக வரத்தைக் கொடுத்து விட்டான் பகவான். அவ்வரத்தோடு அவன் விழித்துக் கொண்டேயிருந்தான் என்றால் உபத்திரவம் என்று தூங்குவதற்கு வரத்தைக் கொடுத்து விட்டான்!

அதே போல்தான் நமக்கும் ஏகப்பட்ட சக்தியைக் கொடுத்து, கடைசியிலே மிருத்யு பயம், ரோக பயம். இத்தியாதிகளையெல்லாம் கூடவே கொடுத்திருக்கிறான்! இல்லையானால் மனிதன் நிற்பானா! நமக்காகத்தான் வேதம், சாஸ்திரம் எல்லாமே சொல்லப்பட்டிருக்கிறது. அவற்றைச் சொல்லி எல்லா தேவதைகளையும் 'ஆவாஹயாமி' 'ஆவாஹயாமி' என்று நாம் பிரார்த்தனை பண்ணினால், சர்வ தேவதைகளும் கட்டுண்டு அங்கேயே இருந்து விடுவார்கள். 'முடிகிற சமயத்திலே வருகிறேன்...' என்று எந்த தேவதையும் எழுந்து போய் விடுவதில்லை. அப்டி தேவதைகள் எழுந்து போய்விட்டால், கலச பிரதிஷ்டைக்கெல்லாம் பலன் ஏற்படுமா?...

துர்தேவதை இருக்கிறது பாருங்கள்... அந்த துர்தேவதைகள் கூட மந்திரத்துக்குக் கட்டுப்படுகின்றன. இருகோடு போட்டு, 'இந்த இடத்தை விட்டுத் தாண்டினா யானால் தெரியும்' என்றால், அங்கேயே உட்கார்ந்து விடும்!

துர்தேவதை கூட கட்டுப்படுகிறது! சாத்விக தேவதைகள் எல்லாமே கட்டுப்படுகின்றன. கட்டுப் படாதவர் யார் என்றால்... நம்மைத்தான் சுட்டிக் காட்டுகிறது சாஸ்திரம்!

'எழுந்திரு என்றால் உட்காருவான், உட்காரு என்றால் எழுந்திருப்பான்' என்று மனுஷ்ய வர்க்கத்தினன் தான் சொல்கிற வார்த்தையைக் கேட்க மாட்டான் என்று பராசுர மஹரிஷியே சொல்கிறார். ஆகையினாலே, சர்வ பிராணிகளிடத்திலேயும் நாம் அன்போடு இருக்க வேண்டும். அதுதான் பூத தயா.

'சர்வ பூத தயா புஷ்பம்' - இது அழகான சுலோகத்தின் ஒரு வரி.

அஹிம்ஸா பிரதமம் புஷ்பம்
புஷ்பம் இந்த்ரிய நிக்ரஹ: |
சர்வபூத தயா புஷ்பம்
க்ஷமா புஷ்பம் விசேஷத: ||

தியானம் புஷ்பம் தபம் புஷ்பம்
ஞானம் புஷ்பம் ததைவச |
ஸத்யம் அஷ்ட பிதம் புஷ்பம்
விஷ்ணோ: ப்ரீதி கரம்பவேத் ||

என்று விஷ்ணுவுக்குப் ப்ரீதியான எட்டு புஷ்பங்கள் சொல்லப்படுகின்றன. அதிலே ஸர்வ பூத தயா புஷ்பம் - ஸர்வ ஜீவன்களிடமும் ப்ரியமாக இருக்க வேண்டும் என்பதை உணர்த்துகிறது.

ஹோமகுண்டத்துக்குப் பக்கத்திலே பரிஸ்தரணம் என்று தர்பங்கள் போடப்பட்டிருக்கும். அதற்குப் பக்கத்திலேயே 'பரிதி' என்று ஸமித்தினால் அமைத்து வைக்கப்பட்டிருக்கும்.

பரிஸ்தரணம் – தர்பங்கள் எதற்கு என்றால், முப்பத்து முக்கோடி தேவர்கள் வந்து உட்காருவதற்கு தர்பாஸனம் அது. அதிலே வந்து அவர்கள் சுற்றிவர உட்காருகிறார்கள். பரிஸ்தரணத்துக்கு வெளியிலே பூத கணங்களெல்லாம் வந்து உட்கார்ந்திருக்கின்றன. அதற்கப்புறம் தான் மனுஷ்யகணமான நாமெல்லாம் உட்கார்ந்திருக்கிறோம்.

ஹோமம் பண்ணுகிற போது தேவகணங்களெல்லாம் வந்து ஹவிஸை வாங்கிக் கொண்டு போகின்றன. பூத கணங்களெல்லாம் உட்கார்ந்திருக்கிறது. பாருங்கள்... அவை அப்படியே பார்த்துக் கொண்டிருக்கின்றன. 'நமக்குக் கொஞ்சம் கிடைக்காதா, நமக்குக் கொஞ்சம் கிடைக்காதா' என்று பார்க்கின்றன!

அந்த அக்னி பகவான் என்ன பண்ணுவான், ஹோமம் பண்ணுகிற அத்வர்யுவினுடைய கையைக் கொஞ்சம் தட்டி விட்டு, ஹவிஸ்ஸானது ஹோமம் பண்ணுகிற அக்னியிலே விழாமல், அதற்கு வெளியே போய் விழும்படியாகப் பண்ணி விடுவான்! அந்த மாதிரி வெளியிலே விழுந்ததை, 'ஐயோ, வெளியிலே விழுந்து விட்டதே' என்று எதிரிலே உட்கார்ந்திருக்கிறவர் எடுத்துத் திரும்பவும் அக்னியிலே போட்டால், யக்ஞம் கெட்டுப் போய்விடும் என்கிறது சாஸ்திரம். அந்த ஹோம குண்டத்திலே எச்சிலை உமிழ்வதற்குச் சமம் அது!

ஏனென்றால், அக்னி பகவானே அந்த பூத கணங்களுக்கு என்று விட்டுக் கொடுக்கிறான். அவர்

களுக்கு அது கிடைக்க வேண்டும் என்பதற்காகத் தடுத்து வெளியிலே விழ வைக்கிறான்.

ஆகையினாலே, எப்படி எப்படி யக்ஞம் கெடுகிறது என்பதைக்கூட சாஸ்திரம் எடுத்துச் சொல்கிறது. அதை நாம் ஜாக்கிரதையாகப் பார்க்க வேண்டும்.

ஆகையினாலே பூதகணங்களுக்குப் பண்ண வேண்டிய அந்த பூத யக்ஞத்தையும் நாம் செய்ய வேண்டும் அதற்கடுத்து விசேஷமாக மனுஷ்ய யக்ஞம்!

அதிதிகள் வீட்டுக்கு வந்தால் அவர்களுக்குப் பண்ணவேண்டிய அன்னதானம் ரொம்ப முக்கியம். யாத்ரிகர் வந்தால், அவரை நீ யார்?' என்று கேட்கக் கூடாது! யார் 'பசி' என்று வந்தாலும் அன்னதானம் பண்ணு... எல்லா தானத்தைக் காட்டிலும் பூரணமான தானம் அன்னதானம். ஏனென்றால், போதும் என்று திருப்தியாகச் சொல்கிற தானம் அது ஒன்றுதான். பூரண திருப்தி! மற்ற விஷயங்களிலே இது இல்லையே!

ஒருத்தரிடத்திலே ஐந்நூறு ரூபாய் கொடுத்து விட்டு, 'என்ன சுவாமி, திருப்திதானே?' என்றால், 'ரொம்ப திருப்தி, ரொம்ப திருப்தி' என்று அவருடைய வாய் சொல்கிறது. ஆனால் மனசு என்ன கேட்கிறது...? ஆயிரம் கொடுக்கக் கூடாதா?' என்கிறது. அப்படியானால் அது ஆயிரத்தில் திருப்தி அடைந்து விடாது. இன்னமும் மேலே விழையும் என்பது தெரிகிறது. திரவியத்திலே திருப்தியே ஏற்படாது உலகத்திலே, அன்னதானத்திலே மட்டும்தான் அந்தத் திருப்தி ஏற்படும். ஆகையினாலே, அன்னதானம் விசேஷம்.

ஆயிரம் யானைகளை தானம் பண்ணுவதைக் காட்டிலும், நூறு குதிரைகளை தானம் பண்ணுவதைக் காட்டிலும், அன்னதானம் விசேஷம். ஸர்வ மனுஷ்ய வர்க்கத்துக்கும் அது திருப்தி அளிக்கிறது.

**ய**க்ஞங்களின் மூலம் தேவதா ஆராதனம், பகவதாராதனம் நடக்கிறது என்று பார்த்தோம். அடுத்தது ரிஷி தர்ப்பணாதிகளெல்லாம் பண்ண வேண்டும். அதற்கும் மேலே நாம் செய்ய வேண்டியது பிரும்ம யக்ஞம்.

பிரம்மம் என்றால் வேதம், பிரதிபலனை எதிர்பார்க்காமல், ஆறு அங்கங்களுடன் கூடிய வேதத்தை அத்யயனம் பண்ண வேண்டும். அத்யயனம் பண்ணி, அந்த வேதத்தை நித்யம் தன் கிருஹத்திலே ஒரு பிரசனமாவது பாராயணம் பண்ண வேண்டும். இதற்குத் தான் பிரும்ம யக்ஞம் என்று பெயர். அது கடமை. அப்படி நித்யம் பணணுகிற பாராயணம் பிரதிப் பிரயோஜனத்தை எதிர்பாராததாக இருக்க வேண்டும். அவ்வாறு பண்ணினால் என்ன கிடைக்கும்...?

'தொழுது முப்போதும் உன் அடிவணங்கித்
தூமலர் தூவித் தொழுது ஏத்துகின்றேன்
பழுது இன்றிப் பாற்கடல் வண்ணனுக்கே
பணி செய்து...'

வாழும் உயர்நிலை-ஆண்டாள் சொன்ன உயர்நிலை கிடைக்கும்.

**சி**ல பேர் மஹான்கள் – பரம ஏகாந்திகள் அவர்கள் தாங்கள் இருக்கிற இடத்தை விட்டுவிட்டு எங்கேயும் போக மாட்டார்கள். அஜகர வ்ருத்தி என்று பெயர். அஜகரம் என்றால் மலைப்பாம்பு. அது இருந்த இடத்திலிருந்தபடியே உணவு கொள்ளும். தானாகப் பிரயத்தனம் பண்ணிப் போகாது. அந்த மாதிரி மகான்கள் எங்கேயும் போகமாட்டார்கள்.

சுவாமி தேசிகன் வைராக்கிய பஞ்சகம் என்கிற ஸ்தோத்திரத்திலே சொல்கிறார்... 'அஹஹ' அது என்ன வயிறு! அப்படி ஒரு வயிறா?' என்று கேள்வி எழுப்புகிறார்.

நிலத்திலே அறுவடை ஆன உடனேயே தானியங்களெல்லாம் கீழே சிந்தியிருக்கும். அதைப் போய் எடுத்துக் கொண்டு வந்து, தானியத்தைச் சாப்பிடுவார்கள் சில மகான்கள். ஆற்றிலே தண்ணீர் ஓடுகிறது. தீர்த்தத்தை அள்ளிப் பருகினால் தாகம் நீங்கும். மான ஸம்ரக்ஷணத்துக்கு ஒரு முழம் வஸ்திரம் போதாதா...? அதை விட்டு விட்டு இந்த வஸ்திரத்துக்காகவும், இந்த தீர்த்தத்துக்காகவும், இந்த அன்னத்துக்காகவும் ஒருத்தரிடம் போய் இந்திரன் என்றும் சந்திரன் என்றும் சொல்லி மானுடனைப் பாட மாட்டேன்' என்கிறார் சுவாமி தேசிகன்.

அந்த மாதிரி மகான்கள் – வைராக்கிய சீலர்கள் இருக்கிற இடத்துக்குத் தேடிக் கொண்டு போய் நாம் கொடுக்க வேண்டும். பிரும்ம யக்ஞம் பண்ணுகிறவர்களும் அப்படிப்பட்ட மகான்கள்தான். அவர்கள் இருக்கிற இடத்தை தேடிப் பொருள் தானாக ஓடி வருமாம். அவர்கள் செல்லும் இடமெல்லாம் சிறப்பு.

ஆனால், ஒருவன் பொருளை விரும்பி அதன் பின்னால் ஓடினான் என்றால், அது அவனை விட்டு ஓடிக் கொண்டே இருக்கும். கிடைக்கவே கிடைக்காது. 'வேண்டாம்' என்று அவன் உட்காருகிற போது, அதுவே அவனை நாடி ஓடி வரும்.

இதைத்தான் உபநிஷத் நமக்குச் சொல்கிறது. காமத்தை விட்டவனைப் பார்த்து...ஆசையெல்லாம் வந்து வணங்கி நின்றதாம். 'நீ என்ன சொல்கிறாய்? உனக்கு என்ன வேண்டும்? சொல்லு... நாங்கள் அதை நடத்திக் கொடுக்கிறோம்' என்று அவனைக் கொண்டாடுகின்றன காமங்கள்!

இந்த நிலையைச் சுலபத்தில் அடைந்து விட முடியுமா...? ரொம்ப கஷ்டமான நிலை அது?

# 10

"பூதாத்மா பரமாத்மாச முக்தானாம் பரமாகதி:" என்று சஹஸ்ரநாமத்தில் வருகிறதல்லவா...? அந்த பரமாத்மா யார்? அவனை அவ்வாறு அழைப்பதற்குக் காரணம் என்னவென்று கேட்டால், இந்த ஐந்து மஹா யக்ஞங்களிலேயும் அவன் இருக்கிறான். தேவதா யக்ஞம், பூத யக்ஞம், பிரும்ம யக்ஞம், மனுஷ்ய யக்ஞம், பித்ரு யக்ஞம் என்று எது பண்ணினாலும் அங்கு அவன் உள்ளான். அவற்றின் பலனையும் அவனே கொடுக்கிறான். அவ்வாறு கொடுப்பதனாலே அவன் பரமாத்மா.

'ஐந்தும் ஐந்தும் ஐந்துமாய் அவன் இருக்கிறான்' என்கிறார் ஆழ்வார். அப்படியானால் மற்றொரு ஐந்து என்ன...?

நாம் சாப்பிடுவதையே பெரிய யக்ஞம் என்கிறது வேதம். சாப்பிடுவது வெறுமே உடம்பை வளர்த்துக் கொள்வதற்காக அல்ல... நாராயண உபநிஷத்தின் கடைசி அன்வாகம் என்ன சொல்கிறது பாருங்கள்...

'ஒரு யக்ஞம் பண்ண வேண்டுமானால் அதற்கு இடம் வேண்டாமா? இவ்வளவு பெரிய இடத்தைக் கொடுத்திருக்கிறார் பரமாத்மா... இந்தச் சரீரம் தான் யக்ஞத்துக்கான இடம் - நமது சரீரம்!

கீதையின் பதிமூன்றாவது அத்தியாயத்தில் 'இந்த சரீரம் க்ஷேத்திரம்' என்று சொல்கிறான் பகவான்.

யக்ஞம் பண்ணக் கூடிய க்ஷேத்திரம் நம் சரீரம். இந்த யக்ஞ பூமியில், யக்ஞ வாடிகைக்கு ஒரு ஹோம குண்டலம் வேண்டாமா...? அதையும் வைத்திருக்கிறான். பகவான், எவ்வளவு பெரிதாக வைத்திருக்கிறான் பாருங்கள்...? நமது வாய்தான் ஹோமகுண்டம். அதில் அக்னி - ஜிஹ்வா! நாக்கு இருக்கிறதே அது அக்னி!

அப்புறம் யக்ஞத்திலே பிரும்மா வேண்டுமே? பிரும்மாவாக இரண்டு நேத்திரங்கள் உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கின்றன.

ஹோமம் பண்ண வேண்டுமானால் நீண்ட இரண்டு கரண்டிகள் வேண்டும். அதற்குத்தான் பகவான் நமக்கு இரு நீண்ட கைகளைக் கொடுத்திருக்கிறான். ஷ்ருக், ஷ்ருவம் என்று இந்தக் கரண்டிகளுக்குப் பெயர்.

இலையை ஒரு கையாலே பிடித்துக் கொள்ள வேண்டும். பிடித்துக் கொண்டு ‘பிராணாய ஸ்வாஹா, அபானாய ஸ்வர்ஹா! தயானாய ஸ்வாஹா என்று பிராண ஆஹுதி ஆன பிற்பாடு, இந்தக் கையை அலம்பிக் கொள்ள வேண்டும். அதன் பிறகுதான் சாப்பிடலாம். இது நமக்குள்ளே இருக்கிற பஞ்சபூதங்களுக்கு ஆஹுதி. ஆஹுதி என்றால், இரண்டு பருக்கை சாதம் எடுத்து, பல்லில் படாமல் போட்டுக் கொள்ள வேண்டும். பெரிசு பெரிசாகப் போட்டு விழுங்கக் கூடாது.

ரொம்ப அழகாகச் சொல்லியிருக்கிறது உதாரணம். கிருஷ்ணாவதாரத்திலே...பூதனையைப் பிராணாஹுதி ஸ்தானத்தில் தான் வைத்து ஸம்ஹாரம் பண்ணினானாம் பகவான்!

‘பெரிய அசுரக்கூட்டங்களைப் பின்னால் முடிப்ப தற்கு இது சின்ன ஆரம்பம் என்பது போல!

ஆகவே பிராணாஹுதி இல்லாமல் சாப்பிடக் கூடாது. சிராத்தத்தன்று கடைசியிலே சொல்வார்கள். இந்த மந்திரம் ரொம்ப விசேஷமான மந்திரம்... இந்த ஆத்மாஹுதிக்காக, பிராணாஹுதிக்காக பிராணபான, தியான, உதான, ஸமானாதி வாயுக்கள் உள்ளுக்குள்ளே நல்ல முறையில் இருக்க வேண்டும். இதற்கெல்லாம் உப திருஷ்டாவான எம்பெருமானுக்கு – அந்தர்யாமிக்கு – நிவேதனம் என்று மந்திரம் சொல்லி, அந்த எண்ணத் தோடு சாப்பிட வேண்டும். அவ்வாறு சாப்பிடவில்லை யானால் அப்படிப்பட்டவன் பாபத்தையே உண்கிறான். எம்பெருமானுக்கு நிவேதனமாகத்தான் சாப்பிட வேண்டும். உள்ளே அவன் இருக்கிறான் என்கிற எண்ணத்தில் தான் சாப்பிட வேண்டும்.

ஒரு முறை கோபஸ்த்ரீகளெல்லாம் வெண்ணெய், பால், தயிர் விற்றுவிட்டுத் திரும்ப வருகிறார்கள். பிராதக்ஷ காலம் இவர்கள் விற்கப் போனபோது, யமுனை நதி வற்றியிருந்தது. ஆனால் திரும்பி வருகிறபோது, இரு கரையும் தொட்டுப் புரண்டு ஓடுகிறது.

என்ன பண்ணுவது?... கோகுலத்துக்குத் திரும்பிப் போயாக வேண்டும். குழந்தைகளெல்லாம் அழுமே! பசு கன்றெல்லாம் ஊட்ட விட வேண்டுமே? என்ன பண்ணுவது? ரொம்ப வியஸனம் அவர்களுக்கு...

அப்போது யமுனைக் கரையிலே வியாஸர் உட்கார்ந்திருந்தார். அவரைப் பார்த்தவுடனே ரொம்ப தைரியம் வந்துவிட்டது கோபஸ்த்ரீகளுக்கு. கிட்டே போய், காலில் விழுந்து "சுவாமி! எங்களை எப்படியாவது அக்கரை சேர்க்க வேண்டும். நீங்கள்தான் அதற்கு வழி சொல்ல வேண்டும்" என்கிறார்கள்.

அதற்கு வியாஸர் பதில் சொல்வதைக் கேளுங்கள்!.



"ரொம்பப் பசிக்கிறது, உங்களிடம், விற்றது போக பால், தயிர் வெண்ணெய் மீதியிருந்தால் கொடுங்களேன்..." என்கிறார்.

சில பேர் அவருக்கு வெண்ணெய் கொடுத்தார்கள்: சில பேர் பால், சிலர் தயிர்,... எல்லாவற்றையும் தவறாமல் சாப்பிட்டார். சாப்பிட்டுவிட்டு யமுனையில் போய் கை அலம்பிக் கொண்டு ஏப்பமும் விட்டார்.

அப்புறம் அந்த யமுனையைப் பார்த்து, "சூரிய புத்ரியே! காலிந்தி! யமுனா நதி! நான் இன்று சுத்த உபவாஸம் இருந்தது, மெய்யானால் இவர்களுக்கு வழி விடு" என்றார்!

ஜலம் இரண்டு பக்கமும் விலகி நின்றுவிட்டது! முன்னே நடந்து போகிறார் வியாஸர். கோபஸ்த்ரீகள் எல்லோரும் பின்னால் நடந்து போகிறார்கள். அக்கரை போய்ச் சேர்ந்தவுடன் யமுனை ஜலம் கூடிக் கொண்டது!

அத்தனை பேரும் கூடையைக் கீழே வைத்துவிட்டுக் கேட்கிறார்கள்.

"பெரியவர்கள் தப்புப் பண்ணினால் தோஷம் இல்லை போலிருக்கிறது..." என்கிறார்களாம்.

"அதென்ன...?" என்றார் வியாஸர்

"என்ன அநியாயம் இது! இத்தனை பால், வெண்ணெய், எல்லாத்தையும் வாங்கிச் சாப்பிட்டுவிட்டு, 'நான் இன்றைய தினம் உபவாஸம் இருந்தது உண்மை யானால்...' என்று நீங்கள் சொல்கிறீர்கள்! நீங்கள் தான் சொல்கிறீர்கள் என்றால், அந்த யமுனைக்காவது புத்தி இருக்க வேண்டாமா? நீங்கள் சொன்னது போல் நாங்கள் சொன்னால் அது கேட்குமா...? உங்களுக்கு மட்டும் வழி விட்டு நிற்கிறதே!"

"நான் பொய் சொல்லவில்லையே! இன்று நான் உபவாஸம் இருந்தது மெய்தானே" என்றார் அவர். உரையாடல் தொடர்ந்தது:

"இவ்வளவையும் சாப்பிட்டுவிட்டு உபவாஸமா!"

"நானா சாப்பிட்டேன்?..."

"பின்னே யாரு சாப்பிட்டார்கள்?"

"உள்ளுக்குள்ளே இருக்கிற அந்தர்யாமியான பகவானுக்கு நிவேதனம் பண்ணினேன். நானா சாப்பிட்டேன்!" என்று சொல்லிவிட்டார் வியாஸர்!

ஆகையினாலே, வியாஸருடைய ஞானம் எல்லாம் பகவானுக்கு என்கிற நிலைத்த நிலையிலே இருக்கிறதே யொழிய, தான் சாப்பிடுகிறோம், தனக்காகச் சாப்பிடு கிறோம் என்ற அறிவே இல்லையே!

அந்த நிலையில் இருப்பவர்களுக்குத் தான் இது சித்திக்குமேயொழிய - யமுனை வழிவிடுதல் போன்றவை நடக்குமேயொழிய -இது என்னது? அது என்னது? அது ஏன் இப்படி இருக்கிறது...? என்று வெறுமே கேட்பதில் அர்த்தமில்லை.

இதனால்தான் சொல்கிறது சாஸ்திரம் - உணவிலே தோஷம் ஏதேனும் இருந்தால், நிவேதனம் பண்ணுவதற்கு முன்னாலேயே கவனிக்க வேண்டும் என்று. அன்னத்திலே ஒரே கல் இருக்கிறது. அப்போதுதான் - சாப்பிடுகிற சமயத்தில் 'இப்படிக் கல்லா?' பார்த்துப் பண்ண வேண்டாமா?' என்று பத்னியை ஒருத்தர் நிந்திக்கிறார். இது மொத்தம் பகவானுக்கு நிவேதனம் ஆகியிருக்கிறது... பகவத் பிரசாதம் என்று கொடுத்தால் அதில் தோஷம் சொல்லலாகுமா?

தோஷம் தென்படுமானால், பகவானுக்கு நிவேதனம் பண்ணுவதற்கு முன்பாகவே அதைப் பார்த்து நீக்க வேண்டும் என்று சாஸ்திரம் வலியுறுத்துகிறது.

ஆகையினாலே, பிராணா, அபானா, த்யானாதி பஞ்சாஹுதிகள் ரொம்ப முக்கியம்.

சாப்பிடுகிற சமயத்திலே பரிசேஷணம் பண்ணி, மந்திரம் சொல்லி, அக்னிஹோத்ர பிரகரணத்திலே வருகிற மந்திரம். அது பகலுக்கு ஒன்று இரவுக்கு ஒன்று என தனித்தனியே இருக்கிறது... அதைச் சொல்லி ஆஹுதி பண்ணித்தான் உணவு கொள்ள வேண்டும்.

இப்படி பகலுக்கு ஒன்று இரவுக்கு ஒன்று என்று மந்திரங்கள் இருப்பதால், என்ன தெரிகிறது... மத்தியானம் சாப்பிடணும். ராத்திரி சாப்பிடணும்... மத்தியானத்துக் குள்ளே நடுவிலே சாப்பிடக்கூடாது. மத்தியானத்துக்கும் ராத்திரிக்கும் நடுவிலே சாப்பிடக் கூடாது. இடை பாரணை, கடை பாரணையெல்லாம் கூடாது.

சன்னியாசிகள் இருக்கிறார்கள் பாருங்கள்... அவர்கள் ஒரு நாளைக்கு எட்டு கவளம்தான் சாப்பிட லாம். எட்டு பிடி! அதற்கு முன்னே இருக்கிற வானப்பிரஸ்தாசிரமத்தார், ஒரு நாளைக்குப் பதினாறு

பிடி சாப்பிடலாம்... அதற்கு முன்னே கிருஹஸ்தர்கள் இருக்கிறார்கள் பாருங்கள். அவர்கள் முப்பத்தியிரண்டு கவளம் சாப்பிடலாம். இந்தக் கணக்கு ஒரு வேளைக்கு என்று நினைத்துவிடக் கூடாது - இரண்டு வேளையும் சேர்த்து . இதுதான்! மத்தியானம் பதினாறு, ராத்திரி பதினாறு என்று இரண்டு வேளையும் சேர்த்து முப்பத்திரண்டு கவளம்.

ஆகவே நாம் ஆகார நியமங்களிலும் ரொம்ப ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். இந்தக் காலத்திலே, அந்த நியமங்களுக்கெல்லாம் லௌகீகமாகப் பெய ரெல்லாம் போட்டு, இதை இதை இப்படியிப்படிச் சாப்பிட வேண்டும் என்று சொல்கிறோம். கணக்கு பண்ணுகிறோம். இதை யெல்லாம் சாஸ்திரமே சொல்லி யிருக்கிறது. புதிதாக நாம் இன்று கண்டுபிடித்துவிட வில்லை.

# 11

இரண்டு வேளைதான் சாப்பிட வேண்டும். ஒரு வேளைக்கு பதினாறு பிடிதான் சாப்பிட வேண்டும் என்று சொன்னேன். ஒரு பிரம்மச்சாரிக்கு இந்த நியமங்களெல் லாம் கிடையாது. மற்ற ஆசிரமங்களுக்குத்தான் நியமம் - இப்படியிப்படிச் சாப்பிட வேண்டும் என்று நியமம்.

கண்ட இடத்திலே சாப்பிடுவது, கண்ட பதார்த்தங் களைச் சாப்பிடுவது, இரண்டு நாள் வைத்திருந்து, சாப்பிடுவது - இதெல்லாம் கூடாது.

முதல் நாள் உடுத்திய வேஷ்டியை மறு நாள் உடுத்தக் கூடாது. பல சூரியன் பார்த்த வஸ்திரம் கூடவே கூடாது. வஸ்திரத்துக்கு சுத்தி ஏற்பட வேண்டுமானால் அன்றன்றைக்கு அதை நனைத்து, உலர்த்தி, உலர்ந்த பிற்பாடு உடுத்திக் கொண்டு சிராத்தாதி கர்மாக்கள் பண்ண வேண்டும். முதல் நாளே உலர்த்தக் கூடாது என்கிறது சாஸ்திரம்.

இதற்கே இவ்வளவு தோஷம் சொன்னால், சாப்பிடுகிற விஷயத்தில் எவ்வளவு ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்று எண்ணிப் பாருங்கள்.

சாப்பிடுவதிலே கட்டுப்பாடோடு, அனுஷ்டானத் தோடு இருந்துவிட்டால், அப்படிப் பட்டவர்களிடம் ஒரு தோஷம் நெருங்குமா? திடகாத்திரமாக வஜ்ரவத் சரீரத்தோடு இருப்பார்கள் அவர்கள். அனுஷ்டான

லோபம் ஏற்பட ஏற்பட, சரீரத்திலே பலவிதமான தோஷங்கள் ஏற்படுகின்றன.

ஆதலால்தான் பிராணாஹுதி பரிசேஷணம் எல்லாம் ஏற்படுத்தியது. 'அமிர்தத்தால் இந்த அன்னத்தை மூடுகிறேன்' என்று ஜபித்துவிட்டு, தீர்த்தத்தைக் கையிலே வாங்கிக் கொண்டு சாப்பிடும்போது, அது பகவத் அர்ப்பணமாகிறது. கையிலே வாங்கிக் கொள்ளும் ஜலம் மொத்தத்தையும் சாப்பிடக்கூடாது. இலையைச் சுற்றி விட்டு, கொஞ்சம் இலைக்குப் பக்கத்திலேயும் விட வேண்டும். எதற்காக அப்படி ஜலம் விடுகிறோம்... என்று கேட்டால் காரணம் இருக்கிறது...

ரௌரவம் என்று ஒரு நரகம். அதிலே 'ருரூ என்று ஒரு பிராணி, நீளமாக முதலை மாதிரி. ஆனால், ரம்பம் மாதிரி பற்கள்! அந்தப் பற்கள் அப்படியே ஒன்றுக் கொன்று பிடித்துக் கொண்டு நிற்கும்! யம படர்கள், இந்த நரகத்துக்குப் பாபாத்மாக்களை இழுத்துக் கொண்டு போவார்கள். கீழே பள்ளத்தாக்கிலே ஆயிரம் ருரூ இருக்கிறது. அதிலே பிடித்துத் தள்ளுகிறார்கள். அத்தனையும் கடித்து அவனை ஹிம்ஸை பண்ணும். அதே ரௌரவத்திலே பெரிய பாலைவனம் இருக்கும். சூர்ய ரச்மியினால் மணல் அங்கே கொதிக்கிறது! ஒரே சூடு. அதிலே போட்டுப் புரட்டியெடுக்கிறார்கள் யமபடர்கள் 'தாகம்! தாகம்' என்று தவிப்பார்கள் இவர்கள். யமபடர்கள் வாயருகே தண்ணீரைக் கொண்டு போய் ஜலத்தைக் காட்டுவார்கள். அவன் குடிப்பதற்குக் கிட்டே வருகிற போது கீழே கொட்டி விடுவார்கள். பாவம், கஷ்டப்படுகிறானே, தண்ணீர் கொடுப்போமே என்று கொடுக்கவே மாட்டார்கள்.

அந்த மாதிரி கொடுத்தால் பாரபட்சம் கடமையைத் தான் அவர்கள் செய்வார்கள். யமனின் தலைக்கு மேலே

மயிரிழையில் கட்டிய ஒரு பர்வதம் தொங்குகிறது. அவன் ஆசனத்துக் கீழே நெருப்பாறு ஓடுகிறது' யாருக்காவது தப்பாக, பக்ஷபாதமாகத் தீர்ப்பு அவன் சொன்னா னானால், மலை அவன் தலையிலே விழுந்து அவன் நெருப்பிலே விழ வேண்டும்.

இதுவரைக்கும் யமன் அப்படி விழுந்ததில்லை. பாரபட்சமே அவனிடம் கிடையாது. என்ன உண்டோ அதை நடத்தியே தீருவான்.

ஆகவே, யம படர்கள் ஓர் ஆத்மாவை இந்த மாதிரி நடத்துகிறார்கள் - அவன் "தாகம் தாகம்" என்கிறான். அதனால் நாம் இப்போது சாப்பிடுகிறபோது, உலகத்திலே இருக்கிறவர்களுடைய சௌக்கியத்தை மட்டும் வேண்டுவ தில்லை. 'இப்படி நரகத்திலே போய்க் கஷ்டுப்படு கிறார்களே, அவர்களுக்கும் இதோ விடுகிறேன் இந்த ஜலம். அவர்களுக்கு இது பூரண நரக சாந்தியை உண்டு பண்ணட்டும்...' என்று வேண்டுகிறோம்.

நரகத்திலே அங்கே நஷ்டப்படுகிறவர்கள், 'அடடா? இப்படி தீர்த்தத்தை விடுகிறானே... இவன் சௌக்கியமாக இருக்கட்டும். பூலோகத்திலே நல்ல மழை பொழியட்டும், நல்ல தீர்த்தம் கிடைக்கட்டும்' என்று அனுக்கிரஹம் பண்ணுகிறார்களாம்.

இப்போது இந்த கர்மாவையே பிராணாஹுதி கர்மாவையே நாம் விட்டு விட்டோம் என்று வைத்துக் கொள்ளுங்கள். ரௌரவத்தைக் காட்டிலும் மோசமாகப் போய்விடும். ஏனென்றால் தீர்த்தமே நமக்குக் கிடைக்காது என்று சாஸ்திரம் சொல்கிறது. ஆகவே பரிசேஷண கர்மாவானது முக்கியம்.

பூர்வ காலத்திலே ஆசாரத்துக்காகத் தீர்த்தத்தைக் கையிலே எடுத்துக் கொண்டு வருவார்கள். இப்போது

தீர்த்தம் இல்லாமல் யாருமே எங்கேயுமே போவதில்லை. நல்ல தீர்த்தம் கிடைப்பதில்லை. எதைச் சாப்பிட்டால் என்ன ஆகுமோ என்று பயம் ஏற்படுத்துகிறது.

கலியுகத்திலே – நான்கு லட்சத்து முப்பத்திரண்டாயிரம் வருஷத்து, முதலிலே – வரவேண்டியதெல்லாம் இப்போதே – ஐயாயிரம் வருஷத்துக்குள்ளாகவே வந்துவிட்டது. கலியுக முடிவிலே என்னென்ன ஆகும். என்று மஹரிஷிகள் சொல்லியிருக்கிறார்களோ, அதெல்லாம் ஐயாயிரம் ஆண்டுக்குள்ளேயே வந்துவிட்டது. அப்படியானால், இன்னும் என்னவெல்லாம் வருமோ தெரியாது! அவ்வளவு கஷ்டங்களை அனுபவிக்க இருக்கிறோம் உலகத்திலே.

**க**ர்மானுஷ்டானம் ரொம்ப முக்கியம் என்பதைத் தான் ஆழ்வார். 'ஐந்துமைந்துமைந்துமாய்' என்று சொன்னார். அவ்வளவு கடமைகள் நமக்கு இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

அடுத்த ஐந்து என்ன...? பஞ்சாக்னி வித்யா என்று உண்டு. அந்த பஞ்சாக்னி வித்யையாக பரமாத்மாவே இருக்கிறான்.

கார்ஹபத்யம் என்பதுதான் பிரதான அக்னி குண்டம். சமீ விருக்ஷம் என்கிற விருக்ஷத்திலிருந்து அரணி பண்ணி கடைந்து, அக்னி ஏற்படுத்த வேண்டும்.

சமீ விருக்ஷம் என்பது வன்னி மரம், பஞ்ச பாண்டவர்கள், விராட நகரத்திலே ஒரு வருட காலம் அக்ஞாதவாஸம் பண்ணினார்கள் அல்லவா, அப்போது சமீ விருக்ஷத்திலே தான் தாங்கள் ஆயுதங்களையெல்லாம் வைத்துவிட்டுப் போனார்கள். அக்னி அதிலே இருக்கிறது. யக்ஞத்துக்கு வேண்டிய அக்னி விசேஷமாய் இருக்கிறது.

ஆகையினால்தான் அதிலிருந்து அரணிக்கட்டை எடுக்கப்படுகிறது.

யக்ஞம் பண்ணுகிறபோது அத்வர்யூ பெரும் சபையிலே அறிவித்துச் சொல்லி விட்டுத்தான் கடைவார்: "அக்னியைப் பெற அரணியைக் கடைகிறோம்..." நீங்கள் எல்லோரும் சாவதானமாகக் கையைக் கூப்பிக் கொண்டு பிரார்த்தனை பண்ணுங்கள்..." என்று அறிவிப்பார். அக்னி சீக்கிரமாக வரவேண்டும் என்பதற்காகப் பிரார்த்தனை.

கடைந்து கொண்டேயிருக்கிறபோது அக்னி வந்துவிடும். அப்போது ஏதோ இருபது லட்சம் பணம் கிடைத்த மாதிரி எகிறிக் குதிக்க வேண்டும். அப்புறம் இன்னும் பெருங்குரலில் சொல்ல வேண்டும்.

**அக்னயே ஜாதாயானு ப்ரூஹி** - அந்த அக்னியை ரொம்ப ஜாக்கிரதையாக எடுத்துக் கொண்டு வந்து, கார்ஹபத்ய அக்னி குண்டத்திலே பிரதிஷ்டை பண்ண வேண்டும். அதிலே ஹோமங்களெல்லாம் நடக்கும். அதற்கப்புறம் அதிலேயிருந்து எடுத்து ஆஹவநீயம். அதிலேயிருந்து எடுத்து தக்ஷிணாக்னி என்று வெவ்வேறு அக்னிகளை உண்டாக்க வேண்டும்.

இங்கே ஜன்ய - ஜனக பாவத்துடன் அக்னி உண்டாக்கப்படுகிறது. ஜனகன் யாரென்றால் கார்ஹபத்ய அக்னி. ஜன்யம் இருக்கிறதே அது ஆஹவநீயம், தக்ஷிணாக்னி. இந்த இரண்டும் புத்ர ஸ்தானத்திலே - பிள்ளை ஸ்தானத்திலே இருக்கிறது. காருகபத்யம்தான் தந்தை ஸ்தானத்திலே இருக்கிறது. இதிலேயிருந்து தான் அதிலே சேர்க்க வேண்டும்.

ஒரு சமயம் யக்ஞத்தில் என்ன ஆயிற்று. கார்ஹபத்ய அக்னி குண்டம் அணைந்து போயிருந்தது. அதிலேயிருந்து எடுத்துச் சேர்க்கப்பட்ட ஆஹவநீயம், தக்ஷிணாக்னியிலே

அக்னி எரிந்து கொண்டிருக்கிறது. சாதாரணமாக என்ன செய்வோம்...? பிரதான ஹோம குண்டத்திலே ஹோமம் கட்டாயம் இருக்க வேண்டும் என்று எண்ணி, ஜன்ய குண்டத்திலேயிருந்து எடுத்து அதை ஏற்ற முயற்சி செய்வோம். ஆனால், அதைத்தான் கூடாது என்கிறது சாஸ்திரம்!

அக்னியைக் கடன் வாங்கக் கூடாது. அப்படிச் செய்தால் ஒரு கிருஹத்திலே அழுகைக் குரல் கேட்கும் என்கிறது. அக்னியை, சிலர் பக்கத்து கிருஹத்திலே போய்க் கடன் வாங்கிக் கொண்டு வருவார்கள். கிராமங்களிலே அது... உண்டு. நகரங்களில் இருக்காது, ஆனால் சாஸ்திரம் இதை ஏற்பதில்லை.

**வாயோர் அக்னி :** வாயுவிலிருந்து அக்னி தோன்றியது. அக்னியே வாயுவாக இருக்கிறது. இப்போது பஞ்ச பூதங்களிலும் அக்னி இருக்கும்படியான நிலையைப் பார்க்கிறோம்.

அக்னியை பிறரிடத்தில் வாங்கிவரக்கூடாது என்று ச்ாஸ்திரம் சொல்கிறது. அல்லவா...? இலங்கையிலே ஆஞ்சநேயன் என்ன செய்தான்? அவர் கேளாமலே அவர் வாலில் அக்னியைக் கொடுத்துவிட்டார்கள். உடனே அந்த மஹா வித்வான், நவ வியாகரண பண்டிதன், யோசனை பண்ணுகிறான். அக்னியை வாங்கிக் கொள்ளக் கூடாதே. என்ன பண்ணுவது?" என்று யோசிக்கிறான்.

'ஒன்று செய்வோம்; நாம் எடுத்துக் கொண்டு போனால் தப்பு: கொடுத்தவர்களுக்கே திருப்பிக் கொடுத்துவிடுவோம்...' என்று அங்கே இலங்கையிலேயே வைத்து விட்டுப் போய்விட்டான்! அதை எடுத்துக் கொண்டு போனானா பாருங்கள்!

ஆகையினாலே அக்னியை வாங்கிக் கொண்டால் அவ்வளவு தப்பு. அப்படி சாஸ்திரம் வரையறுத்திருக்கிறது.

அக்னியிடத்திலே ரொம்ப ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். எங்கெங்கே அக்னி இருக்கிறது என்று பார்த்தால்.... அது எங்கும் கிடைக்காது போனாலும், இருக்கக்கூடிய இடம் ஒன்று உண்டு.

பாணி ஹோமம் என்று பெயர் - பிராமணனுடைய வலது கரத்திலே அக்னி இருக்கிறது.

வெள்ளாடு இருக்கிறதே, அதன் காதிலே அக்னி இருக்கிறது. அரணிக் கட்டையிலே அக்னி இருக்கிறது, என்றெல்லாம் சாஸ்திரம் சொல்கிறது.

அங்கிருந்துதான் நாம் அக்னியைக் கொள்ள வேண்டும்.

அறுபது வருஷத்துக்கு முன் ஸ்ரீமத் முக்கூர் அழகிய சிங்கர் இருந்தார். சர்வ சாஸ்திர நிபுணர். அமிர்த வாக் வர்ஷி அவர்... அந்த ஸ்வாமி உபன்யாஸம் பண்ணி, 'பிராமணனுடைய வலது கையிலே அக்னி இருக்கிறது...' என்று சொல்லிக் கொண்டிருந்தார்... அப்போது ஒருத்தர் எழுந்து கேட்டார்... "நீங்கள் சொல்லிவிட்டால் ஆயிற்றா? அக்னி எங்கே இருக்கிறது, தெரியலையே!" என்றார்.

அதற்கு அழகாக பதில் சொன்னார் அழகிய சிங்கர்.

# 12

'பிராமணனின் வலது கையில் எவ்வாறு அக்னி இருக்க முடியும்...?' என்று கேள்வி எழுப்பியவரை அழகிய சிங்கர் பார்த்துக் கேட்டார்.

"வீடு பக்கத்திலே இருக்கிறதா...?"

"இருக்கிறது..."

"போய் ஒரு தீப்பெட்டியைக் கொண்டு வா அங்கேயிருந்து ?"

அவர் போய்த் தீப்பெட்டி கொண்டு வந்தார்.

தீப்பெட்டியைக் கையிலே வாங்கி, இதிலே அக்னி இருக்கிறதா ?" என்று கேட்டார் அழகிய சிங்கர்.

"இருக்கு..."

"இருக்கு என்றால் காட்டு பார்ப்போம்..."

அவரிடமிருந்த தீப்பெட்டியை வாங்கி குச்சியை எடுத்து உரசிக் காட்டினார்... அந்த மனிதர்.

"காட்டு என்றதும் உடனே உன்னால் காட்ட முடிந்ததோ...? ஒரு குச்சி எடுத்துக் கீறினீர். அப்புறம்தானே நெருப்பு கிடைத்தது? அந்த மாதிரி பிராமணன், நித்ய அக்னிஹோத்ரம் பண்ணிக் கொண்டிருந்தானானால், அவன் கையிலே அக்னி இருக்கும் என்றுதான் நான் சொன்னேன். அக்னிஹோத்ரம் என்பது குச்சியைக் கீறுகிற மாதிரியான கர்மா. அக்னி சம்பந்தத்தோடு இருக்கிறான்

பிராமணன். அக்னி காரியத்தைப் பண்ணிக் கொண்டே யிருக்க வேண்டும். கிருஹத்திலே அக்னி ஜொலித்துக் கொண்டே இருக்க வேண்டும்.

நான்கு நாள் அக்னிஹோத்ரம் பண்ணிவிட்டு, ஐந்தாம் நாள் எடுத்து வைத்து விட்டுப் போய்விடக் கூடாது. கடைசி வரைக்கும் - பிராணன் போகிற வரையிலும், பிராதஹ் காலம் அக்னிஹோத்திரம் பண்ணி, ராத்திரியும் பண்ண வேண்டும். அந்த அக்னி அப்படியே அணையாது இருக்கும்.

சின்ன வயதிலிருந்தே ஒருத்தர் அக்னிஹோத்ரம் பண்ணிக் கொண்டிருக்கிறார். ஒரு நாள் மத்தியானம் ஒரு மணிக்குத் திடீரென்று பிராணவியோகம் ஏற்பட்டுப் போய்விட்டது. ஐம்பது வயது ஆகிறது... இவரால் காக்கப்பட்டு அக்னியானது இருந்து கொண்டிருக்கிறது.

இவரால் காக்கப்பட்ட அக்னியைக் கொண்டே இவருக்குப் பிரேத சம்ஸ்காரம் பண்ணலாம். நூதனமாக ஓர் அக்னியைக் கொண்டு வரத் தேவையில்லை. இப்படி ஒரு ஸம்ஸ்காரம் நடப்பதற்குக் கொடுத்து வைத்திருக்க வேண்டாமோ!

அந்த மாதிரி மகான்கள் இந்த பாரத தேசத்திலே பூர்வ காலத்திலே இருந்தார்கள். நித்யாக்னிஹோத்ரிகள். இவர்கள் ஊரைவிட்டே வெளியில் போக முடியாது. இரண்டு காலமும் கிருஹத்திலே தவறாமல் அக்னி ஹோத்திரம் பண்ணுகிறவர்கள் எந்த ஊருக்குப் போக முடியும்...?

அக்னிஹோத்ரி என்று பசுவுக்கும் ஒரு பெயர் உண்டு. பசுவை கிருஹத்திலே வைத்திருப்பவர்கள். அதை விட்டுவிட்டு எந்த ஊருக்குப் போக முடியும்...? எங்கேயும் அனாவசியமாகப் போக முடியாது. வீணான

காரியத்திலே ஈடுபட முடியாது. கர்மானுஷ்டானத்திலே, 'ஏகாந்தமான உயர்ந்த ரீதியிலே இருக்கலாம். கர்மானுஷ்டானத்திலே பற்றுடையவர்களாக இருந்தார்கள். அந்தக் காலத்தில் அப்படிப்பட்ட உயர்ந்ததாக இருக்கும்படியான மகா யக்ஞாதிகள் பண்ணுவதற்கு, அரணி மதனம் பண்ணி காருகபத்யத்திலே அக்னிப் பிரதிஷ்டை பண்ணி, ஆகவமனீயம், தக்ஷிணாக்னி, மூன்றும் ஏற்படுத்த வேண்டும்.

இதன் பிறகு நித்யம் கிருஹஸ்தாசிரமத்திலே ஔபாஸணம் என்ற கர்மாவும் உண்டு. இப்போது மாதிரி, சிரார்த்தத்தன்று மட்டும் அதைப் பண்ணுவது கிடையாது. தினமும் அதிகாலையில் ஔபாஸனம் பண்ணுவார்கள்.

இப்போது எல்லாருடைய கிருஹத்திலும் சிராத்தம் நடக்கிறது. சிராத்ததன்று மட்டும் ஔபாஸனம் நடக்கிறது. நித்யம் ஔபாஸனம் நடப்பதில்லை. அதனால் ஒரு மந்திரம் தனியே சொல்லி, மற்ற நாளில் ஔபாஸனம் பண்ணாததற்கு தோஷம் ஏற்பட்டிருக்கும் அல்லவா...? அந்த தோஷம் போவதற்காக, பரிகார மந்திரத்துடன் கொஞ்சம் ஹிரண்ய தானமும் பண்ணி விடுகிறோம்.

ஔபாஸனம் என்பது நித்யம் பண்ண வேண்டியது. பத்னி பக்கத்திலே இருக்க வேண்டும். அவள் கையிலே அரிசியைக் கொடுக்க வேண்டும். அவளிடமிருந்து பெற்று ஹோமம் பண்ண வேண்டும். இது நித்ய கடமை. ஆனால் நித்யம் நம்மால் பண்ண முடிகிறதா...?

வைச்வதேவம் என்கிற கர்மாவை நாம் நித்யம் பண்ண வேண்டும். ஏனென்றால் நித்யம் நாம் காய்கறிகளைக் கத்தியால் நறுக்கி விடுகிறோம். அரிவாள் மணையில் திருத்துகிறோம். கிருஹத்திலே கல்யாணம் நடக்கிறதா...? மாவிலைகளைக் கொண்டு வந்து

கட்டுகிறோம். வாழைமரத்தை வெட்டி வந்து இரண்டு பக்கமும் கட்டுகிறோம்.

இந்த மாதிரி தாவர வர்க்கங்களுக்கெல்லாம் தவிர்க்க முடியாத ஹிம்ஸை பண்ணுகிறோம்.

பகவானுக்கு எதிரிலே தேங்காயை உடைக்கிறோம் - அப்படியே கத்தியால் வெட்டுகிறோம். அப்படி வெட்டக் கூடாது. வேறு இடத்திலே போய்த்தான் உடைக்க வேண்டும். கையிலே வைத்துக் கொண்டு அவனெதிரிலே கொடுவாளால் உடைக்கக் கூடாது.

ஆனாலும், இது போன்ற சிலவற்றைப் பண்ணித் தான் ஆக வேண்டியிருக்கிறது. தவிர்க்க முடியவில்லையே!

இதற்காகத்தான் வைச்வதேவம் பண்ணுவது. அதை அக்னியிலேயும் பண்ணலாம். தீர்த்தத்திலேயும் பண்ண லாம். அதற்கான உபதேசத்தைப் பெற்றுக் கொண்டு, நித்யம் பண்ண வேண்டும். 'வைச்வதேவாந்தம் கர்மா' என்று நித்யகர்மானுஷ்டானம் இந்த வைச்வதேவத் தோடுதான் முடிகிறது. அதற்குப் பிறகுதான் சாப்பிட வேண்டும். அப்போது யாராவது அதிதிகள் வருகிறார் களா என்று பார்த்துவிட்டுத்தான் சாப்பிட வேண்டும்.

வைச்வதேவம் என்கிற கர்மாவினால் என்ன போகிறது...? காய்கறிகளை நறுக்குவது மரத்தை வெட்டுவது போன்ற செயல்களின் விளைவுகள்... போகும். நாம் படுத்துக் கொண்டிருக்கிறபோது உடம்பைப் போட்டுப் புரட்டுகிறோம். அப்போது எத்தனையோ சின்னச் சின்ன ஜந்துக்களெல்லாம் மாண்டு போகின்றன- நடந்து போகிற போது எத்தனை சின்னச் சின்ன ஜந்துக்கள் மிதிபடுகின்றன...!

இதனால்தான் சன்னியாசிகள் சாதுர்மாஸ்ய சங்கல்பம் பண்ணிக் கொண்டு நான்கு மாதங்களுக்கு

வெளியே போகாமலே இருக்கிறார்கள். ஏனென்றால் நம்மைக் காட்டிலும் அவர்களுக்கு தர்மம் அதிகம். வெளியிலே சஞ்சாரம் பண்ணினால், இந்த மாதிரி சின்னப் பிராணிகளெல்லாம் மாண்டு போய் விடுமல்லவா...? அதனால் அவர்கள் நான்கு மாதங்கள் ஓரிடத்திலே இருக்க வேண்டும் என்கிறது சாஸ்திரம் – இது சன்னியாச தர்மம்.

இல்லற தர்மம் காக்க ஒருவர் வைச்வதேவம் பண்ணிக் கொண்டிருந்தார். புரோடாசம் என்று அரிசி – நெய் கொண்டு தயாரிக்கும் பதார்த்தம் பண்ண வேண்டும் அதற்கு. அதைக் கையிலே தடவினால் நல்ல சுவாசனை வரும். ரொம்ப மணக்கும்? பூனை ஒன்று, சரியாக அந்தச் சமயம் வரும்... இவர் கண்ணை மூடிக் கொண்டு மந்திரத்தைச் சொல்கிற போது, பூனை புரோடாசத்தை எடுத்துக் கொண்டு போய்விடும்! இந்த மாதிரி இரண்டு மூன்று நாள் ஏமாந்து போய்விட்டார். அப்புறம் ரொம்ப ஜாக்கிரதையாக புரோடாசத்தை மடியிலேயே வைத்துக் கொண்டார்.

பூனைக்கு இருக்கிற சாமர்த்தியத்தைப் பாருங்கள்...! அது என்றைக்காவது ஒரு பசுவுக்குப் புல்லை வாங்கிப் போட்டிருக்கிறதா? போட்டதில்லை! பசு இருக்கிற இடமாவது அதற்குத் தெரியுமா...? தெரியாது! ஆனால் நித்யம் பால் குடிக்காத நாளே இல்லை, அது! அதற்குப் பசுவும் தெரியாது. புல்லும் போட்டது கிடையாது! அனால், அது பால் குடிக்காத நாளே இல்லை! வெறுமே இருக்குமா அது? ஒரு வீடு இல்லையென்றால் இன்னொரு வீடு... ஆகையினாலே அதற்கு எங்கேயோ ஓர் இடத்திலே பால் கிடைத்துவிடுகிறது. கிருஷி (யாத்திரை) பண்ணிக் கொண்டேயிருக்கிறதல்லவா? நாமும் கிருஷி பண்ணிக்

கொண்டேயிருந்தால் என்றைக்காவது ஒரு நாள் நரகதி கிடைக்கும்! ஒன்றுமே பண்ணாமல் உட்கார்ந்திருந்தால் என்ன கிடைக்கும்...? ஆகவே பூனையைப் பார்த்துத் தெரிந்து கொள் என்றார்கள்!

பூனை இப்படி சரியாகப் புரோடாச வாசனைக்கு வந்து விடும்... வந்தவுடனே இவர் என்ன பண்ணுவார்... தடியால் அதைத் துரத்தி, வாசல் வரைக்கும் கொண்டு விட்டுவிட்டு, அப்புறம் வந்து ஔபாஸன கர்மாவைத் தொடர்ந்து பண்ணுவார்.

இவர் காலம் ஆகிவிட்டது. மாண்டு போய்விட்டார். அப்புறம் இவர் பிள்ளையுடைய காலம் வந்தது... பிள்ளையின் காலத்திலும் பூனை சரியாகப் பன்னிரண்டு மணிக்கு வரும். அவரும் தடியாலே துரத்தி வாசல் வரையில் கொண்டு விட்டுவிட்டு வருவார். ஒரு நாள் அவர் கிருஹத்துக்கு அதிதி ஒருவர் வந்தார். "அப்பா! பூனை சாதுவான பிராணி ஆயிற்றே...? அதை ஏன் துரத்தி வாசல் வரைக்கும் கொண்டு விடுகிறாய்...?" என்று கேட்டார்.

இவர் தர்க்கம் படித்தவர். இவர் சொல்கிறார். "என் அப்பா இருந்தாரே. அவர் மிகவும் சாதுவானவர். இந்தப் பூனையும் சாதுதான். அப்பா என்ன பண்ணினார்...? மத்தியானம் பன்னிரண்டு மணிக்கு இந்தப் பூனை வரும்... இந்தப் பூனையை தினமும் ஓட்டிக் கொண்டிருந்தார்... என் அப்பா பண்ணிய காரியத்தைத்தான் நான் விடாமல் பண்ணுகிறேன்..." என்றார்!

வைச்வதேவம் என்கிற கர்மாவுக்குத் தடையாக இருந்ததால் பூனையை ஓட்டினார், அப்பா. பிள்ளையோ, வைச்வதேவத்தை விட்டுவிட்டான். பூனையை ஓட்டுவதை

மட்டும் 'என் அப்பா பண்ணினார்' என்று விடாமல் பண்ணுகிறான்!

**வை**ச்வதேவம் போன்ற கர்மாக்களால் பாபங்களெல்லாம் போகிறது. நித்யம் சந்தியாவந்தனம் பண்ணினால், நம்மை அறியாமல் செய்கிற பாவங்களும் போகிறது. சாப்பிடக் கூடாத பதார்த்தங்களைச் சாப்பிடுவதால் விளையும் பாபங்கள் போகிறது.

இதற்குத்தான் வைச்வதேவம் முதலான கர்மாக்கள் சொல்லப்பட்டிருக்கிறது.

இப்படி ஔபாஸனாக்னி ஒரு பக்கம். ஒரு பக்கம் கார்ஹபத்யம், ஒரு பக்கம் ஆஹவநீயம். ஒரு பக்கம் தக்ஷிணாக்னி. நான்கு பக்கமும் நான்கு அக்னி குண்டங்கள் மேலேயிருந்து சூரியன் தகிக்கிறான் – ஐந்தாவது அக்னியாக, இந்த ஐந்து அக்னிகளுக்கும் மத்தியிலே நின்று கொண்டு ஒரு காலைத் தூக்கி மேலே வைத்துக் கொண்டு, எம்பெருமானை மேலாகாசத்திலே இருக்கிறவனை – இந்த ஐந்து அக்னிகளுக்கு நடுவிலே நின்று கொண்டு தியானம் பண்ண வேண்டும். பஞ்சாக்னி வித்யா என்று பெயர் இதற்கு.

கஷ்டமான நிலை. இது இப்படிப்பட்ட நிலையிலே பகவான். பரமாத்மா எழுந்தருளியிருக்கிறான் – காருகபத்யத்திலே இருக்கிறான். ஆகவமனீயத்தில்... எல்லாவற்றிலும் எழுந்தருளியிருக்கிறான். சூரியனிலும் இருக்கிறான் என்கிற காரணத்தினாலேதான் 'ஐந்து மைந்தும் ஐந்துமாய்' என்றார் ஆழ்வார்.

அது மட்டுமல்ல, இரண்டு மூன்று ஏழுமாறும் எட்டுமாய்...' அவன் இருக்கிறான். இதுவும் பகவத் ஸ்வரூபம்தான்.

# 13

இரண்டு, மூன்று, ஏழு எட்டாகவும் பரமாத்மா இருக்கிறான் என்று சொன்னேன். இரண்டு என்பது என்னவென்றால், ஒன்று ஞானம், மற்றது வைராக்கியம். இது இரண்டும் நமக்கு சிந்திக்க வேண்டும்.

ஞானம் - பகவானைக் குறித்த சிறந்த ஞானத்தை நாம் சம்பாதிக்க வேண்டும். அதற்காக அந்த சதாசார்யனை நாம் உபாஸிக்க வேண்டும்.

சாந்தோக்ய உபநிஷத் என்ன சொல்கிறது... பிரம்மத்தை உபாஸிக்கக்கூடிய உத்தம ஞானவான்களிடத்திலே போய் நாம் அடிபணிய வேண்டும் என்கிறது. அவர்கள் இருக்கும் இடத்துக்கு நாம் போக வேண்டும். எப்படிப் போக வேண்டும்...? கையிலே தர்பம், ஸமித்து எடுத்துக் கொண்டு போக வேண்டும். அது மாத்திரம் இல்லை, குவித்த கரத்துடன் அஞ்சலி பண்ணிக் கொண்டு அங்கே போய், எனக்கு நல்ல ஞானத்தை நீங்கள் கொடுக்க வேண்டும்'... என்று பிரார்த்திக்க வேண்டும். உயர்ந்த ஞானத்தை நம் மனத்திலே எற்றி வைப்பார்கள் ஆசார்யர்கள். ஞான தீபேன பாஸ்வதா! ஞான தீபம் என்பது பிரகாசிக்கும். அப்படிப்பட்ட மகான்களுக்கு நாம் என்ன கைம்மாறு செய்ய முடியும்? சுவாமி தேசிகன் ஆழமாகச் சொல்கிறார்.

அந்த ஆசார்யர்கள் பண்ணிய உபகாரத்துக்குப் பிரத்யுபகாரம் நாம் பண்ண முடியுமா? எது நாம் பண்ணினாலும் அவர்களிடமிருந்து நாம் பெற்றதற்கு அது ஈடாகாது. ஒரு மனிதன் உத்தம நிலையை அடைய வேண்டுமானால், ஆச்சர்ய அனுகரஹம் இருந்தால்தான் அடைய முடியும்.

**கு**ரு என்கிற சப்தம் எதைக் காட்டுகிறது? கு என்றால் இருட்டு என்று அர்த்தம். ரு என்றால் வெளிச்சம்.

அஞ்ஞானமாகிய இருள் சூழ்ந்தவர்களாக நாம் அவர்களிடம் போகிறோம். அவர்கள் இந்த இருளை மாய்க்கிறார்கள்.

வேதம் என்பது பெரிய திருமாளிகை. இருட்டு நிரம்பிய திருமாளிகை, பெரிய பவனம் அது. அதிலே எங்கே நுழைந்தாலும், எங்கே கொண்டு போய் விட்டுவிடுமோ என்று தெரியாது. உள்ளே நுழைவதற்கே பயமாக இருக்கிறது! அப்போது பரமாச்சார்யனான பரமாத்மாதான் வழி காட்டுகிறான்.

'கிருஷ்ணம் வந்தே ஜகத்குரும்' என்று ஜகத்துக் கெல்லாம் .குரு அல்லவா அவன்! அவர் என்ன பண்ணினார், அந்தத் திருமாளிகை எல்லோருக்கும் தெரிய வேண்டும் என்பதற்காக, பகவத்கீதை என்கிற விளக்கை அந்த மாளிகையிலே ஏற்றி வைத்தான். அப்படி அவன் ஏற்றி வைத்த பிறகு, வேதார்த்தங்கள் எல்லாம் நமக்குப் புரிகின்றன. பகவான் ஆசார்யனாக இருந்து இதைப் பண்ணுகிறான்.

சுவாமி தேசிகன் இந்த ஆசார்ய குணத்தை தயா சதகத்திலே கொண்டாடுகிறார். அந்த திருவேங்கட முடையானுடைய தயையே பகவத் கீதைக்குக் காரணம் என்கிறார். வாசுதேவனாக அவன் அவதாரம் பண்ணி

இந்த தீபத்தை ஏற்றி வைத்தான். உலகத்திலே இருக்கிற இருள் அனைத்தும் மாய்ந்தது.

ஆசார்யர் அனுக்ரஹத்தினாலேதான் சிறந்த ஞானத்தை நாம் பெற முடியும். ஆனதனாலே, அப்படிப் பட்ட ஆசாரியார் அனுக்ரஹத்தை நாம் முதலில் நல்ல முறையிலே சம்பாதித்துக் கொள்ள வேண்டும்.

ஞானத்தினால்தான் வைராக்கியம் நமக்குச் சிந்திக்கும். சுலபமாக வந்து விடாது வைராக்கியம். எல்லாம் போன பிற்பாடு வருவது அல்ல வைராக்கியம்.

ஒருத்தருக்கு எல்லாமே போய்விட்டது. ஒன்றும் முடியவில்லை. எதற்கும் முடியாமல் போகிறபோது வருகிற வெறுப்பு வைராக்கியம் அல்ல.

கையிலே எல்லாம் கிடைக்கிறபோது அதை அப்படியே விட்டுக் கொடுக்க, விட்டுப் பிரிய முடிவது தான் வைராக்கியம்.

"தாயுரை கொண்டு தாதை உதவிய தரணி தன்னைத்
தீவினை என்ன நீத்துச் சிந்தனை முகத்தில் தேக்கிப்
போயினை என்ற போழ்து, புகழினோய் தன்மை கண்டால்
ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ, தெரியின் அம்மா"

கம்பராமாயணத்திலே குகன் சொல்கிறான் பாருங்கள்... பரதனுடைய பிரபாவத்தைப் பற்றி...

ஆயிரம் ராமனைக் கொண்டு வந்தாலும். ஒரு பரதனுக்கு ஈடாக முடியுமா...? என்று கேட்கிறார்.

'தீவினை என்ன நீத்து' - அவ்வளவு ஐச்வர்யத்தையும் துரும்புக்குச் சமானமாக மதித்தானே... அத்தனையும் இருந்தும் சிறிதும் பற்றில்லையே அவனுக்கு, எல்லாம் கிடைத்துக் கொண்டிருக்கிறபோதே விட்டானே!

முக்கூர் அழகிய சிங்கர் அழகாகச் சொல்கிறார். அவர் மன்னார்குடியில் எழுந்தருளியிருந்த போது, ஸ்ரீஜயந்தி சமயம்.

பகவானுக்கு உப்புச் சீடை வெல்லச் சீடை என்று ஏகப்பட்ட பதார்த்தங்கள் பண்ணிக் கொண்டிருக்கிறார்கள்... அங்கேயிருந்து ஒருத்தர் வந்தார். 'எனக்கு சீடைன்னாலே பிடிக்காது...' என்றார்.

'என்ன அக்கிரமமா இருக்கே! பகவான் அவ்வளவு விரும்பிச் சாப்பிடுகிறான். ஒவ்வொரு கிருஹத்திலும் சீடை உருட்டுகிற அழகைப் பார்க்க வேண்டாமா?... என்ன அழகாக உருட்டுகிறார்கள் அவர்கள்! பகவான் நம் கிரஹத்துக்குத்தான் முதலில் வரப்போகிறான். வரப் போகிறான் என்று அவ்வளவு விசேஷமாக உருட்டுகிறார்கள்... அந்தச் சீடையைப் போய்ப் பிடிக்காது என்கிறீரே...?"

"ஒரு காலத்தில் பிடித்தது. இப்போ பிடிக்கவில்லை" என்று பதில் சொன்னார்.

"ஏன் பிடிக்கவில்லை?"

"இப்போது பற்களே இல்லையே! நான் என்ன பண்ணுவேன்!"

பல் இல்லாததால் பிடிக்கவில்லை என்பது ஒரு சிறப்பா!

"இதர விஷயங்களெல்லாம் இத்தனை நாட்களாகப் பார்த்துக் கொண்டிருந்தேன். இப்போது பார்க்கப் பிடிக்கவில்லை. கண் இல்லை. அதனால் பார்க்கவே பிடிக்கவில்லை."

"வீணான விஷயங்களெல்லாம் நிறையக் கேட்டுக் கொண்டிருந்தேன். இப்போது கேட்கப் பிடிக்கவில்லை. ஏனென்றால் காது கேட்கவில்லை. அதனால் கேட்கப் பிடிக்கவில்லை..."

இப்படி... எல்லாம் போய்விட்ட பிறகு வைராக்கியம் வந்து என்ன பயன்? எல்லாம் நன்றாக இருக்கிற போதல்லவா வைராக்கியம் வர வேண்டும்?!

எல்லாமே எனக்குக் கிடைக்கிறபோது வருவதுதான் வைராக்கியமேயொழிய, எல்லாம் போன பிற்பாடு வைராக்கியம் வந்ததென்றால், அது பிரயோஜனமில்லை.

ஆகவே, ஞான - வைராக்கியம் என்பது இரண்டு. இந்த இரண்டும் அவன் அருள் இருந்தால்தான் வரும்.

மூன்று என்பது எதைக் குறிக்கிறது...?' பர பக்தி, பர ஞானம், பரம பக்தி என்று ஆசார்யர்கள் வியாக்யானம் பண்ணியிருக்கிறார்கள். பெரியவாச்சான் பிள்ளை வியாக்யானத்தை இங்கே அழகாக எடுத்துக் காண்பிக்கிறார். பர பக்தி; பரே பக்தி எம்பெருமானிடத்திலே விசேஷமான பக்தி - அசஞ்சல பக்தி இருக்க வேண்டும் அவன் நம்மைக் கைவிட்டுவிடுவானா என்ன! என்கிற திருடமான பக்தி!

ஒரு யானைக்கு இருந்ததே அந்த பக்தி! யானை கூப்பிடுகிறது; ஆபத்து என்றதும் ஸ்ரீமன் நாராயணனைத் தான் கூப்பிடுகிறது.

நாராயண பட்டத்திரி இதை மிக் அழகாகச் சொல்கிறார். ஸ்ரீமத் பாகவதத்திலே அறுபத்திரண்டு சுலோகங்களில் சொன்ன கஜேந்திர மோக்ஷ சரித்திரத்தை, பத்து சுலோகங்களிலே, சுலபமாக அழகாக எடுத்துச் சொல்லி விடுகிறார். எம்பெருமானின் திருக்கல்யாண குணங்களை மிக உன்னதமாகச் சொல்கிறார்.

'ஒரு பிராணி - அந்த யானை கஜேந்திரன், அது ஸ்தோத்திரம் பண்ணுகிறது. அதைக் கேட்டுக் கொண்டு எல்லா தேவதைகளும் நாங்கள் பொருட்டல்ல என்று பேசாதிருக்கிறார்கள் - ஹே குருவாயூரப்பா!

சர்வாந்தர்யாமியான நீயல்லவா அங்கே நேரே வந்தாய். முதலையின் பிடியிலிருந்து அந்த கஜேந்திரன் விடு பட்டான். கந்தர்வ லோகத்தை அடைந்தான். உலகத்தின் முழுமுதற் காரணம் எது என்பதை, அந்த யானையல்லவா காட்டிக் கொடுத்தது!

யானைக்கிருக்கிற அறிவு நமக்கு வேண்டாமா...? பராசர பட்டர் ஸ்ரீ ரங்கராஜ ஸ்தவத்தில் சொல்கிறார்: 'யானைக்கு - நீ அருள் செய்ததற்காக உனக்கு வணக்க மில்லை...'

பின் எதற்காக நமஸ்காரம்?

'நீ ஓடி வந்த வேகத்துக்கு நமஸ்காரம்!" என்கிறார் பராசர பட்டர்!

அப்படியொரு வேகமாக எம்பெருமான் எழுந்தருளி னான்.

மஹாலக்ஷ்மியோடு வைகுண்டத்தில் உட்கார்ந்திருக் கிறான் பரமாத்மா. அவள் முந்தானையும் அவன் மேல் அங்கவஸ்திரமும் முடித்துப் போடப்பட்டுள்ளன. இரண்டு பேரும் விளையாடிக் கொண்டிருக்கிறார்கள்.

அங்கேயுமா விளையாட்டு? என்று கேட்பீர்கள்...

ஆமாம்...அங்கேயும்தான் விளையாட்டு! என்ன விளையாட்டு?... சதுரங்கம்!

இந்திர பதவியில் இருக்கிறவனை மெள்ளத் தூக்குகிறான் பகவான். தூக்கி, அங்கேயிருந்து நரகத்திலே போடப்போகிறான்.

மஹாலக்ஷ்மி கெட்டியாக அவன் கையைப் பிடித்துக் கொண்டுவிட்டாள். "இத்தனை நாட்களாக இவ்வளவு போகங்களை அனுபவித்துக் கொண்டிருந் தானே... அவனைக் கொண்டு போய் அங்கே நரகத்திலே

தள்ளுகிறீர்களே, இது நியாயமா...? சிரமப்படுவானே..." என்கிறாள்.

"அதற்கு நாம் என்ன பண்ணுவது? இத்தனை நாளாக புண்யத்தினுடைய பலனை அனுபவித்துக் கொண்டிருந்தான். இனிமேல் அவன் பாபத்தினுடைய பயனை அனுபவிக்க வேண்டும். அதற்காகத் தள்ளு கிறேன்."

"இவன் எவ்வளவு புண்ணியம் பண்ணியிருக் கிறான்...?" மஹாலக்ஷ்மி கேட்கிறாள்.

"அறுபது பங்கு புண்ணியம் பண்ணியிருக்கிறான்."

"எவ்வளவு பாபம் பண்ணியிருக்கிறான்...?"

"நாற்பது பங்கு" என்றான் பகவான்.

"அறுபது பங்கு புண்ணியம், நாற்பது பங்கு பாபம் என்றால், அறுபதில் நாற்பதைக் கழித்து விடுங்களேன் சுவாமி இருபது பங்கு புண்ணியமே அதிகமாய் இருக்கிறது. அதனால் அவனை நரகத்திலே தள்ள வேண்டாம்" என்றாள்.

"என்ன, சாஸ்திரம் தெரியாமல் பேசுகிறாயே! மஹாலக்ஷ்மி, நீ இப்படிப் பேசலாமா...? புண்ணியத்தி லிருந்து பாவத்தைக் கழிப்பதாவது! கிடையவே கிடையாதே. அந்த மாதிரி கழித்தல் கணக்கெல்லாம் பூலோகத்தில்தான் உண்டேயொழிய, நமக்குக் கிடையாது" என்று சொல்லிவிட்டான் பகவான்.

இங்கென்ன கணக்கு...? அறுபது பங்கு புண்ணியத் துக்கு உண்டான பலனையும் அனுபவிக்க வேண்டும். நாற்பது பங்கு பாவத்துக்கு உண்டான பலனையும் அனுபவிக்க வேண்டும்.

இந்த இரண்டையுமே கழிக்கிற வாய்ப்பாடு ஒன்று உண்டு... அவன் திருவடியைப் பற்றினால் இரண்டுமே ஒழியும். இது நாம் தெரிந்து கொள்ள வேண்டிய கணக்கு.

அங்கே வைகுண்டத்திலே இரண்டு பேருக்கும் தர்க்கம், சண்டை!

தோற்றுப் போகிறவர் சதுரங்க ஆட்டத்தை விட்டு ஓடிப் போகக் கூடாது என்று ஒப்பந்தம். அதனால் முடிச்சுப் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்கிறார்கள். அந்த சமயத்திலேதான் யானை கத்தியது. உடனே பரமாத்மா என்ன பண்ணினான்... எழுந்து திடீரென்று ஓடினான். ரொம்ப அழகாகச் சொல்கிறார் நாராயண பட்டாத்ரி, முடிச்சை அவிழ்க்காமலே அவன் ஓட, மஹாலக்ஷ்மி பின்னாலேயே ஓடுகிறாள்.

'சுவாமி, எங்கே போகிறீர்கள்...?" என்று கேட்டால், பதில் சொன்னால்தானே? ஓடிக் கொண்டே பின்னாலே போகிறாள். அப்போது கருடன் எதிரே வருகிறான். அவன் மேலே ஏறி உட்கார்ந்து கொள்கிறார். சங்க - சக்ராதிகள் தாமே வந்து கையில் ஏறிக் கொண்டு விட்டன! முடிச்சை அவிழ்க்காததால் மஹாலக்ஷ்மியும் கூடவே தொங்க லாடியபடி வருகிறாள்.

அவ்வளவு வேகமாக வரும் எம்பெருமான், 'சென்று நின்று ஆழி தொட்டான்' என்கிறார் திருமங்கையாழ்வார், ஆழியை - சக்கரத்தை - அவன் எடுத்து விடுகிற நேரம்கூட அதிகமாகி விடும் என்பதால், அதைத் தொட்டான். அவ்வளவே, சுதர்ஷன ஆழ்வார் சொந்த முயற்சியிலே போனால், எங்கே தாமதப்படுத்தி விடுவாரோ என்று சந்தேகம் வந்துவிட்டதாம் பகவானுக்கு. ஆதலால் தொட்ட வேகத்திலேயே அவன் சக்கரம் போய் முதலையை சம்ஹரித்ததாம்!

அப்படி ஒரு பிராணியை ரக்ஷக்ஷிப்பதற்காக ஓடி வந்தானே, அதை நினைவிலே கொள்ள வேண்டாமா...? மற்றதிலே பற்றை விட்டு, அவன் திருவடியைப் பற்ற வேண்டாமா!

# 14

**ஞா**ன வைராக்யம் பற்றிச் சொல்லிக் கொண்டிருந் தேன்.

மின்னல் மின்னுகிறது ஒரு க்ஷணத்துக்கு... அது கூட இல்லை இந்தப் பிரபஞ்சம் - அந்த மின்னலின் நிலையற்ற தன்மையைக் காட்டிலும் நிலையற்றது இந்த பிரபஞ்சம். இதிலே இருக்கிற நாம் மட்டும் அவ்வளவு சாசுவதமா?... இல்லை என்பதை உணர்ந்து, நீர் உமது என்றிவை வேர் முதல் மாய்த்து...' அதாவது 'நாம், நமது' என்கிற அஞ்ஞானத்தை அடியோடு அறுத்தெறிந்து அகங்கார மமகாரங்களை அறுத்தெறிந்து அவன் திருவடியைப் பற்ற வேண்டும். இந்த வைராக்கியத்தைத்தான் வைராக்கியம் என்று சொல்லியிருக்கிறதேயொழிய, எல்லாம் முடிந்த பிறகு வாழ்க்கையிலே வெறுப்பு வந்தால், அதற்குப் பெயர் வைராக்கியம் அல்ல!

இரண்டுமாக பரமாத்மா இருக்கிறான் என்று சொன்னது இந்த ஞான - வைராக்கியங்களைக் குறித்துத்தான்.

மூன்றாகவும் அவனே இருக்கிறான் அல்லவா...? அந்த மூன்று என்ன...? பரபக்தி, பர ஞானம், பரம பக்தி.

வைராக்கியம் சித்தித்தால்தான் பகவானிடத்தில் பரம பக்தி ஏற்படும். அவனை வஞ்சிக்கிற மாதிரி பக்தி இருந்து நமக்குப் பயனில்லை. ஒரு காரியம் ஆக

வேண்டுமானால் பத்து நாட்கள் பூஜை பண்ணுவது. அது முடிந்த பிறகு அவனை லட்சியமே பண்ணுவதில்லை!

'ஓஹோ, இவன் காரியார்த்தி!' என்று பகவான் முடிவுக்கு வருகிறான். ஆனாலும், 'இவ்ன் இன்ன காரணத்துக்காக நம்மை வழிபடுகிறான்' என்று உணர்ந்து பரமாத்மா அதற்குண்டான பலனைக் கொடுக்கிறான். பலனைக் கொடுக்காமல் அவன் இருப்பதில்லை.

ஆனால் நாம் அந்த மாதிரி ஒரு காரணத்துக்காகவா பக்தி பண்ணுவது! நிரந்தரமான பக்தி நமக்கு இருக்க வேண்டும் பகவானிடத்திலே. அந்த பக்தி, பிரஹலாதனுக்கு இருந்தது பாருங்கள்... அந்த மாதிரி திரடமான பக்தியாக இருத்தல் வேண்டும்.

பகவானைக் குறித்த சிறந்த ஞானம் நமக்கு வேண்டும். அவன் என்னென்ன பண்ணுவான், யார் யாருக்கு பண்ணியிருக்கிறான் என்பதையெல்லாம் தெரிந்து வைத்துக் கொண்டு அதைச் சொல்ல வேண்டும் அவனிடம்.

அவனிடத்திலே போய் நாம் அதைக் கொடு, இதைக் கொடு என்று கேட்கவே கூடாது.

பரஞானம் என்றால் என்ன...? 'அதைக் கொடு, இதைக் கொடு' என்று கேட்பதல்ல பரஞானம். பரஞானம் என்றால், அவன் எதிரிலே போய் உட்கார்ந்து கொண்டு, நீ கஜேந்திரனுக்காக இப்படி ஓடி வந்தாயே, அம்பரீஷனுக்குச் சக்கரத்தை முன்னமே கொடுத்தாயே! திரௌபதியை உன் திருநாமமே ரக்ஷித்ததே! நீ குருக்ஷேத்திர பூமியில் அப்பேர்ப்பட்ட பாரத்தையும் குறைத்தாயே! ராமனாய்ப் பிறந்து, இவ்வளவு காரியம் பண்ணினாயே! சரணாகதி பண்ணியவர்களை ரக்ஷித்தாயே!

இப்படியே 'அதைப் பண்ணினாயே, இதைப் பண்ணினாயே' என்று அவன் கதை மொத்தமும் அவன் முன்னே போய் நாம் சொல்ல வேண்டும். இப்படியே நாம் சொல்லிக் கொண்டிருந்தோமானால் பகவான் பார்ப்பான்... 'நம்ம சமாசாரம் மொத்தத்தையும் இவன் தெரிந்து வைத்திருக்கிறான் போலிருக்கிறது. இவனை நாம் ஏமாற்ற முடியாது' என்று முடிவுக்கு வந்து, என்ன வேண்டுகிறோமோ, அதை நாம் கேளாமலே கொடுத்து விடுவான்!

உலக வாழ்க்கையிலேயும் இது சகஜம் தானே?... 'நீ என்னத்துக்காக எகிறி குதிக்கிறாய்? நீ யார் என்று எனக்குத் தெரியாதா...? உன் அப்பா யார் என்று எனக்குத் தெரியாதா...? உங்கள் வம்சத்திலே எப்படிப் பட்டவர்களெல்லாம் உண்டு என்று எனக்குத் தெரியாதா...? இன்றைக்கு என்னவோ புதுசாகப் பேசுகிறாயே நீ!" என்று ஒருத்தரிடம் நாம் பேசினால்.

"சுவாமி, வாயை மூடிக் கொண்டு விடுமே! நீர் கேட்பதை நான் இதோ கொடுத்து விடுகிறேன். வாங்கிக் கொண்டு போய்விடுமே!'' என்று அவர் நாம் விரும்புவதைத் தந்துவிடுவார்.

அதனால், பகவானே பக்தர்களிடத்திலே பயப்படுகிறான். நீ அதைப் பண்ணினாயே, இதைப் பண்ணினாயே, அவ்வளவு விலை நான் தாளமாட்டேனா?' என்று கேட்டால் நடுநடுங்கிப் போய் விடுகிறான்!

இதை அடியேன் சொல்லவில்லை. சுவாமி தேசிகனே பரமார்த்த ஸ்துதியிலே சொல்கிறார் இதை.

"ஹே ப்ரபோ! நீ சரணாகத ரக்ஷண விரதம் உடையவன். உன் திருவடியைப் பற்றியவர்களைக் கைவிட மாட்டாய். நீ என்ன சொல்லியிருக்கிறாய்...? அன்றைய



தினம் விபீஷணனையே சேர்த்துக் கொள்ளக் கூடாது என்றார்கள், எல்லோரும். அப்போது நீ என்ன சொன்னாய்...? விபீஷணனுக்குத் தடை சொல்கிறாயேடா சுக்ரீவா! ராவணனே வந்திருந்தாலும் போய் அழைத்துக் கொண்டு வா...' என்று சொன்னாய். நனைந்த கை உலருகிற சமயத்தில், உன் பத்னியை அபகரித்த மகாபாபி அவன். அப்படிப்பட்டவனுக்கே அபயம் அளிக்கிறேன்

என்று சொன்னாய் நீ. அப்படிப்பட்ட நீ... அந்த மாதிரி தப்புகள் எதுவும் நான் பண்ணியிருக்கிறேனா, இல்லையே! ஒரு தப்பும் பண்ணாத என்னை உன்னாலே கைவிட முடியுமா!" என்று கேட்கிறார்.

"சொன்னவன் நீ தான், உன் வாக்குதான் பிரமாணம். ஒரு தப்பும் பண்ணாத என்னை விட முடியுமா உன்னாலே! ராவணனுக்கே அபயம் அளிக்கிறேன் என்று சொன்னவன். என்னைவிட முடியுமா?" என்று சுவாமி தேசிகன் கேட்கிறார்...

அந்த மாதிரி பகவானிடத்திலே கேட்டால் நடுநடுங்கிப் போய் விடுவான் அவன்.

பிள்ளை பெருமாள் அய்யங்காரும் இப்படியேதான் பகவானைப் பார்த்துக் கேட்டார். அர்ச்சனை பண்ணிக் கொண்டேயிருந்தார். ரங்கநாதருக்கு... கிருஷ்ணாவதார மகிமைகளைச் சொல்லி அர்ச்சனை.

நவநீத சோராய நம:

ததிபாண்ட மோக்ஷ தாயினே நம:

என்றார்... சொல்லிக் கொண்ட வந்ததும் இந்த இடத்திலே நிறுத்தி, தட்டைக் கீழே வைத்துவிட்டார்.

தட்டைக் கீழே வைத்துவிட்டு ரங்கநாதரைப் பார்த்துக் கேட்கிறார்.

"ரங்கநாதா! மோக்ஷம் கொடு'' என்கிறார். "இன்றைக்கே போக வேண்டும்" என்கிறார் மோக்ஷத் துக்கு!

ரங்கநாதர்! பிள்ளை பெருமாள் அய்யங்காரைப் பார்த்துக் கேட்கிறார்:

"நீர் என்ன கர்மயோகம் பண்ணினீரா?"

"அதெல்லாம் எனக்குத் தெரியாது!" என்கிறார் அய்யங்கார்.

"ஞான யோகம்...?"

"அதிலே அறவே ஞான சூன்யம்."

"பக்தி யோகம்...?"

"தெரியாதே!"

"பிரபத்தி, சரணாகதி...?"

"தெரியாதே!"

"என் கதை சொல்கிற இடத்திலே போய்க் கேட்டதுண்டா?"

"இல்லையே!"

"என் பக்தர்களுக்கு ஒரு நாளாவது உமது கிருஹத்திலே இடம் கொடுத்ததுண்டா...? தங்குவதற்கு இடமளித்ததுண்டா?"

"இல்லையே!"

"என் பக்தனுக்கு அன்னமிட்டதுண்டா?"

"இல்லையே!"

இப்படி எதைக் கேட்டாலும் இல்லையே என்கிறார்.

"புண்ணிய நதிகளில் நீராடியது உண்டா?"

"இல்லையே!"

இப்படியே எதைக் கேட்டாலும் பிள்ளை பெருமாள் அய்யங்கார் "இல்லையே! இல்லையே!" என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்.

படுத்துக் கொண்டிருக்கிற ரங்கநாதருக்கு ரொம்பக் கோபம் வந்துவிட்டது! எழுந்து உட்கார்ந்து கொண்டு விட்டார்!

நாமெல்லாம் ரங்கநாதர் படுத்துக் கொண்டிருக்கிற ஸேவையைத்தான் பார்த்திருக்கிறோம். பிள்ளை

பெருமாள் அய்யங்கார் ரங்கநாதர் அமர்ந்த ஸேவையைப் பார்த்தார்!

எழுந்து உட்கார்ந்து கொண்ட ரங்கநாதர், "என்ன அக்கிரமம்! நீர் என்ன மோக்ஷம் கிள்ளுக்கீரைன்னு நினைத்துக் கொண்டிருக்கிறீரா...? நான் கேட்டதில் ஏதாவது ஒன்றேனும் பண்ணியிருக்கிறீர் என்று சொன்னால், உமக்கு மோக்ஷம் கொடுக்கலாம். ஒன்றுமே பண்ணாத உமக்கு எவ்வாறு நான் மோக்ஷம் கொடுப்பேன்?"

உடனே இவருக்குக் கோபம் வந்து விட்டது. இடுப்பு வஸ்திரத்தை இறுக்கிக் கட்டினார்.

"ரங்கநாதா! நான் உன்னை ஒன்று கேட்கிறேன்... இதையெல்லாம் பார்த்துத்தான் நீ மோக்ஷம் கொடுக்கிறாயா? என்னைப் பார்த்து நீ வரிசையாக, அடுக்கடுக்காகக் கேள்வி கேட்கிறாயே...? 'கர்ம யோகம் பண்ணினாயா? ஞான யோகம் பண்ணினாயா? பக்தி யோகம் பண்ணினாயா? பிரபத்தி பண்ணினாயா? அதைப் பண்ணினாயா? இதைப் பண்ணினாயா? என்று இப்படி அடுக்கடுக்காகக் கேட்கிறாயே! அன்றைய தினம் ததிபாண்டன் வீட்டுப் பானை இவற்றிலே எதைப் பண்ணிற்று...? வந்திக்க மனமில்லை. விழுந்தெழுந்து கைகூப்ப கரமில்லை. சேவிக்க மெய்யில்லை. எதுவொன்றும் இல்லாத பானைக்கு எப்படி மோக்ஷம் கொடுத்தாய்?" என்று ரங்கநாதரைப் பார்த்து அதட்டிக் கேட்கிறார் பிள்ளை பெருமாள் அய்யங்கார்!

# 15

'ததிபாண்டன் வீட்டுப் பானைக்கு மோக்ஷம் கிடைத்தது. எப்படி' என்று பிள்ளை பெருமாள் அய்யங்கார் ரங்கநாதரிடம் கேட்கிறார். ததிபாண்டனைப் பற்றித் தெரியுமல்லவா...

ததிபாண்டவன் கோகுலத்தில் இருந்த கிருஷ்ண பக்தன். ஒரு சமயம் பகவான் அவன் வீட்டுக்குள்ளே நுழைந்தான். யசோதையும் கோபஸ்த்ரீகளும் குழந்தையைத் துரத்திக் கொண்டு வருகிறார்கள்.

ததிபாண்டன் நித்யம் குழந்தை கிருஷ்ணனுக்காக பானையிலே தயிர் எடுத்து வைப்பான். ஆனால் பகவான் அதைச் சாப்பிட வரமாட்டான்!

'வந்தாய் போலே வாராதாய்
வாராதாய் போல் வருவானே!'

இதுதான் பகவானின் குணம்!

'வருவான் வருவான்' என்று நாம் நினைத்துக் கொண்டு காத்துக் கொண்டிருக்கிற வேளையில் அவன் வரமாட்டான். வரமாட்டான் என்று நாம் நினைத்துக் கொண்டிருந்தோமானால் திடீரென்று வந்து நிற்பான்!

நித்யம் தயிர் எடுத்து வைத்த ததிபாண்டன், அன்றைய தினம் அப்போதுதான் புதிதாகப் பானை வாங்கி வைத்திருந்தான். பெரிய பானை! இனிமேல்தான்



அதிலே தயிரைக் கொட்ட வேண்டும். அதற்குள்ளே கிருஷ்ணன் வேகமாக ஓடி வந்தான். ஓடி வந்து, காலியான பானைக்குள்ளே ஏறி தொப்பென்று உள்ளே குதித்து உட்கார்ந்து கொண்டான்! அப்படியானால், பானை எவ்வளவு பெரிதாக இருந்திருக்கும் என்று பார்த்துக் கொள்ளுங்கள்!

குழந்தை உள்ளே குதிப்பதைப் பார்த்தான் ததிபாண்டன். அது தப்பித்து ஓடி வருகிறது

என்பதைப் புரிந்து கொண்டான். 'சரியாகச் சிக்கிக் கொண்டாயிற்று!' என்று பானை மேலே மூடி போட்டது மாதிரி ஏறி உட்கார்ந்து கொண்டுவிட்டான். ததிபாண்டன்!

அவன் ஏறி உட்கார்ந்து கொண்டதுமே யசோதை வந்தாள்... கோபஸ்த்ரீகளெல்லாம் வந்தார்கள்.

"ததிபாண்டா! என் குழந்தை கிருஷ்ணன் இங்கே வந்தானா?" என்று கேட்டாள் யசோதை.

"கிருஷ்ணனா?... கிருஷ்ணனை நான் பார்த்து ஆறு மாசமாயிற்றே, இங்கே வரவேயில்லையே'' என்று அப்பட்டமான பொய்யை ரொம்ப அழகாகச் சொன்னானாம் ததிபாண்டன்.

பொய் சொன்ன ததிபாண்டனுக்கு மோக்ஷம் கிடைத்தது. உண்மையே சொன்ன தசரதனுக்கு ஸ்வர்கம்தான் கிடைத்தது என்கிறது புராணம்!

தசரதனுக்கு மோக்ஷம் கிடைக்கவில்லை. அதனால் தான் ஆசார்யர்கள் 'தசரதனைக் காட்டிலும் உத்தம மானவன் ததிபாண்டன்' என்று கொண்டாடுகிறார்கள்.

காரணமென்ன...?

விசேஷ தர்மம், சாமான்ய தர்மம் என சாஸ்திரத்தில் இரண்டு விதம் சொல்லப்பட்டிருக்கிறது.

சாமான்ய தர்மத்துக்குப் பக்கத்திலே விசேஷ தர்மம் வருமானால், சாமான்ய தர்மத்தை விட்டுவிட்டு, விசேஷ தர்மத்தைத்தான் நாம் கடைப்பிடிக்க வேண்டும். அமாவாஸை அன்றைக்கு கிரஹணம் வருகிறது என்று வைத்துக் கொள்வோம். கிரஹண தர்ப்பணம்தான் பண்ண வேண்டும். அமாவாஸை தர்ப்பணத்தை அன்று விட்டுவிடலாம். ஏனென்றால் அன்றைய தினம் விசேஷ தர்மம் கிரஹணம்தான். அமாவாஸை தர்ப்பணம்

பண்ணவில்லையே, அதையும் பண்ணுகிறேன் என்று நாம் ப்ண்ணிக் கொண்டிருக்கக் கூடாது.

கிருஷ்ணம் தர்மம் சனாதனம் - கிருஷ்ணனாகிய தர்மத்தை ரக்ஷிப்பதற்காக சாமான்ய தர்மமாகிற உண்மை பேசுதல் என்பதைக் கைவிட்டான் ததிபாண்டன் கிருஷ்ணனை ரக்ஷித்தான்.

தசரதனோ, விசேஷ தர்மமாகிற ராமனைக் காட்டுக்கு அனுப்பி, சாமான்ய தர்மமாகிற கைகேயிக்குக் கொடுத்த வாக்கிலே நின்றான்! அதனால், சாமான்ய தர்மத்தைக் காத்து, விசேஷ தர்மத்தை விட்ட தசரதனுக்கு ஸவர்கம்தான் கிடைத்தது. சாமான்ய தர்மத்தைவிட்டு விசேஷ தர்மத்தைக் காத்த ததிபாண்டனுக்கோ, மோக்ஷமே கிடைத்தது.

"கிருஷ்ணன் இங்கே வரவேயில்லையே!" என்று த்திபாண்டன் சொன்னதும், யசோதை அங்கேயிருந்து புறப்பட்டுப் போய்விட்டாள்.

குழந்தை எத்தனை நாழி உள்ளே உட்கார்ந்திருக்கும் - பானைக்குள்ளே...? மூச்சுத் திணறுகிறது அதற்கு!

மூடி போல் மேலே உட்கார்ந்திருக்கிற ததி பாண்டனை ஒரு குத்து குத்தியது!

"என்ன அக்கிரமம்! உட்கார்ந்தே இருக்கிறாயே நீ...! எழுந்திரு, நான் வெளியே வரவேண்டும்" என்றது.

அதற்கு ததிபாண்டன் சொல்கிறான்.

"ஹே கிருஷ்ணா! உனக்கு மோக்ஷம் வேண்டு மானால் எனக்கு மோக்ஷம் கொடு!..."

அதற்கு அந்தக் குழந்தை கேட்கிறது

"எனக்கு மோக்ஷமா...?"

"ஆமாம்! இந்தப் பானையிலேயிருந்து நீ வெளியே வரவேண்டுமா வேண்டாமா? இந்த கடத்திலேயிருந்து வெளியே கிளம்பு..."

நம் சரீரத்துக்கு கடம் என்று பெயர். சாஸ்திர ரீதியாகப் பேசினால் நாம் ஒவ்வொருத்தரும் ஒரு கடம்! ஆஸ்திக சமாஜத்திலே உபன்யாஸம் நடந்ததாமே... நித்யம் எத்தனை கடங்கள் வந்திருந்தன?" என்று தான் நாம் கேட்க வேண்டும்!

பானையும் நாமும் ஒன்றுதான்! அதிலேயும் தீர்த்தத்தைக் கொட்டி நிரப்பலாம். நம் சரீரத்திலேயும் தீர்த்தத்தைக் கொட்டி நிரப்பலாம். அதுவும் ம்ருண்மய மானது. நம் சரீரமும் ம்ருண்மயமானது!

"இப்படிப்பட்ட பானையிலிருந்து நீ வெளியே கிளம்பவேண்டாமா" என்றான் ததிபாண்டன்!" நீ வெளியே கிளம்ப வேண்டுமானால், எனக்கு முதலில் மோக்ஷத்தைக் கொடு!" என்று கேட்கிறான்!

அதற்கு பகவான் சொல்கிறான்:

"உனக்கு மாத்திரம் என்னடா...? அந்த பானைக்கும் சேர்த்து மோக்ஷம் கொடுக்கிறேன்!"

"பானைக்குக் கூட மோக்ஷம் கொடுப்பாயா...?"

"நான் சொன்ன வண்ணம் செய்யும் பிரான். கட்டாயம் கொடுப்பேன்!"

எழுந்தான் ததிபாண்டன். பகவான் பானையிலே யிருந்து வெளியிலே குதித்தான். புஷ்பக விமானம் வந்து இறங்கியது. அதிலே ததிபாண்டன் ஏறிக் கொண்டான். அவன் பானையும் கூட ஏறி உட்கார்ந்து கொண்டது!

என்ன அதிசயம் பாருங்கள்! எத்தனையோ அதிமானுஷமான சேஷ்டிதங்கள் செய்துள்ளான் பகவான். அதிலே இந்தப் பானைக்கு மோக்ஷம் கொடுத்த வைபவம் விசேஷமானது! இப்போதுகூட வைகுண்டத் துக்குப் போனால், அந்தப் பானையை நாம் பார்க்கலாம்!

அசேதனத்துக்கும் மோக்ஷம் உண்டு என்பதற்கு சாட்சியாக அது அங்கே இருக்கிறது.

**பி**ள்ளை பெருமாள் அய்யங்கார் என்ன கேட்கிறார்...?

"அந்தப் பானை கர்ம யோகம் பண்ணியிருக்கிறதா? அந்தப் பானை ஞான யோகம் பண்ணியிருக்கிறதா? அது என்ன, பக்தி யோகம் பண்ணிற்றா, பிரபத்தி பண்ணியதா?... வெறும் மண்பாண்டம் கடம்! அந்த விலை நான் தாள மாட்டேனா?" என்றார்!

இதைக் கேட்டதும் எழுந்து உட்கார்ந்திருந்த ரங்கநாதன் திரும்பவும் படுத்துக் கொண்டு விட்டான். இன்றைக்கு வரையில் அவன் எழுந்திருக்கவே இல்லை!

பக்தர்கள் எவ்வாறு மடக்கி விடுகிறார்கள் பாருங்கள் பகவானை...!

ஆகையினாலே, பகவான் பக்தர்களை வணங்கி நிற்கிறான்.

யார் அவனை வணங்குகிறார்களோ, அவர்கள் விரும்பியதையெல்லாம் கொடுப்பான். என்ன வேண்டு மானாலும் கொடுப்பான் அவன்.

அவன் சரித்திரத்தை நன்றாகச் சொல்ல கற்றுக் கொள்ள வேண்டும் நாம். அவன் கதையை நன்றாகக் கேட்டு, அவன் எதிரிலே போய் உட்கார்ந்து, ஒவ்வொரு அத்தியாயமாகப் படிக்க வேண்டும். அவ்வாறு படித்தால் பகவான் கேட்பான். இன்னொருத்தர் என்ன நினைப்பார் என்பது அனாவசியம். பகவான் கேட்கிறான்; அது போதும்.

ஒருத்தர் உட்கார்ந்து ராமாயணம் சொல்லிக் கொண்டிருந்தார், எதிரில் இரண்டு வாழைப்பழத்தை வைத்துவிட்டு.

"பிறகு ராமன் வனத்தை அடைந்து..." என்று ஆரம்பித்துப் பேசிக் கொண்டிருந்தார்.

எதிரிலே ஒருத்தரையும் காணோம்!

இன்னொருத்தர் வந்து இவரைக் கேட்டார்.

"யாருக்காக நீர் உபன்யாஸம் பண்ணுகிறீர்!... எதிரிலே ஒருத்தரையும் காணோமே! யாருக்கு உபன்யாஸம் பண்ணுகிறீர்!"

"யார் கேட்க வேண்டுமோ அவர் உட்கார்ந்து கேட்டுக் கொண்டிருக்கிறாரே" என்றார் அவர்!

" 'யத்ர யத்ர ரகுநாத கீர்த்தனம்...' என்று ஆஞ்சநேயன் இதோ உட்கார்ந்திருக்கிறானே" என்றார்.

யார் பக்தியோடு கேட்கிறார்களோ, அவர்களுக்காக நாம் சொல்ல வேண்டும்!

கீதையிலே பரமாத்மா என்ன சொல்கிறான்...?

"என்னிடத்திலே பக்தி இல்லாதவர்களுக்குச் சொல்லாதே! அசூயை உள்ளவர்களுக்குச் சொல்லாதே..." என்றான்.

இவ்வளவு கீதையைச் சொல்லிவிட்டு, "பக்தியில்லாத, அசூயைப்படக் கூடியவர்களுக்கு, தபஸ் இல்லாதவர்களுக்கு இதைச் சொல்லாதே..." என்றான்.

பகவத் விஷயம் மிக உயர்ந்ததான காரணத்தினாலே, அதை எப்படிச் சொல்ல வேண்டும், எந்த இடத்தில் சொல்ல வேண்டும் என்பதையெல்லாம் பரமாத்மாவே எடுத்துக் காட்டுகிறான்.

ஆகவே பர பக்தி, பர ஞானம், பரம பக்தி - பரம பக்தி என்ற நிலை ஏற்பட்டு விட்டதானால், ஒரு முகூர்த்த காலம் கூட நம்மால் பகவானை நினைக்காமல் இருக்கவே முடியாது.

# 16

பரம பக்தி உடையவனுக்கு பகவானைப் பிரிகிற துன்பம், தாளவொண்ணாததாக இருக்கும். துளி நேரம் அவனை நினைக்காது போனாலும் வியசனம் உண்டாகும். அதைப் படிக்கவில்லையே. இதைப் பண்ண வில்லையே என்று பதறுகிற பதறலில், வேறு எந்த வேலையும் ஓடாது. பெரிய பயப் பிராந்தி ஏற்பட்டு விடும். அந்த மாதிரி ஒரு நிலையிலே கொண்டு போய் விட்டு விடும். அவனுடைய பர பக்தி, பர ஞான பரம பக்தி.

“இரண்டும் மூன்றுமாக பகவான் இருக்கிறான்' என்று சொன்னதில், மூன்று என்று குறிப்பிட்டது. இந்த மூன்றையும்தான்.

அடுத்தது ‘ஏழும், ஆறும் எட்டுமாய்...'

ஏழு என்பது என்ன...?

பக்தி சிந்திப்பதற்கு ஏழு சாதனங்கள் வேண்டி யிருப்பதாக சாஸ்திரமானது வலியுறுத்துகிறது.

விவேகம் என்பது ஒன்று. விமோகம் என்பது ஒன்று. அப்யாஸம் என்று ஒன்று. க்ரியா, கல்யாண, அனுத்தாசம், அனவஸாதனம் ‘இந்த ஏழும் இருந்தால்தான் பக்தி சிந்திக்கும் என்று சாஸ்திரம் சொல்கிறது.

விவேகம் என்பது என்ன...? தர்மா தர்மங்கள் குறித்த ஞானம் சரீர சக்தி மனஸ் சக்தி, வாக் சக்தி இதை யெல்லாம் விவேகவான்கள் தேடிக் கொள்வார்கள்.

விமோகம் என்பது என்ன...? மற்றதிலே பற்றில்லாமல் பகவத் விஷயத்திலே பற்று கொள்ளுதல் விமோகம்.

அப்யாஸம் என்பது இந்த முதல் இரு குணங்களை இடைவிடாது கடைப்பிடித்து வருதல்.

க்ரியை என்றால் அதற்குண்டான காரியங்களைச் செய்தல் - எப்போதும் பகவத் விஷயத்திலேயே ஈடுபடும் படியான காரியத்தைச் செய்தல்.

கல்யாண - என்பது பகவானுடைய திருக்கல்யாண குணங்களை எப்போதும் சிந்தனை பண்ணிக் கொண்டே இருப்பது.

அந்த பகவானின் திருக்கல்யாண குணங்கள் ஒவ்வொன்றும் நம்மை இழுத்துக் கொண்டே போய்விடும். ஒரு குணத்தை அனுபவித்து முடித்தாலல்லவா எல்லா குணங்களையும் அனுபவிப்பது குறித்து யோசிக்கலாம்! எல்லா குணங்களும் ஏற்றமுடையவை. எப்போதும் அவற்றையே சிந்தனை பண்ணிக் கொண்டிருப்பது.

அனவஸாதனம்: பாகவதோத்தமர்களிடத்திலே அசூயைப் படக் கூடாது. இதராளிடத்தில் பிரதிபக்தி யோடு இருக்க வேண்டும். அதிலும் நம் போன்ற பக்தர்களிடத்தில் அன்னியோன்ய ஸம்ருதாளாக அடியேன் அடியேன்' என்று பணிந்து, முந்தி நிற்க வேண்டும். அவ்வாறு நாம் பக்தியோடு இருப்பதைத்தான் பகவான் விரும்புகிறான்.

அனுத்தாசம் - பசி தூக்கத்தைப் பொறுக்கும் திறன் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். அவற்றிலே நாட்டம்

கொள்ளக் கூடாது. “உண்ணும் சோறும் பருகும் நீரும் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணனே’ என்று அந்த எம்பெருமானையே நினைத்திருக்க வேண்டும். பசி தாகம் இத்யாதிக்கு இடம் கொடுக்கக் கூடாது. சோம்பலை விட வேண்டும். பகவத் விஷயத்தில் சோம்பல் இருந்தால் முடியுமா...?

பகவானை ஸேவிக்க வேண்டுமென்றால் இப்போது போனால்தான் கதவு திறந்திருக்கும் என்னும் போது, இப்போது முடியாது. ஏழு மணிக்குத்தான் முடியும் என்று ஒருத்தர் படுத்துக் தூங்கிக் கொண்டிருந்தாரானால், அதற்கப்புறம் அந்த ஸேவை கிடைக்குமா...? உடனே ஓட வேண்டாமோ! ஆகையினாலே பகவத் விஷயத்தில் சோம்பலுக்கு இடமே கொடுக்கக் கூடாது...

“நின் திருவெட்டெழுத்தும் கற்று நான் உற்றது உன் அடிமைக் கடிமை’ என்று ஆழ்வார் பாடினார். அந்த மந்திரத்தை ஜபித்து ஜபித்து, “ஹே நாராயணா! உனக்கு நான், அடிமையாகவில்லை... உன் அடியார்களுக்கு அடிமையானேன்!” என்று நாம் மகிழ்ச்சி கொள்ள வேண்டும்...

குலசேகர ஆழ்வார், அடியார்க்கும் அடியார்க்கும், அடியார்க்கும் அடியார்க்கும் அடியார்க்கும் அடியார்க்கும் அடியனாய் இருக்கும்படியான நிலையைச் சொல்கிறார்! ‘ஸத்துக்கள் என்பவர்களே இந்த அடியார்கள்தான், தாஸர்கள்தான்.

இதனால்தான் சுவாமி தேசிகன் பாதுகா சஹஸ்ரத்தில் சொல்கிறார்: ‘திருவரங்கத்தில் எம் பெருமானின் திருவடியை ஸேவித்துக் கொண்டு இருக்கக் கூடிய பாகவதோத்தமர்களுடைய பாத தூளி படுவதால் இவ்வுலகம் பாக்கியம் செய்ததே!’ என்றார். ‘ஸத்’

சப்தத்தோடு ஆரம்பித்து 'ஸத்' சப்தத்தோடேயே முடித்தார். அந்த பாதுகா சஹஸ்ரத்தை! முழுக்க முழுக்க அதிலே ஸத் பிரபாவம்தான்; பாகவதோத்தமர்களின் பிரபாவம்தான்.

நம்மாழ்வார் பிரபாவம்; பரதனுடைய பிரபாவம், எல்லாவற்றையும் காட்டினார்.

இந்த ஏழும்தான் பகவானுக்குரியவையாக அவனால் நமக்குச் சித்திக்கும் விஷயங்களாக குறிப்பிடப் பட்டுள்ளன.

**ச**ரி, ஆறு என்பது எதைக் குறிக்கிறது...?

ஞான, பல, வீர, ஐச்வர்ய, சக்தி, தேஜ: இந்த ஆறும் பகவானிடம் உள்ள குணங்கள் என்பதை நாம் உணர வேண்டும். இந்த ஆறு குணங்களையும் உடையவன்தான் தேடத் தகுந்தவன் என்று சாந்தோக்ய உபநிஷத் சொல்லி யிருக்கிறது.

எவனைத் தேட வேண்டும்? என்று கேட்டால், எட்டு குணங்களைச் சொல்கிறது பகவானுக்கு:

பாபமே கலப்பில்லாதவன்,

ஜுர பயம் கிடையாது அவனுக்கு

பசி - தாகம் இத்யாதிகள் கிடையாது.

அவன் எண்ணம் வீணாவதில்லை.

அவனுடைய சங்கல்பம் பழுதுபடுவதில்லை.

- இப்படிப்பட்ட எட்டு குணங்களைக் கொண்டவன் பரமாத்மா.

ஆத்ம சப்தத்தினாலேதான் பரமாத்மாவை நமக்குத் தெரியப்படுத்துகிறது சாந்தோக்ய உபநிஷத். 'அந்த ஆத்மா தேடத் தகுந்தவன்...' என்கிறது. எந்த ஆத்மா...? எட்டு குணங்களை உடையவன். இந்த எட்டு குணங்களை

உடையவன் யார்...? பரமாத்மா! அவனை வெறும் ஆத்மா என்று நினைக்காதீர்கள்; அவன் பரமாத்மா!

வாலியினுடைய தர்ம பத்னி தாரை, இந்த எட்டு குணங்களையுடையவன் பரமாத்மா என்பதை விவரிக்கிறாள். வாலி மாண்டு கீழே கிடக்கிறபோது, அந்த எம்பெருமான் வந்து எதிரே நிற்கிறான்... அவனைப் பார்த்துச் சொல்கிறாள் தாரை. அந்த ஒரு சுலோகத்திலே பரமாத்மாவின் எட்டு குணங்களும் வகைப்படுத்திக் காட்டப்படுகிறது. மஹா பதிவ்ரதையான தாரை, பகவானுடைய எண் குண பரபாவத்தை, சாந்தோக்ய உபநிஷத்தில் சொல்லப்பட்ட ரீதியில் வரிசையாக எடுத்துக் காண்பிக்கிறாள்.

எண் குணத்தினனான பகவான் வேறு வேறு ஞானமாகி மெய்யினோடு பொய்யுமாய் இருக்கிறான். பலப்பல போக மயக்குகள் என்றார் ஆழ்வார். அதன்படி இந்த உலகத்திலே வேறு வேறு ஞானமாக அவனே இருக்கிறான்!

ச்ருதியே வேதமே அப்படித்தான் இருக்கிறது! சிலது - பேத ஸ்ருதியாக இருக்கிறது. சிலது அபேதமாக இருக்கிறது; சிலது கடகமாக இருக்கிறது. சில பேர் ஒன்று சொல்கிறார்கள். வேறொருத்தர் இன்னொன்று சொல் கிறார். இப்படி உலகத்திலே வெவ்வேறு போக, மயக்குகளை உண்டு பண்ணிவிட்டாயே... 'நெறி காட்டி நீக்குதியோ?' என்றார் ஆழ்வார்.

"எனக்கு அதைக் காண்பித்து, இதைக் காண்பித்து, நீ தூர ஒதுங்கிப் போனால் நான் விடுவேனா...? அந்த நெறிகளெல்லாம் எனக்கு வேண்டாம்! நீதான் வேண்டும்! உன்னையே சிக்கெனப் பிடித்தேன். ஏனென்றால் அதெல்லாம் ஞானத்தைப் போட்டுக் குழப்புகிறது.

அதனால் சாஸ்திர ஞானம் படுகிலேசம்! அதைப் படித்துப் பார்த்தால் புத்தியைச் சலிக்கப் பண்ணுகிறது."

'எது வழி...?' என்று கேட்டான் யக்ஷன். அதற்கு தர்மபுத்திரர் பதில் சொன்னார்:

சுருதி வாக்கியம் ஒரே மாதிரி இருப்பதில்லை. ஒரு வாக்கியம் அப்படிச் சொல்கிறது. இன்னொன்று இன்னொரு விதமாகச் சொல்கிறது. புரிந்து கொள்வ தற்குள் பிரும்மப் பிரயத்தனமாக இருக்கிறது.

அது பராசர ஸம்ருதி; இது யாக்ஞவல்க்ய ஸ்ம்ருதி, மனு ஸ்ம்ருதி என்று வெவ்வேறாக இருக்கிறது. இதிலே சொன்ன மாதிரி அதிலே சொல்லவில்லை. அதிலே சொன்ன மாதிரி இதிலே சொல்லவில்லை. எல்லாமாய் புத்தியைப் போட்டுக் குழப்புகிறது. ஒரே ஒரு ரிஷி வந்து சொல்லியிருந்தால், அதைப் பிரமாணமாகக் கொள்ள லாம். ஏகப்பட்ட மஹரிஷிகள், அவர்கள் எல்லோரும் ஏகமாகச் சொல்லியிருக்கிறார்கள். புரிந்து கொள்வது மிகவும் சிரமமாக இருக்கிறது. அதனாலே, இது மொத்தத்தையும் தூரத்தில் தள்ளிவிடு... நம் முன்னோர்கள் எந்த வழியிலே சொல்கிறார்களோ, அதுதான் நமக்கும்...

"வேண்டுவன கேட்டியே!" என்றாள் ஆண்டாள். நம்மால் எது முடியுமோ அதைத்தான் பண்ண வேண்டும் பரமாத்மாவோ வேறு வேறு ஞானமாகி நம்மை மயக்குகிறான்.

இப்படியெல்லாம் வெவ்வேறு வழிகளைக் காட்டி, கொஞ்சம் போய்விட்டு வரட்டுமே! இவன் பாவமெல் லாம் தீர வேண்டுமல்லவா...! அதற்காகப் போய் வரட்டுமே' என்று சற்று நேரம் நம்மை அலைக்கழிக் கிறான். திடீரென்று தன்னைக் காட்டிக் கொடுத்து

விடுவானா அவன்! அப்படியிப்படிப் போய் நம்மை மயக்கி, காக்கச் செய்த பிறகு தான் காட்டிக் கொடுப்பான்.

'இந்த உன் குணத்தை நான் புரிந்து கொண்டு விட்டேன்...' என்கிறார் ஆழ்வார்.

அதற்கும் மேலே, 'மெய்யினோடு பொய்யுமாய்' அவன் இருப்பதைச் சொல்கிறார்.

சில பேருக்கு அவன் பொய்யன். வேறு சில பேருக்கு மெய்யன். யாருக்கு மெய்யன்...? விரும்பித் தொழுவர்களுக் கெல்லாம் மெய்யன் புறமே தொழுவார்க்கெல்லாம் பொய்யன்!

அவனை ஏமாற்றுவதற்காக, நெடுமார்க்கு அடிமை செய்வேன் போல்' அவனைக் கருத, வஞ்சிக்கிறான் ஒருவன்.

ஆனால், பகவான் உள்ளுக்குள்ளே உட்கார்ந்து எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருக்கிறான். வேஷம் போட்டால் செல்லுமா அவனிடத்திலே...? பக்தன் மாதிரி வேஷம் போட்டு பகவானையே ஏமாற்ற வேண்டு மென்றால் முடியுமா! புறமே தொழுதார்க்கெல்லாம் பொய்யன்தான் அவன்!

விரும்பித் தொழுவார்க்கெல்லாம் மெய்யன் ஆவான்.

அவனை விரும்பி அவன் திருவடியைப் பற்ற வேண்டும்.

# 17

**பொ**ய்யினோடு மெய்யுமாய் எம் பெருமான் இருக்கிறான் அல்லவா...? விசேஷமாக ஆயர் குலத்திலே தோன்றினான் அவன். நமக்காகத்தான் அவ்வாறு தோன்றினான். தோன்றி, எடுத்தார் கைப்பிள்ளையாக எல்லோரும் கண்டு, பார்த்து, அனுபவிக்கும்படியாக வளர்ந்தான்.

நமகத்திலே பகவானின் இந்த உயர்ந்த பண்பு சொல்லப்படுகிறது. நாம் அனுபவிக்கும்படியாக அவன் அவரித்த குணம்...

'த்ருசன் அத்ருசன், த்ருசன் அத்ருசன்...' என்கிற சப்தம் அதிலே திரும்பத் திரும்ப வரும். ஒருமுறை திருக்குடந்தை ஆண்டவன் சுவாமிகள் எழுந்தருளியிருந்த போது கனபாராயணம் நடந்தது. அப்போது இந்த நமகம் சொல்லப்பட்டது.

சுவாமிகள், "குழந்தைகளெல்லாம் ஓடி வரு கிறார்கள், பாருங்கள், பாருங்கள்" என்றார்.

எல்லோரும் திரும்பிப் பார்த்தார்கள். ஒரு குழந்தையையும் காணோம்!

"இத்தனை 'அத்ருசம்' கொடுத்தால் ஏன் குழந்தைகள் ஓடி வராது?" என்று கேட்டார் ஸ்வாமி! சிரித்துக் கொண்டு சமத்காரமாகப் பேசுகிறார்...!

இந்த நமகம் என்ன சொல்கிறது என்று கேட்டால், அழகான வாக்யம் ஒன்று சொல்கிறது:

பிராத: காலத்திலே சூரியனை முதலில் பார்க்கும் ஜாதி எது என்று கேட்டால், அது ஆயர் ஜாதி - ஆயர்பாடி மக்கள். அவர்களெல்லாம் பசுக்களை ஓட்டிக் கொண்டு ஆநிரை பின்னாலே கறவைகளை ஓட்டிச் சென்றபடியே சூர்யோதயத்தைப் பார்த்து விடுவார்கள். அவ்வாறு பார்க்கக் கொடுத்து வைத்தவர்கள்தான் ஆயர் குலத்திலே உதித்தார்கள். கிருஷ்ணாவதாரத்திலே, இவ்வாறு சூரியனை முதன் முதலில் கண்ட குலத்திலே வந்து வளர்ந்தான் பரமாத்மா. அதனால் தான் ஆயர்தேவு என்றே அவனுக்குப் பெயர்.

ராமாவதாரத்திலோ, சூர்ய குலத்திலேயே பிறந்தான்.

இவ்வாறு தமது திருவவதாரங்கள் மூலம் நாம் சூரியனை நித்தியம் பார்க்க வேண்டும்; வழிபட வேண்டும் என்று உணர்த்தினான்.

எல்லோரும் தன்னை அனுபவித்தறியும் வகையில், அவன் தன்னைத் தாழ இட்டுக் கொண்டான்.

ஆழ்வார் என்ன சொல்கிறார் பாருங்கள்:

மூன்று முப்பது ஆறினோடு ஓர் ஐந்தும் ஐந்தும் ஐந்துமாய்
மூன்று மூர்த்தி ஆகி, மூன்று மூன்று மூன்று மூன்றுமாய்,
தோன்று சோதி மூன்றுமாய்த் துளக்கம் இல் விளக்கமாய்,
ஒன்று என் ஆவியுள் புகுந்தது என்கொலோ? எம் ஈசனே?

(திருமழிசைப்பிரான் அருளிச் செய்த திருச்சந்த விருத்தம்.)

'மூன்று முப்பதாறினோடுமோர் ஐந்தும் ஐந்தும் ஐந்துமாய்' என்றால் என்ன அர்த்தம்...? முப்பத்து மூன்று மெய் எழுத்துக்கள்; பதினாறு உயிரெழுத்துக்கள், ஐந்து

உயிர்மெய் எழுத்துக்கள் - இவற்றில் மொத்தம் ஐம்பத்து நான்கு அக்ஷரங்கள். அந்த அக்ஷரங்களாக பகவானே இருக்கிறான்.

அக்ஷரமாக அவன் இருக்கிறானா...?

இருக்கிறான்! வேதாக்ஷரங்கள் இருக்கிறது பாருங்கள். அதிலே வராத ஒலிநயங்கள் உண்டோ. எல்லா அக்ஷரங்களும் பகவான்தான்.

அது மாத்திரமில்லை... மூன்று மூர்த்தியாகவும், மூன்று மூன்று மூன்று மூன்றுமாகவும் உள்ளான்.

மூன்று மூர்த்தி என்றால் மூன்று வேதங்கள் - ரிக், யஜுர், ஸாம, வேத ரூபமாய் பகவானே இருக்கிறான். அதனால்தான் திருமங்கையாழ்வார் 'வேதத்தை' வேதத்தின் சுவைப் பயனை, என்று பாடினார்:

வேதத்தை வேதத்தின் சுவைப் பயனை,
விழுமிய முனிவரர் விழுங்கும்
கோது இல் இன் கனியை, நந்தனார் களிற்றை
குவலயத்தோர் தொழுது ஏத்தும்
ஆதியை அமுதை, என்னை ஆள் உடை
அப்பனை – ஒப்பவர் இல்லா
மாதர்கள் வாழும் மாட மா மயிலைத்
திருவல்லிக்கேணி கண்டேனே

நிற்கிறானே பார்த்தசாரதிப் பெருமாள்... அவன் வேதமே என்கிறார்.

மூன்று மூன்று மூன்று மூன்றுமாய் -அப்படியானால் பன்னிரண்டு! 'ஓம் நமோ பகவதே வாசுதேவாயா' என்ற த்வாதஷாக்ஷரி மந்திரத்திலே எம் பெருமான் இருக்கிறான்.

நாராயண (அஷ்டாக்ஷர) மந்திரமே முதலில் சொல்லப்பட்டது.

த்வாதசாக்ஷரி பிறகு - த்ருவனுக்கு - அந்தச் சின்னக் குழந்தைக்கு - அதை நாரதர் சொல்லிக் கொடுத்தார். ஒரு நாலரை மாதத்துக்குள் அதைச் சம்பாதித்துக் கொண்டு விட்டது குழந்தை. எம்பெருமானை நேரே, பிரத்யக்ஷமாகக் கொண்டு வந்து நிறுத்தி விட்டது; துவாதஷாக்ஷரியைச் சொல்லி!

பிரணவம் ஓர் எழுத்து,

நம: இரண்டெழுத்து

பகவதே நான்கெழுத்து

வாசுதேவாய ஐந்தெழுத்து

மொத்தத்தையும் கூட்டினால் பன்னிரண்டு எழுத்து. இந்தப் பன்னிரண்டு எழுத்துக்கும் விளக்கமாக, ஸ்ரீமத் பாகவதத்திலே ஒவ்வொரு எழுத்துக்கும் ஒரு ஸ்கந்தம். 'ஓம் நமோ பகவதே வாசுதேவாய' என்ற மந்திரத்தை விவரிக்க வந்ததுதான் பாகவதமே! அவ்வளவு ஏற்றமுடைய மந்திரம் அது.

அந்த எம் பெருமான் சர்வ பதார்த்தங்களிலேயும் வாஸம் பண்ணுவதாலே 'வாஸனாத் வாஸுதேவ! என்று பெயர் பெற்றான். சர்வத்ர வஸதி - ஆதலால் வாசுதேவன்.

வாசுதேவ புத்ரன் என்பதனாலும் அவன் வாசுதேவன். இது அவதார காலத்திலே. ஆனால் எப்பொழுதுமே அவன் வாசுதேவன். வாசுதேவனுடைய பிள்ளையாகப் பிறந்ததனால் அல்ல - எப்போதும் எங்கேயும் நிறைந்திருப்பதனாலே, சர்வத்ர வஸதி - எங்கும் வாஸம் செய்பவன். இதைத்தான் 'மூன்று மூன்று மூன்று மூன்றுமாய் மூன்று ஜோதி மூன்றுமாய் துளக்கமில் விளக்கமாய்...' என்று பாடினார்.

மூன்று ஜோதி என்றால் என்ன...? அ-உ-ம-என்று பிரணவத்துக்குள்ளே ஒளிரும்படியான ஜோதிஸாக,

பிரணவ ஸ்வரூபியாக இருக்கிறான் எம் பெருமான். ஓம்கார ரூபியாய், உயிர் முடிச்சாய் சர்வத்துக்கும் மூலகாரணமாக இருக்கிறான். அதைத்தான் பரமாத்மா கீதையிலே ஒரே வார்த்தையிலே சொல்கிறான் :

"பரமாத்மா என்றால் யாரென்று நினைத்துக் கொண்டிருக்கிறாய் அர்ஜுனா? உத்தமன் அவன். அவன் உயர்ந்தவன்."

உத்தம சப்தத்துக்கு உயர்ந்தவன் என்று பொருள். இன்னொரு பொருள் சாந்தோக்ய உபநிஷத் சொல்கிறது.

அது, உத்தர:, உத்தம:

உது என்றால் யார்...? இந்த சம்ஸார பந்தத்தை விட்டு, இனிமேல் பிறவி இல்லை என்று மோக்ஷத்தை அடைந்த முக்தாள் இருக்கிறார்கள் பாருங்கள்... அவர் களுக்கு 'உத்' என்று பெயர். 'உத்தராள்' என்றால், எப்போதும் பகவானிடத்திலேயே இருக்கும், பிறவியே யில்லாத நித்யசூரியகள். அனந்த, கருட, விச்வக் சேனாதிகள், இப்படிப்பட்ட நித்ய சூரிகள். அவர்கள் எப்போதும் அங்கேயே இருந்துகொண்டு, பகவானை ஸேவித்துக் கொண்டிருக்கிறார்கள்.

இவர்கள் இரண்டு பேரைக் காட்டிலும் இந்த உத், உத்தராள் ஆகிய இருவரைக் காட்டிலும் விலக்ஷண மானவன் - வேறானவன் - மேலே உட்கார்ந்திருக்கிற பரமாத்மா.

ஸ்ரீரங்கத்துக்குப் பக்கத்தில் உத்தமர் கோயில் என்றே ஒரு க்ஷேத்திரம் இருக்கிறது. அதிலே உத்தமன் என்றே எம் பெருமானுக்குப் பெயர்.

ஆண்டாள் சொல்கிறாள்: 'ஓங்கி உலகளந்த உத்தமன் பேர் பாடி...' ஓங்கி உலகளந்தவன், உத்தமன் என்று காட்டிக் கொடுக்கிறாள். ஆகவே உத்தம புருஷன்

அவன், அவன் அன்ய: இதற்கெல்லாம் மாறுபட்டவன் - பிற மானுட உத்தமர்களுக்கெல்லாம் மாறுபட்ட உத்தமன். அவன்தான் பரமாத்மா என்று சொல்லப்படுகிறான்.

இப்போதும் – இதுவரை சொன்னவையெல்லாம் தான் அவனா...? என்று கேட்டால்... இதையெல்லாம் தெரிந்து கொண்டால், அவனைத் தெரிந்து கொண்ட தாகிவிடுமா? என்று கேட்டால்... ஏதோ கொஞ்சம் கொஞ்சம் தெரிந்து கொண்டதாகுமேயொழிய, பூர்த்தியாகத் தெரிந்து கொண்டதாகிவிடவே முடியாது.

உன் பிரபாவத்தை யாவர் காணவல்லரே! யாராலே காண முடியும்! ஏதோ, அது இது என்று சொல்லி, இதுதான் அவன் – இதைத் தெரிந்து கொள்ளுங்கள் என்று சொல்லி முடித்து விடுகிறோம். அவனிடத்தில் இருக்கிற பெருமைக் குறைவினால் நிகழ்வதல்ல இது; நாம் போய் போய் நெருங்கிப் பார்க்கத்தான் பார்க்கிறோம். ஆனால் கடைசியில் நம்முடைய புத்தி அதற்கு மேல் போக முடியாமல் ஓரிடத்தில் நின்று போகிறது. ஆதலால் எவ்வளவு நேரமானாலும் அவன் பிர்பாவத்தைச் சொல்லிக் கொண்டேயிருக்கலாம்; அவனைத் தேடிக் கொண்டே இருக்கலாம். அதற்கு ஏது முடிவு?

'முடிவில்லாதோர் எழில்' என்று அவனுடைய எழிலுக்கு முடிவில்லாததைப் பாடினார்கள். அவன் எழிலுக்கும் முடிவில்லை; அவன் குணத்துக்கும் முடிவில்லை; ரூபத்துக்கும் முடிவில்லை... எதை எடுத்துக் கொண்டாலும் முடிவே கிடையாது. அவனிடத்திலே.

அனந்தாவை வேதா - அனந்தமாய், எல்லா வற்றுக்கும் மேலாக, எங்கும் விரிந்து, பரந்து காணப் படும்படியான எம் பெருமான் எங்குமிருப்பவன். அவனே நம்முள்ளும் இருக்கிறான் என்பதை உணர்ந்து,

அவனுடைய திருவடியிலே நித்ய பக்தியுடன் ஆத்ம சமர்ப்பணம் பண்ணக் கூடியவர்களுக்கு, எளிதில் சுலபமாக அவன் கைக்குள்ளே வந்து நிற்பான்.

அவன் பரமாத்மாதான். ஆனால், அவன் பரமாத்மா என்று பயந்து கொண்டு ஒதுங்க வேண்டாம். அவனே சுலபாத்மாகவும் இருக்கிறான். சுலபத்தில் கிடைக்கக்கூடிய நிலையும் அவனிடத்தில் இருக்கிறது.

விரும்பி வணங்கி அவனைத் தொழ வேண்டும் என்று வலியுறுத்துகிறார்கள் ஆசார்யார்கள். பரமாத்ம சப்தம் பலபடியாக இவ்வாறு எடுத்துக் காட்டப்படுகிறது. அதைச் சொல்லி முடிக்க முடியாது என்பதை மட்டும்தான் நான் சொல்லி முடிக்க முடியும்!

# 18

ஸஹஸ்ர நாம மகிமையைச் சொல்கிற போது, அது இதைத் தரக் கூடியது, அதைச் செய்ய வல்லது என்று சொல்லுவோமேயானால், அதன் பெருமையை நாம் குறைத்துச் சொல்வதாகவே ஆகும்.

ஒரு குடும்பத்திலே ஒருத்தருக்குச் சித்தப் பிரமையைப் போக்கியது என்று சொல்லலாம். இப்படி யெல்லாம் ரோகத்தைப் போக்கிற்று என்று சொன்னால் அதற்குப் பெருமையா? சிறுமையா? நாம் எப்படிப் புகழ்ந்தாலும், நாம் புகழ்வதெல்லாம் சிறுமையாகத்தான் இருக்கும்! ஏனென்றால், சஹஸ்ரநாமம் எதையும் சாதிக்க வல்லது. அதிலே இல்லாத பெருமை வேறெதிலேயுமே இல்லை - இந்தப் பெருமை அந்த ஆயிரம் நாமத்துக்கு மட்டுமே அமைந்திருக்கிறது.

அதனால்தான், கேரள தேசத்திலே, திருவனந்த புரத்திலே நாம் பார்க்கலாம்... அங்கே கோயில் பிரகாரத்திலே, மிகப் பெரிய தொட்டி இருக்கும். கல்லாலே கட்டிய தொட்டி. ஊட்டப் பிறை என்று பெயர் அதற்கு. அதிலே அன்னத்தைக் கொட்டி வைத்துப் பரிமாறுவார்கள். அன்னதானம் செய்வார்கள்.

திருவனந்தபுரம் கோயில் பிராகாரம் இருக்கிறது பாருங்கள்... அது ரொம்பப் பெரிசு! அதைப் பிரதக்ஷிணம் பண்ணி வந்தாலே சரீரம் திரடமாக இருக்கும். அந்தப்

பிராகாரம் பூராவும் ஜனங்களை அமர்த்தி, அன்னதானம் செய்வார்கள். ஒருத்தரை அமர்த்தி, **'விச்வஸ்யை நம:'** என்று சஹஸ்ரநாமத்தின் முதல் நாமாவைச் சொல்லி ஆரம்பித்து, ஆயிரம் நாமங்களையும் சொல்லி வரித்து, ஆயிரம் பேருக்கு அன்னதானம் நடக்கும். கண்கொள்ளாக் காட்சி அது! அத்தனை பேர் உட்கார்ந்து சாப்பிடுவதற்கு இடம் இருந்திருக்கிறது!

அப்படிப்பட்ட சஹஸ்ரநாமத்தைப் பாராயணம் பண்ணி, குழந்தைகளுக்கெல்லாம் சொல்லி வைத்து, அவர்களைச் சொல்ல வைக்க வேண்டும். பகவானுக்கு முன்னால் நின்று நித்யம் ஒரு பத்து நாமாவாவது அவர்கள் சொல்ல வேண்டும்.

சர்வதேவாந்தர்யாமியாக விளங்கக் கூடியவன் அந்தக் கேசவன் - எதை நாம் செய்தாலும் அது எம்பெருமான் கேசவனுடைய திருவடிக்கே அர்ப்பண மாகிறது, என்று விசேஷமாக சாஸ்திரங்கள் கூறுகின்றன. வேதத்திலே இருக்கும்படியான மந்திர வாக்கியங்கள், ரிக்குகள் விசேஷமாகக் கொண்டாடப்படும்படியான நிலையிலே உள்ள சப்தங்கள் - இந்த மந்திர சப்தங்களைக் கடைந்தெடுத்துக் கோத்த உயர்ந்த திருநாமங்கள் ஆயிரம் தான் சஹஸ்ரநாமம் ஆயிற்று.

வேத விகிதமான - வேதத்தில் சொல்லப்பட்ட, மந்திர ரூபமாக இருக்கக் கூடிய அந்த வாங்மயமே, நாம ரூபமாக சஹஸ்ர நாமத்திலே நமக்கு அமைந்திருக்கிறது. வேதம் என்றால் அதற்கு ஸ்வரம் உண்டு. அபஸ்வரமாய்ச் சொன்னால் பலன் கொடுக்காது.

ஸிக்ஷா வியாகரணம், சந்தஸ், நிருத்தம், ஜோதிஷம், கல்பம் போன்ற வேத அங்கங்களின் விதிகளுக்கு உட்பட்டே நாம் வேத ஞானத்தை அடைய வேண்டும்.

அப்போதுதான் அதை நன்கு கற்று உணர முடியும். இந்த ஞானம் ரொம்ப முக்கியம்.

சீக்ஷா என்கிற கிரந்தமானது, வேதத்தை அபஸ்வர மாக உச்சரித்தால் பலன் தராது என்று சொல்கிறது. சுஸ்வரமாகத்தான் சொல்ல வேண்டும். அதற்காகச் சிரமப்பட்டு அத்யயனம் பண்ண வேண்டும் என்கிறது.

விதித்தபடி உச்சரிக்காவிட்டால், அர்த்தம் மாறி விடும். அந்த வார்த்தை பொய்யான வார்த்தையாகிவிடும் – ஆகவே, நல்ல முறையிலே அதை உச்சரிக்க வேண்டும். உச்சாரண படுத்தும் (திறமை) வேண்டும்.

அதற்கும் மேலே ஸ்வர சுத்தம். ஸ்வரத்திலே மாறுதல் ஏற்பட்டால்...? வாக்வஜ்ர: என்பார்கள். அந் வாக்கு ஒருவனால் அபஸ்வரமாக, வேறு விதமாகச் சொல்லப்பட்டால், அப்படிச் சொல்லப்பட்ட சப்தமே வஜ்ராயுதமாக மாறி, யார் யக்ஞத்தைப் பண்ணுகிறார் களோ, அந்த யஜமானனையே போய் அடிக்கிறது. தப்பாகச் சொன்னவரையும் அடிக்கிறது. கேட்கிறவர் களையெல்லாம் அடிக்கிறது. அடித்து, இருக்கிற இடம் தெரியாமல் ஒழிக்கிறது அவ்வளவு சித்திரவதை பண்ணுகிறது.

சுஸ்வரமாகச் சொல்லி, ஒரு காரியத்தைச் செய்யும் போது ஏற்படக் கூடிய பலனானது, அபஸ்வரமாக அதைச் சொல்லும் போது விபரீதமாக மாறிவிடும்!

வேதமும் இதைச் சுட்டிக் காட்டுகிறது.

யதேந்த்ர சத்ரு: ஸ்வரதோ அபராதாத்

பூர்வத்திலே த்வஷ்டா என்று ஒருவன் இருந்தான். தனக்குப் பிள்ளை பிறக்க வேண்டும் என்று ரொம்ப ஆசைப்பட்டான்.

அந்தப் பிள்ளை எப்படி இருக்க வேண்டும்? இந்திரனைப் போய் அடித்து, அமராவதிப் பட்டிணத் திலேயிருந்து கிழே தள்ளிவிட்டு, அந்த இந்திர சாம்ராஜ்யத்திலே போய் அமரும்படியான ஏற்றமிகு பலம் பொருந்தியவனாக இருக்க வேண்டும். அப்படி ஒரு பிள்ளை தனக்கு உண்டாக வேண்டும் என்பதற்காக, புத்ரகாமேஷ்டி யாகத்தைப் பண்ணி வைக்கும்படியாக ஆசார்யரிடத்திலே பிரார்த்தித்தான்.

அதற்கு ஆசார்யர் என்ன சொன்னார்...?

"காம்யேஷ்டிகளெல்லாம் யார் பண்ணுகிறார் களோ, அவர்களே மந்திரத்தைச் சொல்ல வேண்டும். அதற்குண்டான மந்திரங்களையாவது முன்னரே கற்றுக் கொள்ள வேண்டும். கற்றுக் கொண்டு தான் அந்தக் காரியத்தில் இறங்க வேண்டும்" என்றார்.

இவனுக்கோ, மந்திரங்களெல்லாம் தெரியாது. "உன் கோரிக்கைக்கு நல்ல முறையிலே பலன் உண்டாக வேண்டுமானால், முதலில் யக்ஞத்துக்குண்டான மந்திரத்தைக் கற்றுக் கொள்; அதற்கப்புறம் நான் யக்ஞம் பண்ணி வைக்கிறேன்" என்றார்.

இதற்கு அவன் ஒப்புக் கொள்ளவில்லை. பலனில் தான் அதிக ஆசை உள்ளவனாக இருந்தான் அவன். என்ன பண்ணினான்... "சுவாமி நீங்கள் நடத்தி வையுங்கள். எந்த இடத்திலே எப்படிச் சொல்லச் சொல்கிறீர்களோ, அப்டிச் சொல்லுகிறேன்" என்றான்.

அப்யாஸம் இல்லாமல், சுலோகங்களை மனப் பாடமும் பண்ணாமல், அவன் யக்ஞம் பண்ணத் துணிந்தான்! அப்யாஸம் ரொம்ப முக்கியம். திரும்பத் திரும்ப ஆவ்ருதிகளைச் சொல்ல வேண்டும். விடியற் காலையில் மூன்று மணிக்குப் பிரும்ம முஹூர்த்தத்தி

லேயே எழுந்து, அப்யாஸம் பண்ணினால் தான் புத்தியிலே நிலைக்கும். சின்ன வயதிலே பண்ணாமல், பிராத காலத்தில் பண்ணாமல், அகாலத்திலே அப்யாஸம் பண்ணினால், எதுவுமே வராது.

திடீரென்று ஒருத்தன் யக்ஞத்தின் முன்பாக அமர்ந்து மந்திரத்தைச் சொல்ல வேண்டும் என்றால், சொல்ல வருமா?

ஆனால் அவன் நிர்பந்தித்தான். அந்த நிர்பந்தத்தி னாலே ஆசார்யரும் யக்ஞத்தை நடத்தி வைத்தார். முக்கியமான ஹோமம் - பரிஹரண ஹோமம் என்று அதற்குப் பெயர். பலனைக் கொண்டு வரக்கூடிய ஹோமம் அது. 'ச்ருக்கு, ச்ருவத்தைக் கையிலே எடுத்துக் கொள்' என்று அவனிடம் கொடுத்தார் ஆசார்யர். "புரோடாசத்தை வை; அதிலே நெய்யைத் தடவு..." என்றார். "எழுந்து நில், இப்போது நான் சொல்வதைச் சொல்..."

இதுவரைக்கும் சொல்லியே அறியாதவனானதாலே, மந்திர ஞானம் இல்லாததனாலே, அவன் என்ன பண்ணினான்... ஸ்வரத்தை மாற்றிச் சொல்லிவிட்டான்!

அபஸ்வரமாக வேதத்தைச் சொன்னதாலே, 'இந்திரனை வீழ்த்தித் தள்ளக் கூடிய பிள்ளை வேண்டும்" என்று கேட்பதற்குப் பதிலாக, 'இந்திரனால் வீழ்த்தப்படக் கூடிய பிள்ளை உண்டாக வேண்டும்' என்று கேட்பதாக அர்த்தமாகிவிட்டது.

தொடர்ந்து, ஹோம குண்டத்திலிருந்து விருத்தரா சுரன் என்று ஓர் அசுரன் உண்டானான். அந்த விருத்தராசுரன் எதற்காக உண்டானான்...? இந்திரனை அழிப்பதற்காகத்தான் என்று இவர் நினைக்க, இந்திரனால் கொல்லப்பட்டான் அவன்!

ஆகவே, ஸ்வரத்திலே பேதம் வந்து விட்டால் விபரீதம்தான்.

தேவதைகள் இந்த ஸ்வரத்துக்குக் கட்டுப்பட்டவர்கள். ஸ்வரத்தை மாற்றினால் விபரீத பலன்தான். லௌகீகத்திலே கூட நாம் ஸ்வரத்தை மாற்றிச் சொன்னால் அர்த்தம் மாறிப் போய்விடுகிறது.

"நேற்றே எதிர்பார்த்தேனே... உங்களை... இன்றைக்குத்தான் ஒழிஞ்சாற்போலிருக்கு...!" என்று சொல்லும்போது என்ன அர்த்தம்...? 'இன்றைக்கு ஏன் வந்து தொலைந்தீர்?' என்று கேட்பதுபோல்தான் அந்த தொனி அமைகிறது.

வீட்டுக்குள்ளே ஒருத்தர் வருகிறார். 'வாருங்கள்' என்று அழைப்பது வழக்கம். "வா...ங்கோ!" என்று இழுத்து, குரலில் நக்கல் சேர்த்துச் சொன்னால், "போங்கோ!" என்று தான் அர்த்தமாகும்!

த்வனியே அர்த்தத்தை மாற்றிவிடுகிறது. லௌகீகமான பாஷையிலேயே நாம் ஸ்வரத்தை ஏற்றி, இறக்கி, அழுத்திச் சொன்னால், அர்த்தம் மாறிப் போய்விடுகிறது.

வேதமோ, முழுக்கவே ஸ்வரங்கள்தான். ஆகையினாலே ஸ்வரம், த்வனி, இதெல்லாம் ரொம்ப முக்கியம்.

வெறுமே உட்கார்ந்திருந்தால் வேதத்தை அவ்வளவு சுலபமாக எடுத்து ஆள முடியுமா? எல்லோராலும் முடியாது. அதனால்தான் வேதத்தையே மாற்றி, திருநாமமாகக் கொடுத்திருக்கிறது. சஹஸ்ரநாமமாகத் தந்திருக்கிறது.

இந்த நாமங்களுக்கு என்ன ஸ்வரம்?...

ஒருத்தர் ஸஹஸ்ரநாமத்தை நன்றாகப் பிரித்து அழகாகச் சொல்கிறார்.

ஒருத்தருக்குப் பாட்டிலே நல்ல ஞானம். அவர் ஆலாபனை பண்ணி, ஒவ்வொரு சுலோகத்துக்கும் ராகம் போட்டு, அழகாகப் பாடுகிறார்.

எப்படிச் சொன்னாலும், படித்தாலும், கானம் பண்ணினாலும் மதுரமானது .சஹஸ்ரநாமம். கட்டுத் திட்டங்களையெல்லாம் குறைத்துக் கொண்டு, வேதமே வால்மீகி வாக்கிலே ராமாயணமாக வந்ததே... அந்த மாதிரி பீஷ்மாச்சார் யாருடைய திருவாக்கிலே உத்தமோத்தமமான வாங்மயங்கள் - மந்திரங்கள் எல்லாம், உயரிய சந்தஸ்ஸிலே வந்து, விஷ்ணு சஹஸ்ர நாமமாக அமைந்தன.

# 19

சஹஸ்ரநாமத்தை எப்படிப் படித்தாலும், சொன்னாலும், கானம் பண்ணினாலும், அது மதுரமானது என்று சொன்னேன். அப்படிப்பட்ட சஹஸ்ரநாமத்திலே வரும் 'பரமாத்மா' என்ற நாமாவைப் பற்றித்தான் இப்போது உபன்யாஸம்.

பரமாத்மாவைக் காட்டிலும் மேம்பட்டவன் இல்லை என்று உபநிஷத் எடுத்துக் காட்டுகிறது.

பரமாத்மா, அபரமாத்மா என்று இரண்டாகச் சொல்கிறது, இங்கே...

பரமாத்மாவினிடத்திலே ஒருத்தன் ஈடுபட்டு விட்டானானால், அந்த எம்பெருமானுடைய ரஸத்தைத் தெரிந்து கொண்டு விட்டானானால், அவன் எப்படிப் பட்டவன் என்பதை உணர்ந்து விட்டானானால், அதைத் தவிர, மற்றைய விஷயங்களிலே ஒரு நாளும் புத்தி போகாது.

**அபரமாத்மனி விரக்த:-** எம்பெருமானைத் தவிர, வேறொரு விஷயத்திலே புத்தி போகாது. மீதி விஷயங்களைக் கேட்கவே பிடிக்காது.

வேதாந்த விஷயத்தையே ஒருத்தர் கேட்டு காலக்ஷேபம் பண்ணுகிறார்... ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரய ஸாரம், ஸ்ரீ பாஷ்யாதி கிரந்தங்களெல்லாம் காலக்ஷேபம் பண்ணுகிறார். ஸ்ரீ பாஷ்யம், பிரும்ம சூத்ர பாஷ்யம்,

பகவத் கீதா பாஷ்யம், பகவத் விஷயம் எல்லாம் கேட்டு, மனத்திலே நடையாடி விட்டதானால், பூரணமாக வந்துவிட்டதானால், சாமான்ய விஷயங்களையெல்லாம் கேட்கப் பிடிக்குமோ ஒருத்தருக்கு...! எல்லாமே சாமான்யமாகத் தோன்றும். பகவத் விஷயம் மாத்திரமே இனிக்கும். ஏனென்றால், உயர்ந்த விஷயம் மனத்திலே வந்து உட்கார்ந்து விட்டதனாலே, சாமான்ய விஷயங்கள் அதனுள் புகாது. அதனால்தான் அவனைத் தவிர மற்ற விஷயங்களில் விரக்தி; அவனிடத்திலே மட்டும் ரக்தி.

அவனையே ஆராய வேண்டும், அவன் விஷயத்தையே கேட்க வேண்டும்; அவனையே தேடிக் கண்டுபிடிக்க வேண்டும்... என்று புத்தியானது வேகமாக அதிலேயே போகும். ஆனால் அதற்கும் – அப்படிப் போவதற்கும் – அவன் கடாக்ஷம் வேண்டும். இதை மத்வாச்சார்யார் அழகாக எடுத்துச் சொல்கிறார். மகாபாரதத்திலிருந்து எடுத்து உதாகரிக்கிறார். மகாபாரதத்திலே இருக்கும்படியான கர்ண பர்வத்திலே வரும் :

**ந விஷ்ணு: கீர்த்தயேத் விஷ்ணும்...**

என்ற பதம்.

விஷ்ணுவின் அருள் இல்லாவிட்டால், விஷ்ணுவை நாம் ஸ்மரிக்க, துதிக்க முடியாது!

இதே மாதிரி சுலோகம் ராமாயணத்திலேயும் இருக்கிறது:

**நாந்ருக் வேத வினீதஸ்ய நா யஜுர் வேத தாரிண:**

–இது ஆஞ்சனேயனைக் குறித்துச் சொன்ன சுலோகம்.

முதல் ரூபம் வாயு பகவானுடைய ரூபம். வேகமாகப் பலன் கொடுக்கக் கூடிய தேவதை வாயு பகவான். அந்த

வாயுவை அடுத்து ஆஞ்சனேயனாக, வாயுகுமாரனாக வந்து அவதரித்தான். அஞ்சனேயனுடைய பராக்கிரமம் அபரிமிதம். இதை பகவான் ஸ்ரீராமனே கொண்டாடு கிறான்.

'ந ரிக் வேத வினீதஸ்ய
ந யஜுர் வேத தாரிண:

என்று ஆரம்பித்துச் சொல்கிறான். பகவானே கொடுக்கிற நற்சாட்சிப் பத்திரம் இது! ராமனே கையெழுத்துப் போட்டு விட்டான்!

ஆஞ்சனேயனுடைய பேச்சை ஆச்சர்யமாகக் கேட்கிறான் ஸ்ரீ ராமன். கேட்டு விட்டுச் சொல்கிறான் :

"ஒரு ரிக் வேதத்தை அத்யயனம் பண்ணாதவன் இப்படிப் பேச முடியுமா?" ஆஞ்சனேயன் ரிக் வேதத்தை நன்கு, பூரணமாகத் தெரிந்து கொண்டவன்.

நீண்டு நீண்டு இருக்கும்படியான தீர்க்கமான ஸ்வரங்களோடு கூடியது ரிக் வேதம். மேலே இருக்கக் கூடிய எம்பெருமானைக் காட்டக் கூடிய ஸ்வர பந்தத்தோடு இருக்கும். அப்படிப்பட்ட ரிக் வேதத்தை அத்யயனம் பண்ணாமல், இந்த வாக்படுத்துவம் எப்படி சித்திக்கும் ஆஞ்சனேயனுக்கு!

யஜுர் வேதத்தைக் கசடறக் கற்கவில்லை என்றால், இந்த வாக்கு சித்திக்குமா? யஜுர் வேதத்திலே வாக்கு நன்றாகத் திரும்பிவிட்டதானால், அவனால் சொல்ல முடியாத சப்தம் என்பதே கிடையாது. அப்படி எத்தனையோ கடினமான சப்தங்கள்அடங்கியது யஜுர் வேதம். நீள நீளமான சப்தங்களோடு கூடிய கனத்தைச் சுலபமாகச் சொல்லிவிடலாம். ஆனால் யஜுர் வேதத்திலே குறுகிய சப்தங்கள் - ஒரு அக்ஷரம், இரண்டு

அக்ஷரம் சேர்ந்து சேர்ந்து, சுருதி ஏற்ற இறக்கத்தோடு அமைந்திருக்கும். சொல்வது ரொம்பக் கஷ்டம்.

அந்த மாதிரி இருக்கும்படியான பஞ்சாஷத்துக்கள் எத்தனையோ இருக்கின்றன. அடுத்த அக்ஷரம் என்ன? அடுத்த பதம் என்ன, என்று தோன்றாமல் போய்விடும். அப்டிப்பட்ட அமைப்பு – கடினமான அமைப்பு யஜுர் வேதத்துக்கு – அதிலே சந்தி ரொம்ப முக்கியம். தொடர்ந்து கனம் சொல்லிக் கொண்டே வருகிறபோது, என்ன பதம் அதிலே வருகிறது என்று கண்டுபிடிப்பது கூடக் கஷ்டம். அந்த சந்தி சேர்கிறபோது, அதிலே வருகிற அழகு சொல்லி முடியாது!

யஜுர் வேதம் அப்படி சபாரஞ்சகமாக இருக்கிறது.

யஜுர் வேதத்தை அத்யயனம் பண்ணாமல் ஆஞ்சனேயனால் இப்படிப் பேச முடியுமா...? ஆகையினாலே, யஜுர் வேதத்தை நன்கு அத்யயனம் பண்ணியவன் இந்த ஆஞ்சனேயன்.

வீணையிலே தாளம் போடுகிற மாதிரி வரக்கூடிய ஸாம வேதம் இருக்கிறதே... அதை அத்யயனம் பண்ணாமல் இப்படிப் பேச முடியுமா...?

எம்பெருமானே 'சலிக்காத தத்துவம்' என்று சொல்லி, தனக்குள் அவனை அடக்கிக் கொண்ட வேதம், அதர்வணவேதம். இந்தக் க்ாலத்தில் என்னென்ன நவீன கண்டுபிடிப்புகள் இருக்கிறதோ, அத்தனைக்கும் மூலம் அதர்வண வேதம். அஸ்திர – சஸ்திரப் பிரயோகங்கள், உபசம் ஹாரங்கள் எல்லாம் அமைந்திருக்கின்றன அதர்வண வேதத்திலே. அதர்வண வேதத்தில் இல்லாத மந்திரங்களே கிடையாது! அப்படி ஏற்றமுடைய வேதம் அது.

வசிஷ்டர், தாம் உட்கார்ந்து கொண்டு, அதர்வண வேதத்தை நன்கு உணர்ந்த அதிகாரிகளைக் கொண்டு, தசரதனுக்கு யக்ஞத்தை நடத்தி வைத்தார். அதர்வண வேதத்தினாலே புத்திர சித்தியானது உடனே ஏற்படும், என்று பண்ணி வைத்தார் அந்த மகான்.

"அப்படிப்பட்ட அதர்வண வேதம் தவிர, வியாகரணம், இத்யாதி விஷயங்களையும் நன்கு கேட்டு உணர்ந்திருக்கிறான் இந்த ஆஞ்சனேயன். நவவியாகரண பண்டிதன் இவன்...'' என்றெல்லாம் கொண்டாடி பகவான் ஸ்ரீ ராமன் சொல்கிறான்.

"என்ன பேசுகிறான்! என்ன பேசுகிறான்? நிறையப் பேசுகிறான் இவன். ஆனாலும் ஒரு இடத்திலேயாவது அபசப்தம் உண்டோ! அபசப்தமேயில்லாமல் இவ்வளவு அழகாகப் பேசுகிறானே'' என்று ஆச்சர்யமான முறையிலே கொண்டாடுகிறான்.

இதனாலேதான், சொல்லின் செல்வன் என்று ஆஞ்சனேயனை அழைத்தது.

புத்திர் பலம் யசோதைர்யம்
நிர்பயத்வம் அரோகதா |
அஜாட்யம் வாக்படுத்வம்ச
ஹனுமத் ஸ்மரணாத்பவேத் ||

என்று ஆஞ்சனேயனை ஸ்மரணம் பண்ணினால் வாக்படுத்துவம் ஏற்படும்.

ஆகவே வாயுவை அடுத்துத் தோன்றிய ஆஞ்சனேயன், விசேஷமாக ஆராதிக்கப்பட வேண்டியவன்.

அதற்கடுத்து, பஞ்சபாண்டவர்களிலே வாயுவினுடைய குமாரனாக மிகவும் பலிஷ்டனாக அவதரித்த பீமஸேனன்.

பீம பீம பராக்கிரம:

அதையும் அடுத்து, ஆனந்த தீர்த்தர் மத்வாசார்யர் - த்வைத மதத்தை ஸ்தாபிதம் செய்த ஆசார்யர்-இவர் ஸ்ரீ ராமனை ஆராதித்து பிரதிஷ்டை பண்ணினார். உயர்ந்த ஸ்ரீக்ஷர்மம் என்ற க்ஷேத்திரத்தில் போய்ப் பார்த்தோமானால், சக்கரவர்த்தி திருமகன் ஸ்ரீ ராமன் அங்கே எழுந்தருளியிருக்கிறான். ஆதிசங்கரரால் பிரதிஷ்டை பண்ணப்பட்ட ஸ்ரீசக்கரம், அங்கே விசேஷமாக அமைந்திருக்கிறது. அதே மாதிரி, பகவத் பாஷ்யகாரரான ஸ்ரீ ராமானுஜர் பிரதிஷ்டை பண்ணிய கோவிந்தராஜன், அங்கே எழுந்தருளியிருக்கிறான். மத்வாச்சார்யார் மிகவும் உகந்து ஸ்ரீ ராமனைப் பிரதிஷ்டை பண்ணியிருக்கிறார்.

மத்வ நவமி அவருடைய அவதார தினம். ரத ஸப்தமி, பீஷ்மாஷ்டமி, மத்வ நவமி மூன்றும் முக்கியமான நாட்கள்.

அந்த மத்வாச்சார்யார் சொன்ன சுலோகம் இது:

ந விஷ்ணு: கீர்த்தயேத் விஷ்ணும்

- விஷ்ணுவினுடைய கடாக்ஷம் ஒருத்தருக்கு ஏற்படவில்லையானால், எம்பெருமான் கடாக்ஷம் விழவில்லையானால், விஷ்ணுவைக் கீர்த்தனம் பண்ணுகிற எண்ணமே அவனுக்குத் தோன்றாது! விஷ்ணு ஸ்தோத்திரம் பண்ணுகிற வாய்ப்பே ஏற்படாது!

அதனால்தான் விஷ்ணு புராணத்திலே பராசர மஹரிஷி சொல்கிறார்: ‘கலௌ ஜகத்பதிம் விஷ்ணும்’.

எல்லாவற்றுக்கும் அதிபதியாக இருக்கும் படியான அந்த விஷ்ணு இருக்கிறானே, அவனிடத்திலே பக்தி ஏற்படுவது என்பது, கலியுகத்திலே இருக்கும்படியான மக்களுக்கு ரொம்பக் கஷ்டம். துராத்மாக்கள் அவனை

அர்ச்சிக்க மாட்டார்கள். விதிக்கப்பட்ட கர்மாவை விட்டவர்கள், அவனை நினைக்க மாட்டார்கள்.

இப்படிப்பட்டவர்களுக்கு, கர்மாவை விட்டவர்களுக்கு, நாம் அதை ஞாபகப் படுத்த வேண்டும். அது நம் கடமை.

'லலாட சூன்யம், ஸ்மசான துல்யம்' என்கிறது சாஸ்திரம்! நெற்றிக்கு இட்டுக் கொள்ளவில்லையானால், அந்த நெற்றி ஸ்மசானத்துக்கு ஒப்பானது என்கிறது!

அதைப் பார்க்க நேர்ந்தால் என்ன ஆகிறது... ஸ்மசானத்துக்குப் போய் வந்த பலன் ஏற்படுகிறது! அதைப் பார்த்ததற்காக இவர் உடனே ஸ்னானம் பண்ண வேண்டும் என்கிறது சாஸ்திரம்! அப்படிப்பட்டவர்களைப் பார்த்து, 'நெற்றிக்கு இட்டுக் கொள்ளுங்கள்' என்று நாம் சொல்ல வேண்டும் என்கிறது சாஸ்திரம்.

வேறு ஒருத்தர் கோணலாக இட்டுக் கொண்டு வந்திருக்கிறார்... அவரைப் பார்த்து, 'இப்படிக் கோணலாக இட்டுக் கொண்டிருக்கிறீரே!' என்று நாம் கேட்கலாகாது. 'அடடா! நெற்றிக்கு அழகாய் இட்டுக் கொண்டு வந்திருக்கிறீர்களே... நாளைக்கு இன்னும் நன்றாக இட்டுக் கொள்ளுங்கள்' என்று சொல்ல வேண்டும். கலியுகத்திலே சாஸ்திரங்களைக் கடைப்பிடிக்க கஷ்டப்படுவார்கள். அதை தோஷம் சொன்னால் அடியோடு விட்டே விட்டுவிடுவார்கள்!

# 20

கலியுகத்திலே ரத்தினம், மணி, பொன் இவற்றில் யாருக்கும் ஆசை இராதாம்... ஏனடா என்று கேட்டால், இவையெல்லாம் ஒருவரிடம் இருந்தால் தானே! வாங்குவதற்குண்டான சக்தி இருக்க வேண்டும் அல்லவா! அப்போது தானே அந்தப் பொருளுக்கு நாம் ஆசைப் படலாம்! பின்னே, கலியுகத்தில் எல்லோரும் என்ன பண்ணுவார்கள், என்று கேட்டால், சிகை அலங்காரப் பிரியர்களாக இருப்பார்களாம்! இவர்களிடத்தில் . இருக்கக் கூடியது கேசம்! அதை விததிமாக அலங்காரம் பண்ணிக் கொண்டிருப்பார்களாம்!

- இதை பராசர மஹரிஷி, விஷ்ணுபுராணத்திலே மிக அழகாகச் சொல்லியிருக்கிறார்; அடியேன் சொல்லவில்லை!

சாஸ்திரம் இதை எடுத்துச் சொல்கிற அழகை நாம் கவனிக்க வேண்டும். சிகை அலங்காரம் எப்படி இருக்க வேண்டும் என்று விவரமாக எடுத்துச் சொல்கிறது. ஸ்த்ரீகள் நேர் வகிடு எடுத்துக் கொள்ள வேண்டும். கோணல் வகிடு எடுக்கக் கூடாது. கூந்தலை இரண்டாகப் பிரிக்கக் கூடாது. இரட்டைப் பின்னல் கூடாது என்கிறது! அவ்வாறு பிரித்தால், கிருஹமும் இரண்டு படும்! கேசத்தை எப்போதுமே அவிழ்த்து விடக் கூடாது; ஸ்நானம் செய்த பிறகு, கீழே ஜலம் விழும்படி முடிந்து

கொள்ளக் கூடாது. - இப்படி பல நியமங்கள் சாஸ்திரங்களில் - அவற்றை நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

ஸ்நான அறையிலிருந்து கூந்தல் சொட்டச் சொட்ட கிருஹத்துக்குள் வரலாகாது... ஏனென்றால், இறந்து போனவர்களுக்குப் பத்து நாள் கர்மா பண்ணுகிறபோது, வஸ்திரத்தில்தான் பிரேதத்துக்குத் தீர்த்தம் கொடுக்க வேண்டும். ஆகவே, ஒருத்தர் நன்றாயிருக்கும்போதே ஜலம் சொட்டிக் கொண்டு வரலாகாது. நன்றாகத் துடைத்து, துவட்டிக் கொண்டுதான் வரவேண்டும். - இப்படியெல்லாம் சாஸ்திரம் வலியுறுத்துகிறது.

இதையெல்லாம் கடைப்பிடித்துக் கொண்டிருக்க முடியுமா? என்று கேட்டால், அவ்வாறு கேட்பவர்களைத் தான் பாஷாண்டிகள் என்று கூறுகிறது சாஸ்திரம்! இவ்வாறு பாஷாண்டிகளாக இருப்பவர்கள் உலகத்துக்கே அதிபதியாக இருக்கும் எம்பெருமானை வணங்க மாட்டார்கள் என்கிறார் பராசர மஹரிஷி.

'எப்போது இப்படியெல்லாம் நடக்கும்?' என்று மைத்ரேயர் பராசர மஹரிஷியிடம் கேட்கிறார்.

"கலியுகம் வந்துவிட்டது என்று தெரிந்து கொள்ள வேண்டும். இந்த மாதிரி பாஷாண்டிகள் கேள்வி கேட்பது கலியுகத்திலேதான் நடக்கும்.." என்று சொல்கிறார் பராசர மஹரிஷி.

'ந விஷ்ணு: கீர்த்தயேத் விஷ்ணும்' என்று சொல்ல வந்த பராசர மஹரிஷிதான் இத்தனையும் சொல்கிறார்.

விஷ்ணுவினுடைய அனுக்கிரஹம் இல்லாமல் அவனைக் கீர்த்தனம் பண்ண முடியாது.

'ந விஷ்ணு: அர்ச்சயேத் விஷ்ணும்...' அந்த பகவானுடைய திருவடியில் புஷ்பத்தால் அர்ச்சனை

பண்ணவேண்டுமானால், அவனுடைய அனுக்கிரஹம் இருந்தால்தான் அதுவும் சாத்தியமாகும்.

அதே மாதிரி ஸ்மரணம்... எப்போதும் அவனை தியானம் பண்ணுதல் – ஸந்ததாரையாக – அறுபடாமல் அவன் நினைவு நம்முள்ளே இருக்க வேண்டுமானால், அதற்கும் அவனுடைய அனுக்கிரஹம்தான் சித்திக்க வேண்டும்.

ஆழ்வார் சொல்கிறார்: எனக்கு ஞானமாகிற சிறந்த கையைக் கொடு... ஞானமாகிற சிறந்த கை என்னிடத்திலே இருந்துவிடுமானால், என் மனது நாலா விதத்திலே ஓடுமோ? சலிக்குமோ? நீதான் அதற்கு அனுக்கிரஹம் பண்ண வேண்டும் என்று பகவானிடத்திலே அசையாத பக்தி ஏற்டவும் அவனையே வேண்டிக் கொள்கிறோம்.

**'ரக்த: பரமாத்மனிய: விரக்த: அபரமாத்மனி'.** அந்த எம்பெருமானைத் தவிர மற்ற விஷயங்களிலே புத்தியானது செல்லாத நிலை... அந்த நிலையிலே தோய்ந்து, அவன் திருவடியிலே அர்ச்சனை பண்ணினால், பரம சந்தோஷத்தை அவன் அடைகிறான்.

இப்படியாக பரமாத்ம சப்தத்துக்கு ஏற்றம்.

**முக்தானாம் பரமா கதி:** – ஒரே பரம சப்தம்தான் சஹஸ்ரநாமத்திலே.

முக்தானாம் பரமா கதி: உயர் கதியாய் இருக்கக் கூடியவன், உயர்கதியைத் தரக்கூடியவன் பரமாத்மா,

யாருக்கு...? யாருக்கு உயர் கதி?...

நாமெல்லாம் சம்ஸாரிகள் என்று பெயர், உலகத்திலே. நித்ய சம்ஸாரிகளாக அலைந்து கொண்டே யிருக்கிறோம். ஆதலால், பகவத் விஷயத்திலே விசேஷமாக ஈடுபட முடிவதே இல்லை. பலவிதமான கஷ்டங்கள்; பலவித சிரமங்கள்.

அப்படிப் பல கஷ்டங்கள் சிரமங்கள் நாம் படும் போதும், அவன் பெயரை நாம் சொல்ல முடிந்த தென்றால், அவன் அனுக்கிரஹம் இருப்பதால் தான் நடக்கிறது.

இந்த மாதிரி சாயங்கால வேளையிலே இரண்டு மணி நேரம் நாம் சத்ஸங்கமாகக் கூடுகிறோம் என்றால், அது பசுவுக்குத் தடி கட்டிவிட்டதுபோல் என்றார்கள்!

ஒரு மந்தையிலே நூறு பசுக்கள் இருக்கின்றன. நூறு பசுவிலே ஒரு பசு திருட்டுப் பசு! அது புல்லை மேயாது; பயிரைத்தான் மேயும். அதன் புத்தி அப்படி...! சடா லென்று கோஷ்டியை விட்டுவிட்டுப் போய்விடும் அந்தப் பசு. போய், யார் வயலிலாவது பயிரை மேயும். அந்த விவசாயி அந்தப் பசுவைப் போட்டு நன்றாக அடிப்பான். அடிபட்டுக் கொண்டு வீடு வந்து சேரும் அது!

இது ஏன் இப்படி அடிபடுகிறது என்று வருத்தப் படுவான் பசுவை உடையவன். புல்லைப் போய் மேயாமல் அநியாயமாகப் பயிரைப் போய் மேய்கிறதே என்று பார்த்தான்... ஆனால் இது இப்படியே தான் பயிர் மேயப் போகும்.

அந்தப் பசு, கோஷ்டியை விட்டுப் போகக் கூடாது என்பதற்காக ஒரு நாள் அவன் என்ன பண்ணினான்... அதன் காலில் ஒரு கயிற்றைக் கட்டி, அதிலே பெரிய மரக்கட்டையைக் கட்டித் தொங்க விட்டு விட்டான்! அது எங்கேயாவது வேகமாகப் போயிற்று என்றால், கட்டை வேகமாக ஆடும். ஆடினால், அதன் பின்னங்கால் இரண்டிலும் முட்டியிலும் அடிக்கும்! அடித்தால் ரொம்ப வலிக்கும் அல்லவா...? அப்புறம் அது வயலுக்கு ஓடிப் போகவே போகாது.

அந்த மாதிரி, நம் இந்த்ரியங்கள் இருக்கின்றனவே... அவை வீணான காரியங்களில் ஓடுகின்றன. இப்போது சஹஸ்ரநாமம் என்கிற தடி கட்டிவிட்டிருக்கிறது நமக்கு...

இப்போது நாம் வேறு விஷயங்களில் போகாமல் சத் விஷயத்தில் ஈடுபட வேண்டுமென்றால், அதற்கும் அவன் சங்கல்பம் வேண்டும். அவன் சங்கல்பித்து, 'இவன் இதைச் கேட்க வேண்டும், இவன் இதைச் சொல்ல வேண்டும்' என் நிர்ணயித்தால் நடக்கும். இதைத்தான் மகான்கள் அனுபவ பூர்வமாக நமக்கு எடுத்துக் காட்டுகிறார்கள்.

நாமெல்லாம் சம்சாரிகள் என்று சொன்னேன். நம்மைக்காட்டிலும் விலக்ஷணமானவர்கள், சம்சாரிகளாக இருந்து கொண்டே, இந்த லோகத்திலே இருந்து கொண்டே, எம்பெருமானை அடைவதற்கான அந்த உயர்ந்த காரியத்தைப் பண்ணுகிறார்கள். இவர்களுக்கு முமுக்ஷுக்கள் என்று பெயர். முமுக்ஷுக்கள் என்றால் மோக்ஷத்தை விரும்புபவர்கள்.

தர்ம – அர்த – காம – மோக்ஷம் – இதிலே தர்ம – அர்தம் இரண்டையும் ஒன்றாகக் காட்ட வேண்டும். காமம் – மோக்ஷம் என்று தனிப்படுத்தணும்.

அர்தம் என்பது பொருள். இந்தப் பொருள் இருக்கிறதே.. இதை நாம் தர்ம மார்க்கத்தில் ஈட்ட வேண்டும். தர்ம மார்க்கத்திலே அது செலவிடப்பட வேண்டும். தர்மத்தைப் பற்றியே பொருள் இருந்ததானால், பொருளுக்கு ஏற்றம்.

தர்மம் என்பது குடும்பத்தில் முதல் பிள்ளை மாதிரி. மூத்தவனுக்குக் கேடு ஏற்பட்டால், குடும்பத்தில் மற்ற சகோதரர்களால் பயனில்லை. தர்மத்துக்கு குறைவு ஏற்பட்டால் அர்தம் – பொருள் – அழியும்! ஆகவே

அர்தம், எப்போதும் தர்மத்தோடு சேர்ந்தே இருக்க வேண்டும்.

நமது காமம் இருக்கிறது பாருங்கள்... இச்சை... அது மோக்ஷத்திலே குறியாக இருக்க வேண்டும். அதற்குண்டான காரியத்தை நாம் இந்த உலகிலே பண்ணிக் கொண்டேயிருக்க வேண்டும். இவ்வாறு பண்ணிக் கொண்டேயிருப்பவர்களுக்குத் தான் முமுக்ஷுக்கள் என்று பெயர் - பிரபன்னாள் என்போம். பிரபன்னர்கள் என்றால், அத்தகையவர்களை பகவான் தானே அழைத்துக் கொண்டு போய் முக்தியைக் கொடுக்கிறான் வைகுண்டத்திலே.

இதைத்தான் **'முக்தானாம் பரமாகதி:'** என்கிறது சஹஸ்ரநாமம்.

கதி சிந்தனம் என்று இதற்குப் பெயர். சுவாமி தேசிகன் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் இது குறித்து ஓர் அதிகாரமே எழுதியிருக்கிறார். கதிக்கான வழியை நினை என்கிறார். அந்த வழியை நினைப்பதே ஓர் அழகு.

திருவேங்கடயாத்திரை போலே, அர்ச்சிராதி மார்க்கம் போலே, அக்ரூரர் பயணம் போலே... என்று ஆசார்யர் எழுதுகிறார்...

திருவேங்கட யாத்திரை போகிறவர்கள் அதையே யோசனை பண்ணிக் கொண்டிருப்பார்களாம். எல்லோரும் "கோவிந்தா! கோவிந்தா" என்று சொல்லிக் கொண்டு போவார்களே... பாதை வளைந்து வளைந்து உயர ஏறிச் செல்லுமே, அதிலே ஏறி நாம் போக வேண்டுமே' என்று நினைக்கும் போதே ரொம்ப இன்பம் ஏற்படும்.

அதே மாதிரி அர்ச்சிராதி மார்க்கம் - மோக்ஷ வழியை நினைக்க வேண்டும்.

அக்ரூரர், கண்ணனையும் பலராமனையும் மதுரா புரிக்கு அழைத்துக் கொண்டு வருகிறார்... கம்ஸனுடைய ஆக்ஞையின் பேரில் ரதத்தில் ஏற்றி அழைத்து வருகிறார்... அப்போது அவர் வழி நெடுக சிந்தனை பண்ணிக் கொண்டு வருகிறார்: அந்த எம்பெருமானை எப்போது பார்க்கப் போகிறேன்... அவன் திருமுக மண்டலத்தைப் பார்க்கும்படியான பாக்கியம் எனக்குக் கிடைத்ததே! அவனோடு பேசி உரையாடுவேனே...' என்றெல்லாம் நினைத்து நினைத்து உருகியபடி வருகிறாராம்.

சற்று நேரம் பலராமனையும் கண்ணனையும் ரதத்திலே உட்கார வைத்துவிட்டு இவர் போய் மாத்யானிகம் பண்ணிவிட்டு வருகிறேன் என்று போகிறார்... போனால், அங்கே நதியின் ஜலத்துக்குள்ளே ஆச்சர்யமான காட்சியைக் காண்கிறார்...

# 21

ஜலத்துக்குள்ளே அக்ரூரர் கண்ட காட்சி என்ன...? ஆச்சர்யமாய் சேஷதல்பம்... அதன்மேல் பகவான் காட்சியளிக்கிறான். இப்படித் திரும்பிப் பார்த்தால் அங்கே ரதத்தில் பலராம - கிருஷ்ணர்கள் உட்கார்ந் திருக்கிறார்கள். ஜலத்தினுள்ளும் ஆதிசேஷன் ஆஸனமாக, பகவான் காட்சியளிக்கிறான். இரண்டையும் ஒரு சேரப் பார்க்க முடிந்தது அக்ரூரரால். அப்படி இரண்டு வித ஆனந்தத்தையும் பகவான் அவருக்குக் கொடுத்தான். ஒரே சந்தோஷம் அவருக்கு.

ரதத்துக்குத் திரும்பிச் செல்கிறார் அக்ரூரர். அங்கே யிருந்து வந்தவரைப் பார்த்து பகவானே கேட்கிறான்:

"என்ன அக்ரூரரே? உமக்கு இவ்வளவு சந்தோஷம் முகத்திலே... என்ன இவ்வளவு சாந்தி? என்ன விசித்திரத்தை நீர் கண்டீர்?..." என்று கேட்கிறான். ஒன்றும் தெரியாத மாதிரி கேட்கிறான்! அப்பேர்ப்பட்ட அனுபவத்தை அக்ரூரருக்குக் கொடுத்தான் பகவான். வேறு யாருக்கு உண்டு அந்த அனுபவம்!

கோகுலத்து ஜனங்களோ, அந்த அக்ரூரரை வைகிறார்கள். "மகா க்ரூராத்மா இந்த மனிதர்... இவருக்குப் போய் யார் அக்ரூரர் என்று பெயர் வைத் தார்கள்!" என்று கோபப்படுகிறார்கள். "எங்களிடமிருந்து கிருஷ்ணனைப் பிரித்தல்லவா அழைத்துப் பேகிறார்

அக்ரூரர்... மதுரா நகரத்துக்கு அழைத்துப் போகிறார். கிராமத்திலிருநது நகரத்துக்குப் புறப்பட்டுப் போய் விட்டால், அப்புறம் யாரேனும் திரும்பி வருவார்களோ!" என்கிறார்கள்.

– இதை அடியேன் சொல்லவில்லை. விஷ்ணு புராணமே சொல்கிறது. நகரத்திலே பல விதமான விஷயங்கள் உண்டு. அதன் காரண காரியங்களே வேறு... அதைப் பார்க்கிறவர்களுக்கு மறுபடியும் கிராமத்துக்குப் போகவேண்டும் என்று தோன்றுமா!

– இதை பராசர மஹரிஷி, விஷ்ணு புராணத்தில் கோபஸ்த்ரீகளெல்லாம் சொன்ன வார்த்தையாக நமக்குக் காட்டுகிறார்.

பகவான் மாறிப்போய்விடுவானோ, அவன் மறுபடியும் நமக்குக் கிடைப்பானோ இல்லையோ, என்றெல்லாம் சந்தேகப்பட்டு வருந்துகிறார்கள் கோப ஸ்த்ரீகள்.

அதே மாதிரிதான் திருப்பதி யாத்திரை செல்பவரும் செல்கிற வழியை நினைத்து நினைத்து மகிழ்வார்... 'வைகுண்டம் புக்கவரும் காதலிக்கும் வேங்கடமே' என்று சொல்லியிருக்கிறதல்லவா! பிறவியே வேண்டாம் என்று அலுத்துக் கொண்டு மோக்ஷத்துக்குப் போனவர்கள் கூட, அங்கேயிருந்து கீழே பார்த்தால் பூலோகத்துக்கு வந்து, திருவேங்கட யாத்திரை செல்ல வேண்டும் என்று ஆசைப்படுவார்களாம்.

மோக்ஷ வழியைச் சிந்தனை பண்ணுவது என்பதும் இந்த மாதிரிதான் – முமுக்ஷுூணாம் பராகதி:

பராகதியாய், உயர்ந்த கதியாய் இருக்கக் கூடியவன் பரமாத்மா.

அதனால்தான் 'முக்தானாம் பரமாகதி:' என்று சஹஸ்ரநாமம் சொல்கிறது.

கோயில்களில் பிரம்மோத்ஸவம் நடக்கிற போது, வேத மந்திரம் சொல்லி துவஜாரோஹணம் பண்ணு வார்கள்.

அப்போது கருட மந்திரம் ஜபிக்கப்படும். கருடனை சாக்ஷாத்காரம் பண்ணுவார்கள். அழகான இறக்கைகளை உடையவன் அவன். திருடமான இறக்கைகள்... பெரிய திருவடி என்று பெயர் இந்த கருத்மானுக்கு.

திருவஹீந்திரபுரம் என்கிற க்ஷேத்திரத்தில், சுவாமி தேசிகனுக்கு கருடன் பிரத்யக்ஷமானான். 'கருட தண்டகம்' என்ற சுலோகத்தை அருளினார் சுவாமி தேசிகன்.

அந்த சுலோகம் யாருக்குத் திருப்தி அளிக்கும் என்று கேட்டால், கருடனுக்கு அல்ல...

"கருடத்வஜ தோஷாய...' கருடனை துவஜமாக உடைய எம்பெருமானுடைய திருப்திக்காக இது இயற்றப் பட்டது' என்கிறார். கருடனைத் தோத்திரம் பண்ணினால் ஸந்தோஷிக்கிறவன் யார்...? ஸாக்ஷாத் பரமாத்மா அல்லவா சந்தோஷிக்கிறான்!

கருட பஞ்சாசத் என்று அழகான ஐம்பது சுலோகங்கள் பண்ணியிருக்கிறார். அதிலே கருடனுடைய தன்மைகள் அத்தனையையும் சொல்லியிருக்கிறார்:

அந்த காயத்ரி மந்திரம் இருக்கிறதே, அந்த மந்திரத்தின் சாரம்தான் கருடனின் நேத்திரங்கள். அதன் திருமேனி மொத்தம் ஸாம வேதகமாக இருக்கிறது. அது மட்டுமல்ல... உத்தமமாக இருக்கும்படியான இறக்கை களின் நுனியெல்லாம் யக்ஞமாக இருக்கிறது. ஸர்வ யக்ஞங்களும்! பிரதான யக்ஞஸ்தானமாக அதன் தலை

இருக்கிறது. இப்படி சர்வ யக்ஞமயனாக கருடன் இருக்கிறான்.

ஆளவந்தார் அருளிய ஸ்தோத்திரம். இதற்கு வரத வல்லபஸ்தோத்திரம் என்று பெயர். மஹாலக்ஷ்மியைக் குறித்த ஸ்தோத்திரம் இது. சாப்பிட உட்காருகிறபோது கோஷ்டியில் இதை எல்லோரும் அனுஸந்தானம் பண்ணுவார்கள். அதிலே அழகாக கருடன் மேல் எழுந்தருளி பகவான் வருகிற காட்சி, விசேஷமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

நாராயண பட்டத்ரி குருவாயூரப்பனைப் பார்த்து, நாராயணீயத்தில் ரொம்ப அழகான சுலோகம் சொல்கிறார். கர்தப பிரஜாபதி தபஸ் பண்ணியபோது அவர் எதிரிலே பகவான் காட்சி கொடுக்கிறான். அது குறித்துச் சொல்கிறார் பட்டத்திரி:

"ஹே பிரபு! குருவாயூரப்பா! நீ அந்த கருடன் மேலே, விசேஷமான தாமரை புஷ்பத்தைக் கையிலே வைத்துக் கொண்டு, திவ்ய திருமேனியோடு, காளமேகம் போன்று காட்சி கொடுத்தாயாமே! அது வாஸ்தவமா...?" என்று கேட்கிறார்.

உடனே பகவான் பட்டத்திரியைப் பார்த்து, 'உமக்கு அந்த ஸேவை பார்க்கணுமா?" என்று கேட்கிறான்.

பார்க்க் வேண்டும் என்று அவர் விழைகிறார். உடனே அந்த குருவாயூரப்பன் சன்னிதியில், அந்தச் சின்ன இடத்திலே... கர்தப பிரஜாபதிக்குக் காட்சி கொடுத்த அதே தினுசிலே காட்சி கொடுக்கிறான் பரமாத்மா!

அப்படி அவன் காட்சி கொடுக்க வில்லையானால், இந்த மாதிரி ஒரு சுலோகம் வாக்கிலே வராது. ஏனென்றால், நேரிலே பார்க்காமல் வெறுமே வர்ணித்துச்

சொல்ல முடியாது. கவனம் பண்ணி தன் சொந்த சக்தியினாலே அவ்வாறு எழுத முடியாது. இவ்வளவு ஆச்சர்யமான முறையிலே ஒரு சுலோகம் வாயிலே வருகிறது என்றால், அப்படி நேரே பார்த்து அனுபவித் திருக்கிறார் அந்த எம்பெருமானை. கருடாரூடனாக எதிரிலே வந்து காட்சி கொடுத்திருக்கிறான்.

**ஸுபர்ண:** என்ற இந்த கருடன், பகவானை எங்கும் அழைத்துக் கொண்டு போகிறான். ஸ்ரீவில்லிபுத்தூரில் பார்க்கலாம், கருத்மான் பகவானோடு ஏகாஸனத்தில் நின்று கொண்டிருக்கிறான். அப்படிப்பட்ட உத்தம ஸ்தலத்திலே தீபாவளி அன்று இந்த உயர்ந்த ஸேவையைப் பார்க்கலாம்.

சம்ப்ரோக்ஷணம் நடந்தது ஸ்ரீவில்லிபுத்தூரிலே. பல மகான்கள் எழுந்தருளியிருந்தார்கள். அந்த ஸ்ரீவில்லி புத்தூர் ரங்கமன்னார், ஆண்டாள், கருடன், பெரியாழ் வார், எல்லோரும் ஏகாஸனத்தில் தீபாவளியன்று விசேஷமாக ஸேவை...

கருடன் வைகுண்டத்திலே பகவானுக்கு விசேஷ மாக ஸேவை பண்ணக் கூடியவன். நித்ய சூரிகளிலே அவன் ஒருவன்.

நித்ய சூரிகள், இமை கொட்டுதல் இல்லாமல் பகவானை ஸேவிக்கிறார்கள் என்று வேதம் சொல்கிறது. அப்படிப்பட்ட நித்ய சூரியான கருடன் மேலே பகவான் எழுந்தருள்கிறான். என்றால், வேதத்தினுடைய பொருள் நான்தான், நான்தான், என்று குதித்துக் கொண்டு, குதித்துக் கொண்டு, ஆனந்தமாக பரமாத்மா வருகிறான் என்றல்லவா பொருள்!

இதனால்தான் காஞ்சிபுரத்திலே கருடஸேவை மிகவும் ஏற்றமுடையது. மற்ற இடங்களில் நடந்தாலும்,

தேவாதி ராஜன் காஞ்சியிலே காட்சியளிப்பது சிறப்பு. விசேஷமாக பத்து வாகனங்களும் பத்து நாட்கள் கண்டருள, உத்ஸவத்தில் அவனைத் தாங்கி வருவதை ஒரே சுலோகத்தில் பாடியிருக்கிறது.

கருடன் மேலே பகவான் ஆரோகணம் பண்ணியிருக்க, ஸ்ரீபாத தாங்கிகள் "ஹே கேசவா! ஹே மாதவா! கோவிந்தா! வரதா!" என்று கூவியபடி, அப்படி ஒரு தூக்குத் தூக்கி ஓர் உலுக்கு உலுக்குவார்கள்... மேலே குடை அசையும், அவன் கொண்டை அசையும், முத்துமாலை அசையும்... கம்பீரமாய் அப்படி ஒரு ஆட்டம் ஆடுவான் பகவான்!

முன் கோஷ்டியான வேத கோஷ்டியிலே, பிரதிவாதி பயங்கரம் சுவாமி இருப்பார். அவன் அப்படி ஆடுகிறானா இல்லையா என்று திரும்பி ஒரு பார்வை பார்ப்பார்; அதை ரசிப்பார்!

அவர் வாக்கிலேயும் 'ஆடுக ஆடுகவே செங்கீரை...' என்று பிள்ளைத் தமிழ்ப்பாடல் பிறந்திருக்கிறது.

அப்படி கருடாரோஹணம் செய்து விசேஷமாய் ஆடுகிறான் எம்பெருமான்!

கருத்மான் அப்படி விசேஷமாகத் தாங்கி நிற்கிறான். அந்த உயர்ந்த காட்சி, கண்கொள்ளாக் காட்சி!

பின்னால் சம்ஸ்க்ருத வேதம்; முன்னே தமிழ் வேதம். இரண்டுக்கும் பொருள் நான்தான் நான்தான், என்று அவன் குதிக்கிற அழகு... காஞ்சிமாநகரில் மட்டுமே நாம் காணக் கூடிய கண்கொள்ளாக் காட்சி!

# 22

**வை**குண்டத்தில் எம் பெருமானுக்கு நித்ய ஸேவை பண்ணுகிற கருடனைப் போலவே இன்னொரு நித்யசூரி ஆதிசேஷன்.

அனந்தனாகிற இந்த ஆதிசேஷனின் ஆயிரம் தலைகளுக்கும் ஆயிரம் திருநாமங்கள் உண்டு!

அந்த மட்டபல்லியிலே எம்பெருமான் லக்ஷ்மி நரசிம்ஹனாக உட்கார்ந்திருக்கிறான் அல்லவா... அவனுக்கு அந்த ஆதிசேஷனே மலை ரூபத்தில் வந்து குடை பிடிக்கிறான். அந்த ஊரிலே! மலை வடிவத்திலே வரிசையாக அவன் சிரஸைப் பார்க்கலாம் அங்கே. அப்படி நீள - நெடுக இருக்கும் அந்த மலை.

ஆயிரம் தலைகள் ஆதிசேஷனுக்கு என்றோம்... ஒவ்வொரு தலையிலேயும் இரண்டு நாக்குகள் - அந்த மாதிரி இரண்டாயிரம் நாக்குகளுடன் பூமியைத் தாங்குகிறான்.

"அனந்தன்,
சென்றால் குடையாம்
இருந்தால் சிம்மாசனமாம்
நின்றால் மரவடியாம்"

என்று பகவான் எப்படியெப்படியெல்லாம் தன்னுடைய கோலத்தை மாற்றிக் கொண்டு போகிறானோ, அதற்கேற்ப

தன்னை மாற்றிக் கொண்டு, நித்ய கைங்கர்யம் பண்ணிக் கொண்டிருக்கிறான்.

இந்த ஆதிசேஷன் லக்ஷ்மண ரூபம். அவனுடைய முதல் ரூபம் அனந்தன்; அடுத்தது லக்ஷ்மணன், அதற் கடுத்தது பலராமன், அதற்கடுத்து கலியுகத்திலே ஆதிசேஷனுடைய அம்சபூதராய் ஒருவர் பிறக்கப் போகிறார் என்றபோது, ஸ்ரீ பெரும்புதூரில் அவதரித்தார் ராமானுஜர்.

வாயுவினுடைய அவதாரமாக மத்வாச்சார்யர். ஆதிசேஷனது அவதாரமாக ராமானுஜர்.

எப்படி பரமேசுவரனுடைய அவதாரமாக ஆதிசங்கரர் அவதரித்தாரோ, அதே மாதிரி, வாயுவி னுடைய அவதாரமாக மத்வாச்சார்யர் தோன்றினார்; நித்யம் பகவானுக்குக் கைங்கர்யம் பண்ணக் கூடிய அம்சாவதாரமாக ராமானுஜர் அவதரித்தார்.

பகவானோடு ரொம்ப நெருங்கிப் பழகுகிறவர்கள் தானே அவனைக் குறித்து நன்றாகப் பேச முடியும்! இதராளுக்குத் தெரியாது அவனைப் பற்றி. தெரியாத ஒருவரைப் பற்றி நாம் கேட்டோமானால், 'எனக்குத் தெரியாதே, யாரிடமாவது கேட்டுச் சொல்கிறேன்' என்று சொல்வார்கள். ஆகவே, நெருக்கமாக இருந்து பார்க்கக் கூடியவர்களுக்குத்தான் அந்த மகிமையைச் சொல்ல முடியும்.

அந்த ஆதிசேஷனே அவதாரம் பண்ணி (ராமானுஜ ராக) எம்பெருமானைப் பற்றி எடுத்துச் சொன்னால், அதிலே அசத்யம் இருக்குமோ!

அஹோபில மடத்து முதல் அழகிய சிங்கர், பிரும்மசர்யத்திலிருந்தே சன்னியாஸம் கொண்டவர் - பகவானே அவருக்கு ஆசிரமத்தைக் கொடுத்தான். அவர்

உயர்ந்த ரீதியிலே பிரும்ம சூத்ர பாஷ்யத்தைச் சொல்லிக் கொண்டிருக்கிறபோது, ஐந்து தலையையுடைய சர்ப்பம் கேட்டுக் கொண்டிருந்தது. அப்படியானால் ஆதிசேஷன் வந்து கேட்டான் என்றுதானே பொருள்! அப்படியானால் அவர் வாக்கு எத்தனை மதுரமானதாக இருந்திருக்க வேண்டும்!

ஆகவே, ஆதிசேஷன் பகவானுக்குக் கைங்கர்யம் பண்ணுவதற்காகவே கூட இருக்கிறான். லக்ஷ்மணனாக ஸ்ரீ ராமாவதார காலத்திலே அவன் பண்ணின கைங் கர்யத்தை இன்னொருவர் பண்ண முடியுமா! அஹோ ராத்ரம் தூக்கம் இல்லாமல் பகவானுக்குக் கைங்கர்யம் பண்ணினானே! ஆதிசேஷனாக இருந்ததாலன்றோ அவனால் அது முடிந்தது. லஷ்மணன், கோபம் வந்தால் அடக்க முடியாமல் சீறி எழுவார். இதுவும் ஆதிசேஷனது குணம்தான்! கிழவனாகிற தந்தையை, கைகேயினிடத் திலே மனத்தை வைத்த அவரை, ஒரே அடி அடிக்கிறேன் என்கிறான் லக்ஷ்மணன்! கோபம் வந்துவிட்டதானால் அப்பாவையே அடிக்கக் கிளம்பிவிடுகிறார். அவ்வளவு வேகம்!

ராமாவதார காலத்தில் தனக்குத் தம்பியாக இருந்து கைங்கர்யம் பண்ணியதாலே அடுத்த அவதாரத்தில் மூத்தவனாக மாற்றி, அவனை பலராமனாக அவதரிக்கச் செய்தார் எம்பெருமான். பலராமனுக்கு அடி பணிந்து கிருஷ்ணன் அங்கே பிரதியுபகாரம் பண்ணுகிறான்.

'செம்பொற்கழலடி செல்வா! பலதேவா! உம்பியும் நீயும் உறங்கேலோர்' என்கிறாள் ஆண்டாள்.

**ம**ற்றொரு நித்ய சூரியாய் எம்பெருமானுக்குக் கைங்கர்யம் பண்ணிக் கொண்டிருப்பவர் விஷ்வக்ஸேனர். அவர்தான் ஸேனை நாயகர், எம் பெருமானின் அத்தனை சேனைகளுக்கும் அதிபர். பகவான் அவரிடத்தில்

எல்லாவற்றையும் ஒப்படைத்து விட்டு, நிர்ப்பரனாய் உள்ளே உட்கார்ந்திருக்கிறான் - வைகுண்டத்திலே.

சமஸ்த ஐச்வர்யமும் அந்த விஷ்வக்ஸேனரிடத்திலே தரப்பட்டுவிட்டது. வைகுண்ட ஐச்வர்யம் மொத்தத்தை யும் கொடுத்துவிட்டான். அவர் பரிபாலனம் பண்ணு கிறார். அவரிடத்தில் உதவி செய்யப் பல பேர் இருக்கிறார்கள். கஜமுகர், கஜஸேனர் என்று எத்தனையோ பேர். துவார பாலகர்கள்கூட விஷ்வக்ஸேனருக்குக் கட்டுப் பட்டவர்கள்தாம்.

இப்படிப்பட்ட உயர்ந்த விஷ்வக்ஸேனருக்குத்தான், உயர்ந்த த்வய மந்திரத்தை மஹாலக்ஷ்மி உபதேசம் பண்ணினாள்.

இந்த விஷ்வக்ஸேனர்தான் உலகத்திலே நம்மாழ்வா ராக அவதாரம் பண்ணி, அந்த த்வய மந்திரத்தைத் திருவாய்மொழி மூலமாக வெளிக்காட்டினார்.

நாராயண மந்திரம் இந்த பாரத தேசத்திலே, பதரிகாசிரமத்திலே தோன்றியது. த்வய மந்திரம் வைகுண்டத்திலேயே உபதேசிக்கப்பட்டது. அதனால் தான் மந்திர ரத்தினம் என்று பெயர் அதற்கு.

இந்த த்வய மந்திரத்தை எப்போது வேண்டு மானாலும் சொல்லலாம். வருகிற போதும் போகிற போதும் சொல்லிக் கொண்டே இருக்கலாம். ராத்திரி தூக்கம் வருகிற வரையிலே சொல்லலாம். காலையில் எழுந்திருக்கிறபோதே சொல்லலாம். மதுசூதனனைக் காட்டிலும் உயர்ந்த தத்துவம் இல்லை. த்வய மந்திரத்தைக் காட்டிலும் உயர்ந்த மந்திரம் இல்லை.

இப்படிப்பட்ட மந்திரத்தை உலகுக்குக் காட்டியவர் விஷ்வக்ஸேனர் - ஸேனை நாயகர். இதை நாம் தியானம் பண்ணினால் எந்தக் கர்மாவும் நம்மீது திரும்பிக் கொள்ள முடியாது.

இந்த விஷ்வக்ஸேனருடைய தர்மபத்னியின் பெயர் சூத்ரவதி. இவர்கள் இரண்டு பேரையும் ஆவாஹனம் பண்ணி கர்மாவை ஆரம்பித்தால், அந்தக் கர்மா நிர்விக்னமாய் நடக்கும்; நல்ல முறையிலே முடியும்.

எந்தப் பூஜைக்கு முன்பும் விஷ்வக்ஸேனாராதனம் பண்ணியாக வேண்டும். ஆனால், விஷ்வக்ஸேனாராதனத்துக்கு முன்பு, அது நன்றாக நடக்க வேண்டும் என்று ஒரு பூஜை உண்டோ! உலகிலே அப்படி ஒரு பூஜை கிடையாது. எல்லாப் பூஜைக்கும் முதற்பூஜை விஷ்வக்ஸேனர் பூஜைதான்.

இப்படி அனந்த, கருட, விஷ்வக்ஸேனர்கள் மூன்று பேரும் நித்ய சூரிகள். ஸம்ஸாரத்தை விட்டகன்று, இனிமேல் திரும்பி வருதல் இல்லாத ஆனந்தத்தை அடைகிறார்களோ, அவர்கள் நித்ய சூரிகள். எம் பெருமானிடத்தில் கைங்கர்யம் என்கிற பாக்யத்தை இவர்கள் அடைகிறார்கள். மறுபடியும் பிறத்தல் என்பது இல்லாத இவர்களுக்கு, முக்தாத்மாக்கள் என்று பெயர். இவர்களை வைகுண்டத்திலே பரிபாலனம் பண்ணிக் கொண்டிருப்பவன் பரமாத்மா.

இதனால்தான் **'பூதாத்மா பரமாத்மாச முக்தானாம் பரமாகதி:'** என்கிறது சஹஸ்ரநாமம்.

இதேதான் கீதையிலும் வருகிறது. பீஷ்மருடைய வாக்கு, பகவானுடைய வாக்கு இரண்டும் ஒன்றுதான்.

ஒரு முக்தனுக்குத்தான் அந்தப் பரமாத்மா கதி என்று இல்லை... முக்தானாம் - பல பேர் முக்தி அடைந்து வைகுண்டம் சென்று அவனுக்குக் கைங்கர்யம் பண்ணுகிறார்கள்.

ஜீவகோடிகள் எத்தனை இருக்கின்றன உலகத்திலே... கணக்கு பண்ண முடியுமா அவற்றை! கணக்கே பண்ண முடியாது!

ஒரு குழந்தை, பாட்டியிடம் நித்யம் கதை சொல்லச் சொல்லி ஹிம்சை பண்ணும். பாட்டி கஜேந்திர மோக்ஷ கதையைச் சொன்னாள். அது கேட்டுக் கொண்டே இருந்தது. அது முடிந்தபோது 'இன்னொரு கதை சொல்லு' என்றது. ஹிரண்ய கசிபு கதையைச் சொன்னாள் பாட்டி - பிரஹலாதன் கதை. அப்புறம் வாமன சரித்திரம் சொன்னாள், த்ருவ சரித்திரமும் சொன்னாள். கேட்டுக் கொண்டே இருக்கிற குழந்தை, தூங்கவே மாட்டேன் என்கிறது. இரவு பன்னிரண்டுமணி ஆகிவிட்டது. எத்தனைநாழி கதை சொல்வாள் அந்தப் பாட்டி! பார்த்தாள்! 'ஒரு ஊரில் நிறைய, அம்பாரமாக நெல் குவித்திருந்தது...' என்று ஆரம்பித்துச் சொல்லலானாள். 'ஒரு குருவி வந்தது; ஒரு நெல்லைக் கொத்திக் கொண்டு போயிற்று... இன்னொரு குருவி வந்தது. இன்னொரு நெல்லைக் குத்திப் போயிற்று.' இப்படியே சொல்லிக் கொண்டேயிருக்கிறாள் பாட்டி.

"எத்தனை நாழி இப்படியே சொல்லுவே?" என்றது குழந்தை.

"அம்பாரமாய்க் குவித்துள்ள நெல்லு தீருகிற வரைக்கும்" என்றாளாம் பாட்டி!

"போ. பாட்டி!" என்று குழந்தை அலுத்துக் கொண்டு தூங்கிவிட்டது.

இந்த நெல்மணி மாதிரிதான் பூமியிலே உள்ள ஆத்மாக்களுக்கு எண்ணிக்கையே கிடையாது. உலகிலே இருக்கிற நட்சத்திரங்களை எண்ண முடியுமா? மணலை எண்ண முடியுமா?

அந்த மாதிரியே 'முக்தானாம்' என்று சொன்னால், முக்தாத்மாக்கள் - அந்த நித்யசூரிகள் கோஷ்டியிலே போய் நின்று ஸேவிக்கிறார்கள் இவர்கள்.

## 23

திருமழி தேசம் என்றொரு தேசம் - மலையாளத்தில் - கேரளத்தில் இருக்கிறது. அழகான தேசம் அது. அந்த தேசத்தில் உறையும் எம்பெருமானிடம் தூது அனுப்பினார் ஆழ்வார். யாரை அனுப்பினார்...? 'கொக்கினங்கள் குருகினங்காள்...' என்று பறவை இனங்களை அனுப்பினார். "அந்த நித்ய சூரிகள் - முக்தர்கள் - கோஷ்டியில் சேர்ந்து நிற்பதற்கு நானும் தகுதியுடையவனா? என்று கேட்டு வாருங்கள்,'' என கொக்குகளையும் நாரைகளையும் தூது அனுப்பினார் நம்மாழ்வார்.

நாரைகளும், கொக்குகளும் இங்கே ஆசார்யர்கள் ஸ்தானத்தில் இருக்கின்றன. ஞானம் அனுஷ்டானம் என்ற இரணடு இறக்கைகள் அவர்களுக்கு! உயர்ந்த ரீதியில் வைகுண்ட பதவி பெற வேண்டுமானால், அந்த ஆசார்யர்களின் கடாக்ஷம் பெற்றால்தான் இயலும். முக்த தசையிலே சென்று, நித்ய கோஷ்டியிலே நின்று, அவனை முழுவதுமாக அனுபவிக்க முடியும்.

அப்படிப்பட்ட முக்தர்களுக்குப் பரமகதியாய், உத்தம கதியாய் விளங்கக் கூடியவன் எம் பெருமான். முக்தானாம் பரமாகதி என்று விச்வ சப்தத்தில் முதலில் ஆரம்பித்துச் சொல்லப்பட்டிருக்கிறது. விச்வ சப்தம் காரியத்தை முதலில் சொல்கிறது. காரியமாகிற

இவற்றுக்கெல்லாம காரணமானவன் அவன் என்பதுதான் முக்தானாம் பரமாகதி:

அவ்யய: புருஷ ஸாக்ஷி க்ஷேத்திரக்ஞோ: அக்ஷர ஏவச

– இந்த ஐந்து திருநாமங்களும் ரொம்ப உத்தமமான திருநாமங்கள். வைகுண்டத்திலே ஒரு ஜீவனுக்கு - முக்தாத்மாவுக்கு ஏற்படக் கூடிய பெரும் பாக்கியம், முக்தாத்மா பெறக்கூடிய அனுபவம், இதிலே விவரிக்கப்படுகிறது.

த்வைத மதத்திலே – மத்வாச்சாரியார் ஏற்படுத்திய த்வைத மதத்திலே – ஆனந்தத்திலே தாரதம்யம் உண்டு என்று செல்லப்பட்டிருக்கிறது. மோஷானுபவம் என்பது வித்யாசப்படும் என்கிறார். ஆனால், விசிஷ்டாத்வைதத்திலே ஆனந்தத்தில் தாரதம்யம் கிடையாது. எல்லோருக்கும் ஒரே விதமான ஆனந்தம், என்று இங்கே விசிஷ்டாத்வைதத்திலே சொல்லப்பட்டிருக்கிறது.

'ஒரு ஜீவனுக்கு **அஹம் பிரும்மாஸ்மி** என்கிற ஞானம் ஏற்பட்டுவிட்டால், அதைக் காட்டிலும் வேறு என்ன ஆனந்தம் வேண்டும்?' என்கிறார் ஆதிசங்கர பகவத் பாதாள் அத்வைத ஸ்தாபிதத்திலே.

இந்த மூன்று மதங்கள் சொல்வதையும் சேர்த்து ஒரு சுலோகம் இருக்கிறது. மத்வமதஸாரமான விஷயம் அதிலே எடுத்துக் காட்டப்படுகிறது.

நாராயணன் பரதரன் – அவனைக் காட்டிலும் ஒரு படி குறைந்தவள் மஹாலக்ஷ்மி. இந்த ஜீவகணங்கள் எத்தனை உண்டோ, அத்தனையும் அவனை அடைய வேண்டியவைதான். நீச – உச்ச பாவங்களை அடைந்தவர்கள் எல்லோருமே, அவனை அடைய வேண்டியவர்கள்தான்.

அவனை அடைவதற்கு வேதம் நமக்குக் கண். பக்தி ஒன்றினால்தான் அவனை அடைய முடியும். வேதங்களால அறியப்பட வேண்டியவன் நாராயணன். அவன்தான் உயர்ந்தவன். ஜீவன்கள் அனேகம். ஆனால் அவனை அடைவதற்கு பக்தி ஒன்றுதான் மார்க்கம்.

**சா**லோக்யாதி சதுர்மார்கம் என்பார்கள்.

**'சாலோக்யம்**

**சாமீப்யம்**

**சாரூப்யம்**

**சாயுஜ்யம்'** என நான்கு நிலைகள்.

சாலோக்யம் என்றால், ஒருத்தர் ஸ்ரீரங்கத்திலே வாஸம் பண்ணிக் கொண்டிருக்கிறார்... பகவான் ரங்கநாதர் இருக்கிற இடத்திலேயே இருக்கிறார்.

சாமீப்யம் என்றால், இன்னொருத்தர் அந்த ரங்கநாதர் கோயிலிலேயே கைங்கர்யம் பண்ணிக் கொண்டிருக்கிறார்.

சாரூப்யம் என்றால், அவனிருக்கிற கோயிலுக்குள் **அவனருகிலேயே** – பக்கத்திலேயே – நின்றுகொண்டு கைங்கர்யம் பண்ணுவது.

சாயுஜ்யம் என்றால், அவனைப் பூரணமாக அனுபவிக்கும்படியாக அவனிடத்திலே நின்று, மற்றதை விட்டு அவனை மட்டுமே ஸேவித்துக் கொண்டிருப்பது.

மத்வாச்சார்யார் சொல்லக்கூடிய இந்த நான்கு நிலைகளிலே, சிலருக்கு சாலோக்யம் சித்திக்கிறது. லோகத்திலே வாழ்க்கை நடத்திக் கொண்டிருப்பார்கள். ஸ்ரீரங்கத்திலேயே ஒருத்தர் இருக்கிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள்... ரங்கநாதரை சேவிப்பதற்கு அவருக்கு ஒழிவதே இல்லை. நித்யவாஸம் ஸ்ரீரங்கம்தான். ஆனால்

திடீரென்று வேறு எங்கிருந்தோ வருகிறவர்கள் அவனை சேவித்துவிட்டுப் போய் விடுகிறார்கள்! அங்கேயே இருந்தும் முடியவில்லை. அந்த மாதிரியான நிலை சாலோக்கியம்.

சாரூப்யம் - கோவிலுக்குள்ளேயே வேலை செய்கிறார் ஒருத்தர். ஆனால் அவரால் பகவானை ஏகாந்தமாக சேவிக்க முடியவில்லை. காரியமே சரியாய் இருக்கிறது அவருக்கு. ஆனால் வேறொரு உத்தம பக்தர் அங்கே போய் நின்றுகொண்டு, பகவானை நன்றாக அனுபவிக்கிறார். நன்றாக நிகுநிகுவென்று வெண்ணெய் சாப்பிட்ட திருமேனி அது! "வெண்ணெய் உண்ட வாயன்... என் அமுதனைக் கண்ட கண்கள் மற்றொன் றினைக் காணாவே..." பூரணமாக அனுபவிக்கிறார்.

இப்படி அவரவர்கள் நிலைக்கேற்ப, ஆனந்தத்தி லேயும் தாரதம்யம் உண்டு என்று உபநிஷத் வாக்கியத்தைக் கொண்டு, ஆனந்த தீர்த்தர் ஸ்தாபிதம் பண்ணுகிறார்.

தைத்ரீய உபநிஷத்தில் காட்டப்பட்ட விஷயம் இது.

'பகவானுக்குச் சமமான போகங்களைப் பூரணமாக ஜீவாத்மா அனுபவிக்கிறான்' என்று விசிஷ்டாத்வைதம் ஸ்தாபிக்கிறது. அந்த எம்பெருமானுக்குத் துல்யமான போகம், ஞானம் எல்லாம் பெற்று, பரிபூரண பிரும்மானுபவம் அடைகிறான். இந்த பரிபூரண பிரும்மானுபவத்தில் - ஆனந்தத்தில் - தாரதம்யம் இல்லை என்பதை, விசிஷ்டாத்வைதத்தில் ஆசார்யர்கள் சொல்கிற அழகை நாம் கவனிக்க வேண்டும்.

எல்லோருக்குமே பிரமாணம் வேதம்தான்; அந்த உபநிஷத் சொல்கிற **தத்வமஸி** இத்யாதி வேத வாக்கியங்கள்தான்.

மதம் என்றாலே அபிப்ராயம் என்றுதான் அர்த்தம். உபநிஷத் வாக்கியத்தை, ஆசார்யர்கள் தங்கள் கருத்தாக வெளியிட்டார்கள். அதற்குண்டான பிரமாணங்களைத் தான் அவரவர்கள் எடுத்துக் காண்பித்தார்கள்.

**முக்தானாம் பரமாகதி:** இவ்வாறு பரகதி அடைந்த முக்தனிடம் பகவானுக்கு வ்யயம் என்பதே கிடையாது. (அவ்யய) குறைதல் என்று ஒன்று உண்டோ பகவானிடத்திலே...? **அவ்யயன்** அவன்! **கொள்ளக் குறைவிலன்** – அவ்யயத்தைத் தமிழ்ப் படுத்திக் காட்டினார் ஆழ்வார்.

தமிழில் சொல்ல வேண்டுமானால், ஆழ்வார்கள் தான் சொல்ல வேண்டும். 'குறைவில்லாதவன், குறையொன்றுமில்லை என்று நான் எவ்வாறு சொன்னாலும் சரியாகாது. 'கொள்ளக் குறைவிலன்' என்று சொன்னார் பாருங்கள்! 'கொள்ளமாளா இன்ப வெள்ளம்' என்றார்! எடுக்க எடுக்க இன்பவெள்ளம் பிரவகித்து ஓடுகிறது! எடுக்க எடுக்கக் குறைவில்லாதவன் – சுவாமி தேசிகன் இதை ஒரு வாக்கியத்திலே சொல்லிவிடுகிறார்:

**'தமதனைத்தும் அவர் தமக்கு வழங்கியும், தான்மிக விளங்கும்'** என்கிறார்.

வரம் ததாதி வரத:

'கருத வரம் தரும் தெய்வப் பெருமாள் வந்தார்'

நாம் என்ன விரும்புகிறோமோ, அதைக் கொடுக்கக் கூடியவன் அந்த எம்பெருமான்.

நம்மிடத்தில் ஒரு பொருள் இருக்கிறது. பத்தாயிரம் ரூபாய் பணம் இருக்கிறது. நாலாயிரம் ரூபாயை ஒருத்தரிடம் கொடுத்தால், நம்மிடம் பணம் குறைகிறது. வஸ்துவும் (பொருளும்) அப்படித்தான்.

ஆனால் பகவான் அப்படி இல்லை. கொடுக்கக் கொடுக்க, தான் மிக விளங்குகிறான். கொடுக்கக்

குறைவில்லாமல் விருத்தி அடைகிறான். இதைத்தான் அவ்யய: என்றார். இந்தத் திருநாமத்தை நன்கு கவனிக்க வேண்டும். வ்யயம் நாஸ்தி - அவனிடத்திலே வ்யயம் கிடையாது; அவ்யயன் அவன் என்பது ஒரு பொருள். மற்றொரு பொருள்; இவ்வளவு சிரமப்பட்டு மோக்ஷத்தை அடைந்திருக்கிறார்களே முக்தர்கள். சம்ஸார பந்தத்தை விட்டு இந்த நிலைக்கு வந்திருக்கிறார்கள். அப்படி அடைந்தவர்களை அவன் மறுபடியும் பூலோகத்துக்கு அனுப்பினால் என்ன பண்ணுவது? - இப்படி ஒரு கேள்வி. அவன் சுவதந்திரன் அல்லவா! அவன் என்ன வேண்டுமானாலும் பண்ணுவான்; பண்ணலாம்!

ஆனால் 'அவ்வாறு பண்ணுவானா...?' என்று ஒரு கேள்வியைக் கேட்டு, 'அப்படிப் பண்ண மாட்டான்' என்கிறது வேதம். ஏனென்றார், அது ஒரு பைத்தியத்தின் செயலேயொழிய வேறில்லை என்கிறது! அந்த ஞானியைப் பெறுவதற்கு, தன் பக்கம் பெறுவற்கு, இவன் எத்தனை சிரமப்பட்டிருக்கிறான். அவனை அடைவதற்கு இவன்தான் என்ன பாடு பட்டிருக்கிறான். இந்த இரண்டையும் நினைத்த பிற்பாடு, அவன் மீண்டும் அந்த ஜீவனை பூவுலகுக்கு அனுப்ப வேண்டும் என்று நினைப்பானா!

பிரும்ம சூத்திரத்தில் கடைசி சூத்திரம் - **அனாவ்ருத்தி: சப்தாத்.** ஆவ்ருத்தி என்றால் திரும்பத் திரும்ப பூலோகத்தில் பிறத்தல். அனாவ்ருத்தி என்றால், பிறவாதிருத்தல். எதைக் கொண்டு இதை நாம் தெரிந்து கொள்கிறோம் என்றால், வேதத்தைக் கொண்டு தெரிந்து கொள்கிறோம். எந்த வேதத்தில் வருகிறது...? சாந்தோக்ய உபநிஷத்தில் வருகிற வாக்கியம்தான். அந்த சூத்திரத்தில் 'அனாவ்ருத்தி சப்தாத்' என்று வருகிறது.

சதஸ்ஸிலே சூத்திரம் சொன்னால், அதற்கு விஷய வாக்கியம் சொல்ல வேண்டும். அப்படிச் சொல்லா விட்டால், அழகிய சிங்கர் எழுப்பி சம்பாவனை பண்ணி அனுப்பி விடுவார். விஷய வாக்யம் - உபநிஷத் வாக்யம் தெரியாமல் சூத்திரம் மட்டும் சொன்னால், பிரயோஜன மில்லை.

அதனால்தான் பூர்வாசிரமத்திலேயே அழகிய சிங்கர் சூத்திரங்களையெல்லாம் சேர்த்து வைத்து, 'சூத்திர அனுக்ரமணிகா' என்று ஒரு ஸ்தோத்திரம் பண்ணினார்.

அதை நெட்டுருப் பண்ணி ஒப்பிக்கிறவர்களுக்கு இரண்டாயிரம் ரூபாய் சம்பாவணை என்றார்! எல்லோரும் மனப்பாடம் பண்ணி விட்டார்கள்! திரவியத்தை காட்டியதால், பாடம் பண்ணாமல் இருக்கக்கூடிய பாடங்கள் பாடமாகிவிட்டது! அப்படிப் பாடம் பண்ண வைத்தார் அவர். அவ்வப்போது பரீட்சையும் வைப்பார். பஞ்ச ஸ்தவம் :- கூரத்தாழ்வார் அருளிய சுந்தரபாகு ஸ்தவம், வரதராஜ ஸ்தவம், உயர்ந்ததாக இருக்கும்படியான அதிமானுஷஸ்தவம், ரங்கராஜ ஸ்தவம், ஸ்ரீ ஸ்தவம் என்று ஐந்து ஸ்தவங்கள். இவற்றில் பொதுவாகக் கொஞ்சம் கொஞ்சம் - சில சுலோகங்கள் தெரிந்திருக்கும் அனேகருக்கு. ஆனால் சுவாமி என்ன பண்ணினார்... எல்லோரும் பஞ்சஸ்தவம் சொல்லும்படியான சக்தியை உண்டு பண்ணினார். அந்த மாதிரி உபநிஷத் வாக்கியங்கள். அந்த சூத்திரங்களைச் சொன்னால், அந்த விஷயங்கள் எங்கே சொல்லப் பட்டிருக்கின்றன, யார் சொன்னார்கள் என்பதைச் சொல்ல வேண்டும்.

**கா**ர்பங்காடு சுவாமியின் சிஷ்யர் வேளுக்குடி வரதாச்சாரி சுவாமி. அவர் திருவள்ளூரிலே எழுந்தருளி யிருக்கிறபோது, **ஸர்வத்ர ப்ரஸித்யதிகரணத்தை** ஆரம்பிக்கச் சொன்னார். அப்போது இஞ்சிமேட்டு அழகிய சிங்கர் அங்கே எழுந்தருளியிருந்தார். அவர் முன்னிலையில் இப்பச் சொன்னதும். 'சர்வத்ர ப்ரஸித்தியாக வேண்டும் என்ற திருவுள்ளமோ உங்களுக்கு?' என்றார்! பரமாத் மாவை, சர்வத்ர பிரஸித்தனாகக் காட்டுகிற சூத்திரம் அது.

பரமாத்மா என்று அவனைச் சொல்லியிருப்பதால், சாமான்யமாக அவனை நினைத்து விடாதே! எந்த உபநிஷத்தை எடுத்துப் பார்த்தாலும் சர்வத்ர ப்ரஸித்தமாக ஆத்ம சப்தத்துக்குப் பரமாத்மா என்று பொருள் வருகிறது. இதிலே சந்தேகமே கொள்ள வேண்டாம் என்று நமக்கு விளக்குகிறது அந்த சூத்திரம். இப்படி பிரும்ம சூத்திரத்திலே போய் உட்கார்ந்தோமானால், அப்படியே இழுத்துக் கொண்டு போய்விடும் நம்மை. அதுதான் விசேஷமானது.

அவ்யய என்றால், பரமாத்மா மோக்ஷத்தை அடைந்தவர்களை மோக்ஷத்திலேயே காப்பாற்றி வைப்பான். அவர்களுக்கு மோக்ஷ சாம்ராஜ்யத்திலே யிருந்து குறைவு என்பது உண்டோ? அவ்வளவு ப்ரியத்தை சம்பாதித்த ஞானிகளை மறுபடியும் பூலோகத்துக்கு அனுப்ப மாட்டான் பகவான். ஒரு நாளும் அனுப்ப மாட்டான்.

•

உலகத்திலே ஒருத்தர் நிறைய தானம் கொடுக்கிறார். கொடுப்பவரைப் பார்த்து "அடாடா! என்ன உதார ஹ்ருதயம்" என்று நாம் கொண்டாடுகிறோம். ஆனால் பகவான் என்ன பண்ணுகிறான்...? கையை நீட்டிக்

கேட்பவர்களைப் 'பார்த்து' அடாடா! என்ன உதார ஹ்ருதயம்!' என்று மாற்றிச் சொல்கிறான் கீதையில். ஏனென்றால், அவன் கையைநீட்டினால்தானே கொடுப்பவன் கொடுக்க முடியும்! அதே மாதிரிதான் பகவானிடத்திலே கை நீட்டிக் கேட்கிறவன் உதாரனாகிறான். அவன் கேட்பதனால்தானே பகவானுக்குக் கொடுக்கும் குணம் என்று ஏற்படுகிறது. ஆகவே, பகவானை அவன் விளங்கச் செய்கிறான். அப்படிப்பட்டவன் கிடைத்த பிற்பாடு அவனை விடுவானோ அந்த பகவான்!

# 24

**அவ்யய:** என்ற சப்தத்துக்கு அர்த்தம் சொன்னேன். பகவான் வாசுதேவன் தான் எல்லாம் என்று சொல்லக் கூடிய ஓர் உத்தமமான ஆத்மா கிடைப்பதே துர்லபம் அல்லவா! அப்படி ஒருவன் கிடைத்தானானால் அந்த பகவான் அவனை விட்டு விடுவானா? அப்படிப்பட்ட ஓர் அதிகாரியைக் கீழே தள்ளுவானா? ஒரு நாளும் தள்ள மாட்டான்! அவ்வாறு தள்ளாதவன்தான் அவ்யயன் - பரமாத்மா.

அவ்யய: என்ற பதத்துக்குப் பரமாத்மா என்று அர்த்தம் சொன்னோம். கொள்ளக் குறைவிலன் அவன் என்றும் பார்த்தோம். இதே அவ்யய சப்தம் ஜீவாத்மா வுக்கும் பொருந்தும். அதைத்தான் ஆசார்யர்கள் சஹஸ்ரநாம வியாக்யானத்திலே சொல்கிறார்கள் - அவ்யய: என்றால், அந்த பரமாத்மாவின் தயையினால் முக்தாத்மாவுக்கும் குறைவில்லை. முக்தாத்மாவை பகவான் திருப்பி அனுப்ப மாட்டான். மறுபடியும் பிறவி என்பது அவனுக்குக் கிடையாது. இவனும் குறைவு படாமல் எப்போதும் அந்த எம்பெருமானை அனுப வித்துக் கொண்டே இருப்பான் என்று விளக்கிக் காட்டப் பட்டிருக்கிறது. ஆகவே அவ்யய சப்தத்தினாலே, 'பரமாத்மா, முக்தாத்மா' என்று இரண்டு பேருமே சொல்லப்படுகிறார்கள்.

அடுத்த பதம் ரொம்ப அழகான பதம் – **புருஷ:**

புருஷ சப்தத்தினாலே எத்தனையோ அர்த்தங்கள் காட்டித் தரப்படுகின்றன. அவற்றிலே நான்கு அர்த்தங்கள் - அந்த நான்கு அர்த்தங்களையும் மத்வாச்சார்யார் விளக்குகிறார்; அந்த நான்குக்கும் ஆதி சங்கரர் அர்த்தம் சொல்லுகிறார் அதே நான்கை விசிஷ்டாத்வைத் ஆசார்யரான பராசர பட்டரும் எடுத்துக் காட்டுகிறார், ராமானுஜர் எடுத்துக் காட்டுகிறார்; சுவாமி தேசிகன் எடுத்துக் காட்டுகிறார்.

எல்லா ஆசார்யர்களும் போற்றும்படியான ஓர் உயர்ந்த திருநாமம், ஓம் புருஷாய நம: ஏனென்றால் புருஷாய நம: என்று சொன்னால் பகவானுக்கு அவ்வளவு சந்தோஷமாம்... விஷ்ணு புராணத்திலே சொல்கிறார்:

'புருஷன் என்று சொன்னால் அது விஷ்ணுவையே குறிக்கும்'

லக்ஷ்மி கல்யாணத்திலே நாம் பார்க்கலாம்... அமிர்தமதன காலத்திலே, பாற்கடலைக் கடைந்தபோது, மஹாலக்ஷ்மி ஆவிர்ப்பவித்தாள். அவளுக்கு விசேஷமான திருமஞ்சனம், புஷ்கலாவர்த்தம் என்கிற மேகம்... அந்த மேகத்திலேயிருந்து நீர் மொண்டு, எடுத்து, அவளுக்கு விசேஷமான திருமஞ்சனம் நடக்கிறது. விசேஷமான அலங்காரம். கையிலே மாலை, எடுத்துக் கொண்டு வருகிறாள். எல்லோரும் பார்த்துக் கொண்டு இருக்கும் போதே – அத்தனை பேரும் பார்த்துக் கொண்டிருக் கிறார்கள் – மஹாலக்ஷ்மி அந்த மாலையை பகவான் நாராயணனுடைய உயர்ந்ததான கழுத்தில் அலங்கரித்து, அவனுடைய வக்ஷஸ்தலத்திலே ஏறி உட்கார்ந்து கொண்டு விட்டாள்.

விஷ்ணு புராண வியாக்யானத்திலே பார்த்தோமானால், ஸ்ரீதரர் என்பவர் ஸ்ரீதரீயம் என்பதிலே அழகாக வியாக்யானம் பண்ணுகிறார். விஷ்ணு சித்தர் என்பவர், விஷ்ணுசித்தீயம் என்பதாக அதை வியாக்யானம் பண்ணுகிறார். இந்த விஷ்ணுசித்தருக்கு எங்கள் ஆழ்வார் என்று பெயர். அவர் கேட்கிறார். 'அந்த மஹாலக்ஷ்மிக்கு வெட்கம் இராதோ...? இத்தனை பேர் பார்க்கிறபோது, எம் பெருமானின் வக்ஷஸ்தலத்திலே ஏறி உட்காருவது என்றால், ஏகாந்தத்தில் பண்ண வேண்டியதை பகிரங்கத்திலே பண்ணுவதென்றால், மஹாலக்ஷ்மிக்கு வெட்கமாக இல்லையா?' என்று கேட்கிறார்! கேட்டுவிட்டுச் சொல்கிறார்:

'மற்றவர்களெல்லாம் இந்தக் காட்சியைப் பார்க்கிறார்களே... அவர்களெல்லாம் புருஷர்களாயிருந்தால் தானே வெட்கப்பட வேண்டும்? எல்லோருமே ஸ்த்ரீகள் தான்' என்று சொல்லிவிட்டார்! பகவான் விஷ்ணு ஒருவன்தான் புருஷன். மற்ற எல்லோரும் அவன் முன்னிலையிலே ஸ்த்ரீகள்.

சாச்வதம் சிவம் அச்சுதம் - மூவேழுலகுக்கும் நாதன் அவன். அவனே எல்லோருக்கும் பர்த்தாவானதனாலே, மஹாலக்ஷ்மி வெட்கப்படாமல் ஏறி உட்கார்ந்து கொண்டு விட்டாள்.

ஆகையினாலே, புருஷன் என்றாலே பகவானைத் தான் குறிக்கும். எல்லா ஆசார்யர்களும் சொல்லக்கூடிய விஷயம் இது!

பஹூ தானாத் புருஷ:
புரி சயனாத் புருஷ:
பூர்ணத்த் வாத் புருஷ:
புராணத்த்வாத் புருஷ:

இந்த நான்கும் புருஷ சப்தத்துக்குப் பொருள். புரு என்றால் பஹு – நிறைய– என்று அர்த்தம். இந்திரனுக்குப் புருஹூதன் என்று ஒரு பெயர் உண்டு. யக்ஞத்தில் அதிகமாக அழைக்கப்படக்கூடியவன் அவன் தான். அவனை வெறுமே கூப்பிட்டபடியே இருப்பார்கள். அடிக்கடி அழைக்கப்படக் கூடியவன் புருஹூதன்.

ஆகவே 'புரு' என்ற சப்தத்துக்கு நிறைய என்று பொருள். நிறைய, வாரி வாரி, வாரி வாரி வழங்கும் படியான வள்ளல் பரமாத்மா. கொடுக்கும் கரமேயொழிய கொள்ளும் கரமில்லை பகவானிடத்திலே.

அதனால் புருஷ சப்தத்தினால், 'வாரி வழங்கும் வள்ளல்' என்ற பொருள் கிடைக்கிறது நமக்கு. அபரிமித மாய்க் கொடுக்கக் கூடியவர் பரமாத்மா.

வஸ்திரம் வேண்டுமா...? திரௌபதிக்குக் கொடுத் தான் பாருங்கள் வஸ்திரதானம். அவனை மாதிரி வேறு யார் பண்ண முடியும்! பார்த்தான் அவன்... நூலினால் பின்னப்பட்ட வஸ்திரத்தைக் கொடுத்து, அதை இழுத்த அத்தனை பேரின் மனைவிமார் கழுத்திலும் இருந்த நூலை அறுத்தெறிந்தான் பரமாத்மா! ஏனென்றார், அவர்கள் பண்ணிய அந்தக் காரியத்துக்காக, அன்று சங்கல்பம் பண்ணிக்கொண்டான் பரமாத்மா. அந்த கிருத்தியைத் தாள முடியவில்லை அவனுக்கு... 'கிருஷ்ணாவாம் தூரவாஸினம்' என்று கதறி அழுதிருக் கிறான். அப்போதும் திரௌபதியை அவன் போய் ரக்ஷிக்க வில்லை. அவன் திருநாமம் ரக்ஷித்தது – இதை பகவானே பேசியிருக்கிறான். கோவிந்தா என்ற திருநாமம் ரக்ஷித்தது. அப்படிப்பட்ட ரீதியிலே பகவான் வஸ்திரதானம் பண்ணினான். விசேஷமாக அன்னதானம் பண்ணினான். உயர்ந்ததான தீர்த்த தானமும் பண்ணினான்.

அன்னதானம் என்றால், தன்னையே அன்னமாக எல்லோருக்கும் காட்டிக் கொடுத்தான்.•

விரஜா நதி தீர்த்தத்தை, எல்லோருக்கும் மோக்ஷ கதியிலே கொடுக்கிறான்.

ஆகவே வஸ்திரதானம், அன்னதானம், தீர்த்த தானம் எல்லாம் பகவான்தான் அளிக்கிறான் நமக்கு.

எல்லா தேவதைகளும் நம் வஸ்திரத்திலே இருக்கிறார்கள். அதனால், இந்த வஸ்திரத்திடத்திலே நமக்கு ரொம்ப கௌரவ புத்தி இருக்க வேண்டும். ரொம்ப ஜாக்கிரதையாக நாம் நடந்து கொள்ள வேண்டும்.

வஸ்திரத்திலே சகல தேவதைகளும் இருக்கிறார்கள். நமக்கு வியர்வை கொட்டுகிறது, வெயில் காலத்தில்... தாள முடியவில்லை. அப்போது வஸ்திரத்தை எடுத்து விசிறிக் கொள்ளக் கூடாது என்கிறது சாஸ்திரம். வேறு விசிறியைத்தான் கையில் வைத்துக் கொள்ள வேண்டும். வஸ்திரத்தை விசிறியாக்குவது தவறு என்று காட்டித் தருகிறது. அவ்வளவு விவரித்துச் சொல்லப்படுகிறது, வஸ்திரத்தைப் பற்றிய விஷயங்கள்.

வேஷ்டியை உடுத்திக் கொள்ளும்போது, கச்சம் சரியாக வர வேண்டுமென்பதற்காக, அதன் முனையைக் கால்கட்டை விரலில் போட்டு அமுக்கி இருப்பார்கள். அந்த கால் கட்டை விரலால் இழுப்பது மகா அபசாரம் என்கிறது! அவிழ்த்துப் போட்ட வஸ்திரத்தைக் காலாலே ஒரு மூலையில் தள்ளுவது - இதெல்லாம் தப்பு. சர்வ தேவதைகளும் வஸ்திரத்திலே இருக்கிறார்கள். பீதாம்பரத்தைத் தரித்துக் கொண்டிருக்கிறான், பரமாத்மா. சர்வ தேவதைகளும் அதனிடத்தில் இருப்பதால் அந்த வஸ்திரத்திடம் நமக்கு ரொம்ப மதிப்பு வேண்டும்.

அப்படிப்பட்ட உயர்ந்ததான வஸ்திரத்தை தானம் பண்ணினான் பரமாத்மா.

ஆகவே பஹுதானாத் புருஷ :- எல்லாவற்றையும் எல்லோருக்கும் கொடுக்கக் கூடியவன் அவன்.

புரி சயனாது புருஷ: 'பன்னென்று பட்டிணம் காப்பே என்கிறார் பெரியாழ்வார். 'பன்' என்றால் இந்த சரீரம். 'புரி' என்றால் சரீரம். இந்த சரீரத்துக்குள்ளே இந்தப் பரமாத்மா இருக்கிறான்.

ஊன் இடைச் சுவர் வைத்து, என்பு தூண் நாட்டி
உரோமம் வேய்ந்து, ஒன்பது வாசல் –
தான் உடைக் குரம்பை பிரியும்போது, உன் தன்
சரணமே சரணம் என்று இருந்தேன்;

தேன் உடைக் கமலத் திருவினுக்கு அரசே!
திரை கொள் மா நெடுங் கடல் கிடந்தாய்
நான் உடைத் தவத்தால் திருவடி அடைந்தேன் –
நைமிசாரண்யத்துள் எந்தாய்!

மாமிச ரத்தத்தினால் பிசையப்பட்ட சுவர்; எலும்புகளால் அமைந்த தூண்கள்; ரோமத்தினால் மேலே கூரை, அதற்கும் மேலே வாஸ்து சாஸ்திர ரீதியாக ஒன்பது வாசல்! ஒற்றைப்படை ரீதியிலே வாசல் அமைய வேண்டும் என்பது வாஸ்து சாஸ்திரம். ஆகவே உடலில் ஒன்பது வாசல்!

நாம் க்ஷேமமாக அந்தந்த வாசற்படி வழியாகப் போக வேண்டும், வர வேண்டும் அல்லவா... அதற்காகத் தான் அவை எவ்வாறு அமைய வேண்டும் என்பதை சாஸ்திரம் சொல்கிறது. ஒரு ஆசார்யனுக்கு சிஷ்யன் பண்ணக்கூடிய கடமை என்னவென்றால், விக்ரஹம் பண்ணி கோயில் கட்டுவது கூட இரண்டாவது பட்சம்தான், ஆனால் முக்கியமாக அவர் இருந்த

இடத்தை, அவர் வாழ்ந்த இடத்தை ரக்ஷிக்க வேண்டும் என்கிறது சாஸ்திரம். அதை மாற்றிவிடக் கூடாது. அவர் எப்படி உட்கார்ந்திருந்தார், எதையெதை உபயோகித்தார் என்று பார்த்து, எல்லாவற்றையும் அப்படியே வைத்திருக்க வேண்டும். அந்த இடத்தை ரக்ஷிக்க வேண்டும். அவரால் இயற்றப்பட்ட கிரந்தம் இருக்கிறது பாருங்கள்... அதை நன்கு கற்று, மற்றவர்களுக்கும் எடுத்துச் சொல்ல வேண்டும். பரவச் செய்ய வேண்டும். அப்படிச் செய்கிறவன்தான் உத்தமமான சிஷ்யன்.

இவ்வாறாக நம் உடலில் ஒன்பது வாயிற்படிகள்... **நவத்வாரபுரே...!** ஒன்பது வாயில் படிகளையுடைய திவ்யமான, அழகான கட்டடம்.

அழகான வீட்டைக் கட்டிக் கொடுத்து க்ஷேத்திரக்ஞ னான ஜீவாத்மாவைக் கொண்டு வந்து அதிலே வைத்திருக்கிறான் பகவான். இப்போது கிருஹப் பிரவேசத்தையும் நடத்துகிறான் பரமாத்மா – புதுமனை புகுவிழா! நூதன கிரஹப்பிரவேசம். இதற்குள்ளே உட்கார வைத்து, 'ஜாக்கிரதையாக இரு; பார்த்துக் கொள்' என்று சொல்கிறான். அவனும் பக்கத்திலே உட்கார்ந்திருக்கிறான்.

ஆனால் கட்டிக் கொடுத்த உடனே இந்த க்ஷேத்ரக்ஞன் பண்ணுகிற காரியம் என்ன தெரியுமா...? கட்டிக் கொடுத்தவனை மறப்பதுதான்!

கிருதக்ஞர்களாக, யார் இதை நமக்குக் கொடுத் தார்களோ, அவனிடம் அடியோடு பற்று இல்லாமல் போகும்போது, இந்த வீட்டிலே மமகாரம், ஆங்காரம் ஜாஸ்தியாகப் போய்விடுகிறது. அலங்காரம் பண்ணிக் கொள்வதிலேயும், வெறுமே தீனி போட்டு வளர்ப்பதி லேயும் வெறுமே பொழுது கழிகிறது!

# 25

உடலாகிற கிருஹத்தைக் கட்டிக் கொடுத்துவிட்டு, அதிலே ஜீவாத்மாவைக் குடியேற்றிவிட்டு, தானும் பக்கத்திலேயே உட்கார்ந்திருக்கிறான் பகவான். ஆனால், நாமோ கட்டிக் கொடுத்தவனையே மறந்துவிடுகிறோம்.

கிருதக்ஞனாக யார் இதை நமக்குக் கொடுத்திருக் கிறானோ, அவனிடம் அடியோடு பற்றே இல்லாமல், இந்த வீட்டிலே மமகாரமும் அகங்காரமும் ஜாஸ்தியாகப் போய்விடுகின்றன. இந்த உடலாகிற வீட்டைப் பேணி வளர்ப்பதிலேயும், அலங்காரம் பண்ணிக் கொள்வதி லேயும் பொழுது கழிகிறது. வெறுமே தீனி போட்டு இந்த 'வீட்டை' வளர்ப்பதிலேயும் எப்போதும் பொழுது செல்கிறது.

ஒரு நாள் என்ன ஆகிறது...? பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் தமது பாசுரத்திலே விவரிக்கிற மாதிரி சொல், செயல், இயக்கம் எல்லாம் நின்று போகிறது. 'அரங்கா, இரங்காயோ இனி!' என்று வேண்டித் துதிக்கிறார் அவர்.

ரங்கநாதரைப் பார்த்துக் கேட்கிறார்: "உனக்கு என்னிடத்திலே இன்னும் காருண்யம் இல்லையா? ஏன் இப்படி என்னை இன்னும் இந்த உலகத்திலே வைத்திருக் கிறாய்...? ஒரு காலத்தில் நான் தடதடவென்று தடையின்றிப் பேசினேன். இப்போது அந்த சொல் போய் விட்டது. எழுந்தால் என்னால் திரும்பவும் உட்கார

முடியவில்லை. அதற்கு இவ்வளவு சிரமப்பட வேண்டி யிருக்கிறது. அந்தக் காலத்தில் எழுந்து ஓடுவேன்... அனாயாசமாகக் காரியம் பண்ணுவேன். இப்போது உட்கார்ந்திருக்கவே முடியவில்லை. எதிரே வருபவர் யார் என்பதை தூரத்திலிருந்த படியே சொல்லியிருக்கிறேன் ஒரு காலத்திலே...

ஒருத்தருக்குப் பார்வை தீட்சண்யமாய் இருந்தால், சம்பாதியின் திருஷ்டியைப் போலிருக்கிறது என்று சொல்வார்கள். "அடடா! சம்பாதியா அவர்!" என்று பாராட்டுவார்கள்.

இலங்கையிலே, அசோக வனத்தில் நூறு யோசனை தூரத்தில் சீதை உட்கார்ந்திருக்கிறதை இங்கேயிருந்தே சொல்கிறார் சம்பாதி. இப்படியானால் எவ்வளவு தூர திருஷ்டி பாருங்கள்!

பக்ஷிகளின் தூர திருஷ்டியை வேதமே கொண்டாடு கிறது. தூரப் பார்வை, மேலே பறந்து கொண்டேயிருக்கும் கருடன்; கீழே அசையும் ஜந்து மீது தடாரென்று பாய்ந்து ஒரு கொத்துக் கொத்தி எடுத்துக்கொண்டு போய்விடும். அந்தப் பார்வை இருக்கிறது பாருங்கள்... பக்ஷிகள் பார்வை - அதி தீக்ஷண்யமாக, தூரத்திலே இருக்கிற விஷயத்தையும் கிரஹிக்கக் கூடிய சக்தி அதற்கு உண்டு.

அவ்வளவு கூர்மையான பார்வையுடையவனாக இருந்தவன், இன்று 'கண்ணும் பஞ்சாச்சே...! என்று படுத்திருக்கிறான். பக்கத்தில் ஒருத்தர் வந்து நின்றால்கூடத் தெரிய மாட்டேனென்கிறது! 'நான் வந்திருக்கேன்... தெரியறதா?' என்று ஒருத்தர்கிட்டே வந்து கேட்கிறார். அப்போதும் தெரியவில்லை; போய்விட்டது கண்!

இவ்வாறு இந்த்ரியங்கள் எல்லாம் அடங்கி, சுவாஸமும் அடங்கி, எழவே முடியாத நிலை. 'இன்னமும்



உனக்கு என்னிடத்திலே காருண்யம் இல்லையா?' என்று கேட்கிறார், பிள்ளைப் பெருமாள் அய்யங்கார். ''இன்னும் எத்தனை நாட்களுக்குத்தான் நான் இந்த உலகத்திலே இருப்பேன்...' சரீரத்தில் பலம் குன்றிப் போய், எல்லாம் போய்விட்டது. இத்தனை நாளாக, இதுதான் சாஸ்வதம்; இந்த பலம் சாஸ்வதம் என்று நினைத்துக் கொண்டிருந்தேனல்லவா... அப்போது இதை ரக்ஷிக்கிறபோது, இந்த சரீரம் பிரயோஜனமில்லை என்பது தெரியவில்லையே!

இப்போது இதை யார் ரக்ஷிப்பார்கள்? யாரும் என்னை ரக்ஷிக்க மாட்டார்கள். யாராலும் பிரயோஜனமில்லை!

வயதாகிவிட்டது எனக்கு. எழுந்திருக்கவே முடிய வில்லை. இந்தச் சமயத்தில்தான் மனைவியினுடைய ஒத்துழைப்பு ரொம்ப வேண்டும். அவள் குணமாக இருக்க வேண்டும். குணவதியாக இருந்து பர்த்தாவுக்குச் சிகிச்சை பண்ண வேண்டும்.

பாணிக்கிரஹணம் பண்ணுகிறபோது அந்த மந்திரத் திலே வருகிறது... 'நீயும் நானும் கிழமாகப் போனாலும் உன் கையை விட மாட்டேன்' என்று பொருள்பட மந்திரம் வருகிறது.

ஆகையினாலே, மனையாள் கூட இருந்து, பர்த்தா வுக்கு அனுகுணவதியாக இருந்து, அவர் சொல்வதை யெல்லாம் செய்யக் கூடிய புஷ்டி அவளுக்கு இருக்க வேண்டும். மனைவிக்கு உடல் ஆரோக்கியம் கடைசி பர்யந்தம் நன்றாக இருக்க வேண்டும் என்று பிரார்த்திக் கிறது அந்த மந்திரம். கடைசி வரைக்கும் குறையக்கூடாது. ஏனென்றால், அந்திமக்காலத்தில் மனைவி போய்விட்டு, பர்த்தா மட்டும் வயசானவராக இருந்தால், ரொம்பக் கஷ்டம்!

வயதும் ஆகிவிடுகிறது. பத்னியையும் இழந்து விடுகிறார்... அப்புறம் என்ன ஆகிறது... இவருக்கென்று சொந்தமாக எதுவும் இல்லை. ஒரு வாழைப்பழம் வாங்கிக் கொள்ள வேண்டுமானால்கூட பிள்ளையைக் கேட்க வேண்டியிருக்கிறது. அதற்கு ஒரு நாள் கேட்கிறார்; இன்னொரு நாள் சங்கோஜப்படுகிறார். பிள்ளையாக இருந்தாலும், தன் வயிற்றில் பிறந்தவனாக இருந்தாலும், அவனைப் பார்த்துக் கேட்கக் கஷ்டமாக இருக்கிறது. 'ஐயோ! இப்படிக் கேட்க வேண்டியிருக்கிறதே, நாம்

இப்படி இருக்கிறோமே!' என்று மனத்திலே ரொம்ப கஷ்டம் ஏற்படுகிறது.

இதற்கும் மேலே ஒன்று... அந்தப் பிள்ளையுடைய மனைவி இருக்கிறாள் பாருங்கள் – இவருடைய நாட்டுப் பெண்... அவள் தன்னுடைய வசவு மொழிகளாலே, சுடு மொழிகளாலே, அப்படியே வந்து சுடுகிறாளாம்! – ஸ்னுஷா வசன தத்தஸ்ய – நாட்டுப்பெண் வந்து பல வார்த்தைகளைச் சுருக்கு சுருக்கென்று படும்படியாகச் சொல்கிறாள்... – இப்படி ஒருத்தர் ஒரு கிருஹத்திலே இருந்து கொண்டிருக்கிறார். இவர் என்ன பண்ணலாம்...? இந்த நிலைமையை விவரிக்கும் சுலோகத்தின் நான்காவது வரி சொல்கிறது:

ஜீவிதாத்து மரணம் வரம்!

இருக்கிறதைவிடப் போவதே நல்லது! போவது என்பது சுலபமாகப் போய் விட்டது; கடைசிக்காலத்தில் இருக்கக் கூடிய ஒரு நிலையைப் பார்த்தால் இப்படித் தோன்றுகிறது.

இதற்குப் பிறகாவது நமக்கு விவேகம் வர வேண்டாமா...? புருஷன் என்று பெயர் அவனுக்கு. புரி சயனாத் – இந்த சரீரத்துக்குள்ளே நமக்கு வீட்டைக் கட்டிக் கொடுத்து, இதற்குள்ளே உட்கார்ந்திருக்கிறான் அவன். நம்மைப் பார்த்துக் கொண்டிருக்கிறான். அந்த எம்பெருமானைப் பிரிந்து நாம் வாழலாமா? அவனை யல்லவா நாம் பற்ற வேண்டும்! எல்லாம் நன்றாக இருக்க வேண்டுமானால் அவனை அணுகினால்தானே நடக்கும்?

ஆகையால் நாம் ரொம்ப ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். இதைத்தான் ஆழ்வாரும் எச்சரிக்கிறார்: 'பிரியும்போது உந்தன் சரணமோ...' என்று கேட்கிறார். "நன்றாக இருக்கிறபோது உன் திருவடியை வந்து

சரணடைந்ததில்லை. இப்போது, இந்த சரீரத்தைவிட்டு ஆத்மா வெளிக்கிளம்புகிறபோது, 'நாராயணா' என்று சொல்கிறேன்... பிரபோ, நைமிசாரண்யத்து எந்தாய், என்னைக் காப்பாற்று!" என்கிறார். பகவானும், இவ்வாறு சொல்கிறானே என்று சந்தோஷப்பட்டு ரக்ஷிக்கிறான். ஆகையினாலே **'புரிசயனாத் புருஷ:'** என்றால், ஒவ்வொருத்தர் சரீரத்திலேயும் பாரபக்ஷமில்லாமல் இருப்பவன் - சர்வ சராசரங்களிலேயும் இருப்பவன் பகவான் என்று பொருள். இந்த சரீரம் பகவானுக்கான சரீரம். நமது ஆத்மாவுக்கு மட்டும் இந்த சரீரம் இல்லை; உள்ளே அவன் உட்கார்ந்திருப்பதனாலே அந்தப் பரமாத்மாவுக்கும் இந்த சரீரம் சரீரமாகிறது. ஆகவே, 'மனத்தினால் நான் தூய்மையாக இருக்கிறேன், உடம்பு எப்படி இருந்தால் என்ன...?' என்று இருக்கலாகாது.

ஒருத்தர் அழுக்கு வேஷ்டி உடுத்திக் கொண்டிருக்கிறார். தலை வாரிக் கொள்வதே கிடையாது. ஸ்நானம் பண்ணுவதில்லை... நல்ல காரியங்கள் எதுவும் பண்ணுவதில்லை. ஜபம் பண்ணுவதில்லை; தபஸ் பண்ணுவதில்லை... "சரீர சுத்தி எதற்கு? மனஸ் சுத்தியாயிருந்தால் போதாதா?" என்று அவர் கேட்கிறார்.

**போதாது!** ஏனென்றால் உள்ளுக்குள் பகவான் உட்கார்ந்திருக்கிறான். அவன் வாழும் ஆலயம் இது. கோயிலில் சுண்ணாம்பு தடவி, காவி தடவி, அதை ரொம்பச் சுத்தமாக வைத்திருக்க வேண்டும். நம்பாகுவான் சரித்திரத்திலே இதெல்லாம் ரொம்ப விசேஷமாகச் சொல்லப்படுகிறது. கோயிலொழுக்கு என்றே பெயர் இதற்கு. கைசிக மகாத்மியத்திலே, ஏகாதசி மகாத்மியத்திலே சொல்லப்படுகிறது. கோயிலில் பகவானுக்குப் பூஜை பண்ணுவதைக் காட்டிலும், அவனிருக்கிற இடத்தைச் சுத்தமாக வைத்துக் கொள்வதுதான் முதல் பூஜை. அந்த

இடத்தை ஒரே சேறும் சகதியுமாக வைத்திருந்தால், நீ என்ன பூஜை பண்ணினாலும் பகவான் ஏற்க மாட்டான். சுத்தமாக வைத்து, அந்த இடத்திலே கோலமிட்டு, பகவான் இருக்கிற இடம் பரிசுத்தமாக இருக்க வேண்டும்.

'இந்த சரீரத்துக்குள்ளே எம்பெருமான் இருக்கிறான். அவன் வாழ்கிற ஆலயம் இது' என்ற எண்ணத்தோடு, நல்ல முறையிலே ஸ்நான ஸ்ந்தியை முதலியவைகளால் இதைச் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும்.

புரி என்றால் பட்டணம். இந்த உடலாகிற பட்டணத்திலே பகவான் இருக்கிறான் என்று இதை அபிமானிக்க வேண்டும். அதனால்தான் 'சரீரமே நமக்கு மித்ரன்; சரீரமே நமக்குச் சத்ரு' என்று சொல்லியிருக்கிறது.

அஹோபில மடத்திலே நாற்பத்து நான்காவது மூர்த்தாபிஷதராக எழுந்தருளிய அழகிய சிங்கர் இதைப் போல் நூறு விஷயம் எழுதியிருக்கிறார்.

கண்ணே சத்ரு என்றால், கண், கெட்டதிலே ஈடுபட்டால் அது சத்ரு; அதுவே பகவத் விஷயத்தில் ஈடுபட்டால் அது மித்ரன். இந்த மாதிரி இந்தச் சரீரத்துக்கு எத்தனையோ கெட்ட குணங்களும் இருந்தாலும், ஒரு நல்ல குணமும் இருக்கிறது...

அது என்ன குணம் என்றால்... பிராதக்காலம், அந்த பிரம்ம முஹூர்த்தத்தில் எழுந்திருப்பது என்பதை இந்த சரீரத்துக்கு நாம் ஏற்பாடு பண்ணி விட்டோமானால், அது எங்கே போனாலும் எழுந்துவிடும். அப்போது பாருங்கள்... எவ்வழிப்படுத்துகிறோமோ, அவ்வழியிலேயே இது போகும். அதனால்தான் சரீரத்துக்கு க்ஷேத்திரம் என்றும் ஒரு பெயர். க்ஷேத்திரம் என்றால் திவ்ய தேசம் என்று அர்த்தம். அது மாத்திரமில்லை. தானியம் விளையும் பூமிக்கு – நஞ்சை – புஞ்சைக்குக்கூட க்ஷேத்திரம்

என்று பெயர். சரீரமாகிற க்ஷேத்திரத்தில் புண்ணியமாகிற வித்தை நட்டோமானால், புண்ணியத்தைச் சாகுபடி செய்யலாம். பாபமாகிற வித்தினை நட்டால், பாபத்தைச் சாகுபடி பண்ணலாம்! எந்த விதையை இடுகிறோமோ, அந்த விதைதானே முளைக்கும்...! ஆகவே நல்ல, உயர்ந்த விதையை இதனுள்ளே இட்டு, சிறந்ததைச் சாகுபடி பண்ணலாம். ஏனென்றால் இதற்குள்ளே எம்பெருமான் இருந்து கொண்டு நம்மை ரக்ஷிக்கிறான்.

# 26

**புராணத்துவாத் புருஷ:** - ரொம்ப புராணமானவர் பரமாத்மா. அப்படியென்றால்...? ஏதோ பழைய விஷயம் என்று அர்த்தமில்லை! அபி நவம் புராணம் என்று பெயர். அப்போதைக்கப்போது ஆறாவமுதம் அவன்! ரொம்ப புராணம்தான்... ஆனால், அனுபவிக்க அனுபவிக்க, ஆறா வமுதமாக தெவிட்டாத தெள்ளமுதமாக, அப்பொழுதுக் கப்பொழுதே சுவையாக இருப்பான் பரமாத்மா.

அதற்கும் மேலே அவன் இன்னொன்றுமாய் இருக்கிறான்:

**பூர்ணத்துவாத் புருஷ:**

பூர்ணாஹுதி மந்திரம் என்பது உண்டு.

'இந்தப் பூர்ணாஹுதியில்தான் எல்லாம் அடங்கி யிருக்கிறது' என்று சொல்கிறது : அஸ்யாம் பூர்ணாஹுத் யாம் ஸர்வம் பிரதிஷ்டதி.

'இத்தனை நேரமாக எத்தனையோ ஆஹுதிகள் எல்லாம் பண்ணினோம் (யக்ஞத்தில் எத்தனையோ திரவியங்களை இட்டோம்) முடிவிலே இப்போது எல்லாவற்றுக்கும் சேர்த்துப் பரிபூரணமாய்ப் பண்ணு கிறோம் ஏற்றுக் கொள்ளவும்' என்று வேண்டுகிறோம்.

மற்ற நாட்களெல்லாம் யக்ஞத்துக்கு வரா விட்டாலும், பூர்ணாஹுதியை ஸேவித்தால், மீதி

மொத்தத்தையும் ஸேவித்த பலன் உண்டு என்பார்கள். அதற்காக 'பூர்ணாஹுதி அன்று மட்டும் வந்தால் போதும்' என்று ஒருத்தர் நினைத்துவிடக் கூடாது! பிற நாட்களிலும் வர வேண்டும். ஒருக்கால், மற்ற நாட்களிலும் வரமுடியாமல் போயிருந்தால், பூர்ணாஹுதி ஸேவிக்கும் போது பூரண பலன் கிடைக்கும்.

பூர்ணாஹுதி என்று ஏன் பெயர்? பூரணனான, எதிலும் குறைவில்லாதவனான எம்பெருமானின் பொருட்டு இந்த ஆஹுதி, அதனாலே பூரணாஹுதி.

ஒரு குத்துவிளக்கை ஏற்றி வைத்து அவரவர் அந்த விளக்கிலிருந்து பல குத்து விளக்குகளை ஏற்றிக் கொண்டே போகலாம்... அதனால் இந்த முதல் குத்துவிளக்குக்கு ஏதாவது குறை வந்துவிடுமா என்ன!

அந்த மாதிரி சர்வத்துக்கும் மூலாதாரமாக பிரதானமாக இருக்கிற இவனிடத்திலிருந்து எல்லாம் பிரவிர்த்தம் ஆகிறது. பூரணன் அவன். எப்போதும் பூரணமாக இருக்கிறான். **பூரணத்துவாத் புருஷ:** அதனால் தான், புருஷ ஸூக்தம், என்பது, பூரண புருஷனாகிய எம்பெருமானுடைய பெருமையைக் கர்ட்டக் கூடிய ஸூக்தமாக விளங்குகிறது.

அந்த புருஷனின் பூர்ணத்துவத்தை நாம் மறக்காமல் மனத்திலே வைத்துக் கொள்ள வேண்டும்.

**அவ்யய: புருஷ ஸாக்ஷி** என்ற நாமாக்களுள், அவ்யய, புருஷ என்பவற்றைப் பார்த்தோம். சாக்ஷி என்றால்...

'சர்வோப த்ருஷ்ட...! என்று எம்பெருமானை எல்லா ஆசார்யர்களும் இங்கே விளக்கம் சொல்லுகிறார்கள்.

**ஸர்வோப த்ருஷ்டா ஸாக்ஷிணே நம:**

எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருக்கிறான் அவன். ஆகையினாலே, 'அவனுக்குத் தெரியாமல் ஏகாதசி

உபவாஸம் இருக்கிறேன்' என்று எண்ணிக் கொண்டு, ஒருத்தரும் அறியாதவாறு உள்ளே போய், தோசை - மிளகாய்ப் பொடியைச் சாப்பிடுவதா!

சிராத்தத்தன்று விரதம் இருக்க வேண்டும். அன்றைக்குத்தான் கூடுதலாகப் பசிக்கும்! நித்யமே பன்னிரெண்டு மணிக்குச் சாப்பிடுவார்; அன்றைக்கு மட்டும் ஏழு மணிக்கே பசிக்கும்! பகவான் பரீட்சை பண்ணுகிறான் நம்மை! ஒரு நல்ல நாளில் - ஏகாதசியன்று : உபவாஸம் இருந்தால் அவ்வளவு நல்லது. இரண்டு பக்ஷமும் இல்லை என்றாலும் சுக்ல பக்ஷ ஏகாதசி யன்றாவது இருந்தால் அவ்வளவு நல்லது!

ஆனால் ஏகாதசி விரதத்தை மேற்கொள்ளக் கூடியவர், நிதானத்தோடு அதை மேற்கொள்ள வேண்டும். மூன்று வேளை சாப்பிடக் கூடியவர், ஒவ்வொரு ஏகாதசியாய், ஒவ்வொரு வேளையாக மெள்ள குறைத்துக் கொண்டு வந்தால், ஒரு வருஷத்தில் பூரண நிர்ஜல உபவாஸம் சிந்திக்கலாம். ஜலம்கூட சாப்பிடாமல் இருக்கிற நிலையை அவர் அடையலாம். ஆனால், தடா லென்று ஒரு நாள் ஏகாதசி விரதம் இருக்கிறேன் என்று ஆரம்பித்து விட்டு, அன்றைய தினம் பன்னிரெண்டு மணிக்கு ஏகமாகப் பசி அவருக்கு! என்ன பண்ணுவது என்று பார்த்தார்... நித்யம் பண்ணாத தப்பு மொத்தத்தை யும் அன்று பண்ணுகிறார்! இப்படிப் பண்ணினால் விபரீதமான பலன்தான் ஏற்படும்! இந்த விஷயத்தில் த்ருவனைப் பார்த்து நாம் தெரிந்து கொள்ள வேண்டும். ஐந்து மாதங்களில் ஒவ்வொன்றாகக் குறைத்துக் கொண்டு, குறைத்துக் கொண்டே வந்து, கடைசியில் எதையும் சாப்பிடாமல் அவன் இருக்கிறான். ஐந்தாவது மாதத்தில்தான் அது முடிகிறது.

ஆகவே, எதையுமே சிரமமாகப் பண்ண வேண்டும். முறைதவறிப் பண்ணி பிரயோஜனமில்லை! மற்றவர்களை வேண்டுமானால் ஏமாற்றலாம். 'இன்றைக்கு நான் உபவாஸம், உபவாஸம்' என்று உலகத்துப் பேரிடம் வேண்டுமானால் சொல்லலாம். 'இந்த சுவாமி இன்று உபவாஸம்' என்று எல்லோரும் நம்பவும் செய்யலாம். ஆனால் **அவனை** நாம் ஏமாற்ற முடியுமா! சர்வ சாக்ஷி அவன் அவனுக்கு நாம் பயப்படத்தான் வேண்டும்! எம்பெருமான் சதா நம்மைப் பார்த்துக் கொண்டே யிருக்கிறானே... அவனை ஏமாற்றலாமா!... மற்றவர்களிடம் சொன்னால் அவர்கள் நம்புகிறார்கள். எம்பெருமான் நம்புவானா! பார்த்துக் கொண்டேயிருக்கிறானல்லவா நாம் பண்ணுவதை... அதனால் சிக்ஷிக்கிறான்.

உபவாஸமே இல்லாவிட்டாலும் பரவாயில்லை. ஏகாதசி அன்றைக்குத் தப்பு பண்ணிவிட்டு, 'உபவாஸம் இருந்தேன்.' என்று சொன்னால், அதற்கு ஏற்படக் கூடிய பாபம் இருக்கிறது பாருங்கள்... அது மிக அச்சுறுத்துவது.

ருக்மாங்கதனுடைய சரித்திரத்திலே பார்க்கலாம். ஏகாதசி அன்றைக்கு விசேஷமாக எல்லோருக்கும் மோக்ஷம் கிடைத்தது என்பதைத் தெரிந்து கொள்ளலாம். அந்தச் சமயத்தில் பாப தேவதை திண்டாடுகிறது. 'என்ன பண்ணுவது?' என்று அதற்குத் தெரியவேயில்லை. ஒன்றும் புரியவில்லை அது என்ன பண்ணிற்று... பிரும்மாவிடம் போயிற்று... "என்னைப் படைத்துவிட்டு எனக்கு வேலையே இல்லாமல் பண்ணி விட்டீரே... எல்லோருமே மோக்ஷத்தை அடைந்து விட்டார்களே...!" என்றது!

"உனக்கு ஒரே ஒரு இடம் தருகிறேன்..." என்றார் பிரும்மா... "ஏகாதசி தினத்தன்று முழு அரிசியிலே போய் உட்கார்ந்து கொள்வேன்" என்றார்.

அப்படியானால் என்ன அர்த்தம்? முழு அரிசியைச் சாதமாக்கி, அந்த சாதத்தை ஏகாதசி அன்றைக்கு யார் சாப்பிடுகிறார்களோ... அவர்களை அந்தப் பாப தேவதை பற்றிக் கொள்ளும். அவர்களும் பாபத்தையே சாப்பிட்ட வர்களாகிறார்கள்!

ஒரு கணவன், மனைவி... சண்டை போட்டார்கள். ஏகமாகத் தளிகை பண்ணி வைத்திருந்தா. அவள், சாப்பிடுவதற்கு... இரண்டு பேருக்கும் சண்டை வந்து விடவே, சாப்பிடாமல் போய்விட்டான் அவன்!

இவளும் 'நானும் சாப்பிடமாட்டேன்' என்று இருந்துவிட்டாள்! இது ஏகாதசி அன்றைக்கு நடக்கிறது! இத்தனை விதம் சாப்பிட வேண்டும் என்று பண்ணி வைத்துவிட்டு, இரண்டு பேருமே சாப்பிடவில்லை. உபவாஸ பலன் கிடைத்துப் போய்விட்டது. இந்த இரண்டு பேருக்கும்! சண்டை போட்டதற்கே இந்த உபவாஸ பலன் என்றால், உண்மையாகவே விரதமிருந்தால், பலன் ஏற்படாதா!' அப்பேர்ப்பட்ட பலன் ஏகாதசி விரதத் துக்கு... அதிலே போய் பகவானை ஏமாற்ற முற்படுவ தாவது... சர்வசாக்ஷியான அவனை ஏமாற்றத்தான் முடியுமா!

ஏகாதசி அன்றைக்குப் பாப தேவதையை ஓட்டு வதற்காகத்தான் அரிசியை பின்னம் பண்ணி, இரண்டாக உடைத்து உப்புமா பண்ணுவது என்று ஏற்பட்டிருக்கிறது! உப்புமாவின் தோற்றம் ஆவிர்பாவமே இதுதான்! அன்னமாகச் சாப்பிடக்கூடாது என்கிறது சாஸ்திரம். அரிசியை உடைத்தால் பாபம் போய்விடும். உடைத்த அரிசியைக் கொண்டு உப்புமாவோ, கஞ்சியோ, சாப்பிடலாம் பிராண தாரணத்துக்காக.

உடம்பிலே பலம் புஷ்டி எல்லாம் இருந்தன வென்றால், அப்படிப்பட்டவர்கள் உபவாஸம் இருந்தால், அது அவர்களுக்கு ஆரோக்கியத்தைத்தான் கொடுக்கும். மகான்களெல்லோரும் பதினான்கு நாள் நன்றாகச் சாப்பிட்டு, ஒரு நாள் பட்டினியிட்டால் இந்தச் சரீரம் நல்ல ஆரோக்கியத்தோரிடையே இருக்கும். ஆகவேதான், ஏகாதசி விரதம் சுத்தம் என்று பகவானே சொன்னான். நமக்குள்ளே சாக்ஷியாக அவனே உட்கார்ந்து கொண்டு ஒவ்வொரு காரியத்தையும் பார்த்துக் கொண்டிருக்கிறான் அவன். ஒவ்வொரு கர்மாவையும் பார்த்துக் கொண்டிருக் கிறான். சாக்ஷியாக அவன் இருக்க, நாம் ஏமாற்றலாமா? சர்வசாக்ஷிணே நம என்று வைகுண்டத்திலே அவன் எழுந்தருளியிருக்கிறான். மூக்த புருஷர்கள் எல்லோரும் அனுபவிக்கும்படியான மோக்ஷானந்தத்துக்கு அவனே சாக்ஷியாக இருக்கிறான்!

**ஆகவே அவ்யய: புருஷ: சாஷி...**

# 27

இதற்கப்புறம் வரும் நாமங்கள் **க்ஷேத்ரக்ஞ அக்ஷர யேவச.**

ஜீவாத்மாவுக்கும் க்ஷேத்ரக்ஞன் என்று பெயர். பகவானுக்கும் க்ஷேத்திரக்ஞன் என்று பெயர். ஜீவாத்மா மாத்திரம்தான் க்ஷேத்ரக்ஞன் என்று நினைத்துவிடக் கூடாது. பரமாத்மாவும் நமது உடலாகிய க்ஷேத்திரத்திலே வாஸம் பண்ணுவதாலே க்ஷேத்ரக்ஞன் ஆகிறான்.

**'ஆகாச சரீரம் பிரும்மா'** என்கிறது உபநிஷத்.

ஆகாசம் என்றால், இதோ இங்கே தெரிகிற வானம் இல்லை! யோமாகாசம், பரமாகாசம்... இதைத் தனக்குச் சரீரமாக உடையவன் பரமாத்மா.

இந்த க்ஷேத்திரம் என்பதையே, உபநிஷத் ஆகாச சரீரம் என்று சொல்கிறது.

க்ஷேத்ரம் என்று சொன்னாலும் ஒன்றுதான், ஆகாச சரிரம் என்று சொன்னாலும் ஒன்றுதான்! ஆகாசத்தை - வைகுண்டத்தை தனக்கும் சரீரமாக உடைவன். பரமாத்மா, அதற்குள்ளே அவன் அமைதியாய் உட்கார்ந் திருக்கிறான். பரவாசுதேவனாக, சுத்த சாத்விக மயமான மணி மண்டபத்திலே உறைகிறான். அப்படிப்பட்ட க்ஷேத்ரக்ஞன் அவன்.

**அக்ஷரயேவச...** க்ஷரதி என்றால் தேய்தல். இந்த சரீரத்துக்கு வளர்தல் - தேய்தல் என்பது உண்டு. பகவானுக்கு குணத்திலோ ஸ்வரூபத்திலோ, தேய்தல் வளர்தல் என்பது கிடையாது. எப்போதும் ஒரே மாதிரி இருக்கக் கூடியவன் அவன். அதே மாதிரி, அவனை அடைந்த முக்தாத்மாக்களும் தேய மாட்டார்கள். அவனைப் போன்றே என்றென்றும் விளங்குவார்கள்.

இந்த இரண்டாவது சுலோகத்திலே வருகிற ஐந்து நாமாக்களும் - அவ்யய, புருஷ, சாக்ஷி, க்ஷேத்ரக்ஞ அக்ஷரயேவச என்ற ஐந்தும் சர்வத்துக்கும் மூலமாக இருக்கக் கூடிய எம்பெருமானை அடைந்து, ஜீவாத்மாக் களும் அவனைப் போல ஆகிறார்கள் என்பதைக் காட்டித் தருகின்றன.

**எ**ந்த பகவானுடைய பிரபாவத்தை நாம் உணர வேண்டும் உணர வேண்டும் என்று நினைக்கிறோமோ, அப்படிப்பட்ட பரதத்துவமான எம்பெருமானை, சாஸ்திர மாகிற பிரமாணத்தைக் கொண்டே ஆக்ஞாபிக்கிறது உபநிஷத்.

அதுமட்டுமல்ல, ஆயிரம் தாய் தந்தையரைக் காட்டிலும் நம்மிடம் அன்பு கொண்டது சாஸ்திரம். அப்படிப்பட்ட வேதத்தின் பரம பிரமாணத்தினால் அறியப்படவேண்டியவன், அடையத் தகுந்தவன், பரமபிரமேயமான எம்பெருமான்.

பல யக்ஞங்களிலே அவனை ஆராதிக்கிறோம். வேதத்தினுடைய விசேஷமான பூர்வ பாகம் முழுமையும் அவனை யக்ஞத்தினால் ஆராதிக்கும் படியான பிரகரணத்தை நமக்குச் சொல்லி, 'ஸர்வகர்ம் ஸமாராத்யன் அவன். எம்பெருமான் ஸ்ரீய: பதியான விஷ்ணு' என்று எடுத்துச் சொல்கிறது.

விஷ்ணுவினுடைய பிரபாவத்தை, பூர்வபாகம் முழுவதிலும் கொண்டாடி, உத்தர பாகமாகிற, ஞான காண்டமாகிற, (பிரும்மகாண்டமாகிற) உபநிஷத்திலும் நாராயணன் என்று அவனை அழகாக எடுத்துக்காட்டி, அவனுடைய நன்மைகளையெல்லாம், பிரம்மம் என்றும் தத்வம் என்றும், பரம என்றும் நாம் உணர வேண்டும் என்று பல இடங்களிலே நன்றாக எடுத்துக் காட்டுகிறது.

இந்த பூர்வபாகம் உத்தரபாகம் ஆகிய இரண்டும் சேர்ந்த முழுமையான வேதப்பொருள், நமக்கு சஹஸ்ர நாமத்தில் கிடைக்கிறது. அதனால்தான் சஹஸ்ரநாமம் சர்வவிதத்திலும் ஏற்றமுடையது. மகா கோரமான வியாதியால் பீடிக்கப்பட்டவர்கள். ரொம்ப சிரமப் படக்கூடியவர்கள், மனத்திலே பீதி உள்ளவர்கள், இவர்களெல்லாம், 'நாராயணா' என்ற சப்தத்தைச் சொன்னாலே, சர்வ துக்கத்திலிருந்தும் விடுபடுகிறார்கள். சுகத்தை அனுபவிக்கிறார்கள். பூரண சுகம் ஏற்படுகிறது.

ஒரு திருநாமத்துக்கே இத்தனை மதிப்பு என்றால், ஆயிரம் திருநாமங்களையும் உள்ளபடி அதிலே கொள்ள அர்த்த விசேஷங்களோடு யார் அனுசந்திக்கிறார்களோ, அப்படிப்பட்டவர்களுக்குக் கிடைக்கக் கூடிய பாக்கியத்தை வாக்கினால் விவரிக்க முடியாது. அப்படிப் பட்ட உயர்ந்த வாங்மயம் பீஷ்மாச்சார்யாருடைய திவ்யமான வாக்கான சஹஸ்ரநாமம் வேத பரிதமான, வேதார்த்தங்கள் நிரம்பிய, உபநிஷத் அர்த்தங்கள் நிரம்பிய திருநாமங்கள்.

எம்பெருமானுடைய காரியமாகிற இந்த உலகத்தின் தன்மை, இவற்றுக்கெல்லாம் காரணபூதனான அவன் பெருமை, வைகுண்டத்திலே முக்தாத்மாக்கள் அனுப விக்கக் கூடியவை - இவையெல்லாம் சஹஸ்ர நாமத்தின் முதல் இரண்டு சுலோகங்களிலே பார்த்தோம்.

மூன்றாவது சுலோகத்திலே,

யோகோ யோக விதாம் நேதா பிரதான புருஷேச்வர: |
நாரசிம்ஹ வபு: ஸ்ரீமான் கேசவ புருஷோத்தம: ||

சஹஸ்ரநாமத்துக்கே ஈராக இருப்பது இந்த சுலோகம்தான். ஆயிரம் திருநாமங்களும் நரசிம்ஹ னுடைய திருவடிக்கே அங்கிதம் என்பது, ஆசார்யர் களுடைய உயர்ந்ததான சித்தாந்தம். எல்லா ஆசார்யர் களும் நரசிம்ஹனின் திருவடியை விவரிக்க வரும்போது, இதிலிருக்கக் கூடிய திருநாமத்தையெல்லாம் அந்த அவதாரத்தோடே இணைத்துச் சொன்னார்கள். எல்லா நாமங்களும் ஒரு பெருமையையே காட்டும்... நரசிம்ஹன் பெருமை!

பகவான் வாசுதேவன் எதிரே உட்கார்ந்திருக் கிறான்... ஆனால், பீஷ்மாச்சார்யார். எதிரே உள்ள வாசு தேவனை விட்டுவிட்டு, சஹஸ்ரநாமத்திலே நரசிம் ஹனைப் போற்றுகிறார்.

பூலோகத்தில், சாதாரணமாக, யார் எதிரே உள்ளார்களோ, அவரைத்தான் மக்கள் தோத்திரம் பண்ணுவார்கள். ‘அவரைப் போலே உண்டோ?’ என்பார்கள். மறைவாக கண்ணுக்கெதிரே இல்லாத வர்களை ஸ்தோத்திரம் பண்ணத் தோன்றாது அவர் களுக்கு! ஆனால் பிஷ்மாச்சாரியார் என்ன பண்ணு கிறார்...? எதிரே உள்ள வாசுதேவனை விட்டுவிட்டு, நரசிம்ஹனை முதன் முதலில் ஸ்தோத்திரம் பண்ணுகிறார்.

சஹஸ்ரநாமத்தில் முதன் முதலில் சொல்லப்பட்ட அவதாரம் எது என்று கேட்டால், நரசிம்ஹ அவதாரம் தான். ஏனென்றால், அதற்கு முன்பு வரை சொல்லப்பட்ட நாமங்கள் எல்லாமே பொதுத் தன்மைகள்.

விச்வம், விஷ்ணு, வஷட்கார; பூதபவ்ய பவத்ப்ரபு, பூதாத்மா, பரமாத்மா, முக்தானாம் பரமாகதி:, அவ்யய:, புருஷ:, சாக்ஷி:, க்ஷேத்ரக்ஞ:, அக்ஷரயேவச... **'யோகோ யோக விதாம்நேதா பிரதான புருஷேச்வர:** என்று இத்தனை திருநாமங்கள்.

யாரவன்...?

**'நாரசிம்ஹ வபு ஸ்ரீமான்!'** என்ற அடுத்த நாமத்திலே தெளிவுபடுத்தி விடுகிறது சஹஸ்ரநாமம்!

ஆகையால், இத்தனை நேரமும் சொன்னதற்குப் பொருளாக இருக்கக் கூடியவன் யாரென்றால்... நரம் கலந்த சிம்ஹத் திருமேனியுடைய எம்பெருமான் தான்! ஸ்ரீயுடன் கூடிய, அதிசுந்தர ரூபமான சுந்தர சிம்ஹம்தான் என்று இங்கே வந்து முடிகிறது.

அந்த சிம்ஹத் திருமேனியைத் தாங்கிய அவனுடைய பிரபாவம் இந்த சஹஸ்ர நாமம்.

முதல் அவதாரமாக நரசிம்ஹ அவதாரம் வருகிறது. கடைசியில் பாருங்கள்... **ஸர்வப்ரகரணாயுத:** என்றும் **அவன்** திருநாமமே வருகிறது.

**ஸர்வப்ரகரணாயுத:** என்றால், பகவானுக்கு எதுவும் ஆயுதம் ஆகின்றது என்று பொருள். இதுதான் ஆயுதம் என்பது இல்லை... எதை வேண்டுமானாலும் அவன் ஆயுதமாக்கிக் கொள்வான்.

சஹஸ்ரநாமத்தின் நடுவிலும் நரசிம்ஹனே பேசப்படுகிறான். நடுவில் பல இடங்களில் நரசிம்ஹனே காட்சி அளிக்கிறான். ஆகையினாலே, இப்படி ஆத்யந்தம் சஹஸ்ரநாம கிரந்தத்தை ஆராய்ந்தால், நரசிம்ஹனே தெரிகிறான்.

கிரந்தத்தைக் கையில் கொடுத்துவிட்டு; இது எதைச் சொல்கிறது என்று கேட்பார்கள். உபக்ரம, உபஸம்ஹாரம்,

ஆரம்பம் என்ன சொல்கிறது. கடைசியில் என்ன சொல்லப்பட்டிருக்கிறது. நடுவில் என்ன... இப்படியெல்லாம் ஒரு நூலை ஆராய்ந்து பார்க்க வேண்டும். ‘உடனே படித்துச் சொல்கிறேன்’ என்று சொல்லக்கூடாது. ஆரம்பத்தைப் பார்க்க வேண்டும்; நடுவில் பார்க்க வேண்டும்; கடைசியைப் பார்க்க வேண்டும். அப்படி சஹஸ்ரநாமத்தைப் பார்த்தோமேயானால், அது நரசிம்ஹ ப்ரபாவம் என்பது தெளிவாகத் தெரியும். ஆயிரம் திருநாமங்களும் அவன் பெருமையைப் பேச வந்தது என்பது ஸ்பஷ்டம்.

# 28

**வே**தமானது **'ஸதஸத்பதிம் அத்புதம்'** என்று பகவானைக் கொண்டாடுகிறது. ஸபைக்கு ஸதஸுக்கு அதிபதியாக இருப்பவன் அவன்.

ஸதஸத்பதி என்றால்!...

நித்ய சூரிகள், முக்தாத்மாக்கள் எல்லோரும் வந்து ஸேவிக்கிற ஒரு பெரிய ஸதஸ் வைகுண்டத்திலே... அதற்கெல்லாம் பதி யார் என்று கேட்டால், பகவான் நாராயணன், அவனே அந்த அத்புதம் (அற்புதம்) என்று கூறுகிறது.

அவதார காலத்திலே பகவானை - ஸ்ரீமன் நாராயணனை - உலகத்தவர்கள் அத்தனை பேரும் வணங்கி நின்று, ஸ்தோத்திரம் பண்ணுகிறார்கள். அவனே தான் தேவதைகளுக்குப் பதிலாக இருக்கக் கூடியவன் என்பதனாலே, அவன் 'அத்புதன்' ஆகிறான்

இதே அத்யத்புத சப்தத்தைக் கொண்டு தான் நரசிம்ஹனின் பிரபாவமும் சொல்லப்படுகிறது.

எப்பேர்ப்பட்டவன் அவன்...?

சூரியன் அவனுக்கு ஒரு நேத்திரம்; சந்திரன் இன்னொரு நேத்திரம். எம்பெருமான் நரசிம்ஹன் விசேஷமாய் மூன்றாவது நேந்திரத்தை நெற்றியிலே, உடையவனாயிருக்கிறான்... அது மாத்திரமல்ல; ஸ்ரீதேவி,

பூதேவி, நீளா தேவி என்று மூன்று திவ்ய மஹிஷிகளோடு எழுந்தருளியிருக்கிறான். அதனால் த்ரியம்பகன் என்று பெயர் அவனுக்கு மூன்று பட்டமஹிஷிகள் மூன்று நேத்திரம் உடையவன்.

ம்ருத்யுஞ்சயன் அவன். **ம்ருத்யு ம்ருத்யுவெ நம:** ம்ருத்யுவுக்கு ம்ருத்யுவாக இருக்கக் கூடியவன்! அவனுடைய மந்திரத்திலே இது பிரசித்தமாய் வருகிறது. ஸ்தம்பத்திலிருந்து ஆவிர்பவித்தானே - ஹிரண்யனால் கட்டப்பட்ட அந்த ஸ்தம்பத்திலிருந்து ஆவிர்பவித்தானே, அவனை நம்முடைய ஆயுளுக்கும் அபிவிருத்திக்கும் காரணமாக 'இருக்கக் கூடியவன்' என்கிறது நரசிம்ஹ மந்திரம். பரிபூரண ஆயுளை நமக்குக் கொடுக்கக் கூடியவன். இவ்வாறு நரசிம்ஹனுடைய பிரபாவத்தை மந்திர சாஸ்திரமானது விசேஷமாக எடுத்துக் காட்டுகிறது.

**ம**ந்திர சாஸ்திரமானது நரசிம்ஹனைக் கொண்டாடுவதைப் போலவே யந்திர சாஸ்திரமும் அவனைக் கொண்டாடுகிறது.

நரசிம்ஹ மந்திரத்தின் பீஜாக்ஷரங்களைக் கொண்டு, யந்திரத்தைப் பிரதிஷ்டாபனம் பண்ணுகிறோம். விசேஷமான முறையிலே அமைக்கிறோம். அந்த யந்திரத்தைச் சேதனம் பண்ணக் கூடிய - போதிக்கக் கூடிய இன்னொரு யந்திரமோ, மந்திரமோ கிடையாது. நரசிம்ஹ யந்திரத்தைச் சபிக்க முடியாது; சேதனம் பண்ணமுடியாது. அப்படி சர்வதோ பத்ரமானது அது சர்வத: பத்ரம் - எங்கும் பத்திரமாக இருக்கக் கூடியது.

நரசிம்ஹ மந்திரத்தினால் திக் பந்தனம் பண்ணி, நரசிம்ஹ மந்திரத்தினால் ஒரு யந்திரத்தைப் பிரதிஷ்டாபனம் பண்ணிவிட்டால், உள்ளே வேறு எதுவும் நுழைய முடியாது.

உக்ரம் வீரம் மஹா விஷ்ணும்ஜ்வலந்தம் ஸர்வதோமுகம் |
ந்ருசிம்ஹம் பீஷணம் பத்ரம் ம்ருத்யும்ருத்யும் நமாம்யஹம் ||

என்று பதினொரு பதங்களோடு கூடிய, அனுஷ்டுப் சந்தஸ்ஸில் அமைந்த மந்திரம். மந்திர ராஜம் என்றே அதற்குப் பெயர். மந்திரம் அனைத்துக்கும் ராஜாவாக இருக்கக் கூடியது இந்த மந்திரம். எல்லாவற்றைக் காட்டிலும் ஏற்றமுடையது. அதனால்தான் ஈச்வரனே அந்த நரசிம்ஹ மந்திரத்தை விளக்குகிறார். ஈசுவர சம்ஹிதை என்கிற சம்ஹிதையில் விளக்கிச் சொல்கிறார். மந்திர ராஜபத ஸ்தோத்திரம் என்கிற ஸ்தோத்திரமாகச் சொல்கிறார். திரிபதாசார்யர்களும் அங்கீகரித்த ஸ்தோத் திரம், நரசிம்ஹ ஸ்தோத்திரம். சில ஸ்தோத்திரங்களைச் சில பேர் அங்கீகரிப்பார்கள். வேறு சிலர் அவ்வளவு பகுமானமாகக் கொள்ள மாட்டார்கள். ஆனால் இந்த ஸ்தோத்திரம் இருக்கிறது பாருங்கள். மந்திர ராஜபத ஸ்தோத்திரம் - எல்லா ஆசார்யர்களாலும் அங்கீகரிக்கப் பட்டு, வியாக்யானங்களிலே எடுத்தாளப்பட்ட ஸ்தோத்திரம் அது. நரசிம்ஹ விபூதியிலே எல்லோருக்கும் ஈடுபாடு அதிகம்.

இங்கே ஈசுவரனே அவன் பிரபாவத்தை எடுத்துக் காட்டுகிறார்:

உக்ரம் நமாம்யஹம்
வீரம் நமாம்யஹம்
மஹாவிஷ்ணும் நமாம்யஹம்
ஜ்வலந்தம் நமாம்யஹம்
சர்வதோமுகம் நமாம்யஹம்
ந்ருசிம்ஹம் நமாம்யஹம்
பீஷணம் நமாம்யஹம்

பத்ரம் நமாம்யஹம்
ம்ருத்யு ம்ருத்யும் நமாம்யஹம்

என்று ஒன்பது பதங்களுடன் அவன் பிரபாவம் பேசி, நமாமி - அஹம் என்று இரண்டும் சேர, பதினொரு பதங்களோடு அமைந்திருக்கக் கூடிய இந்த மந்திரத்துக்கு ஈடு இணையே கிடையாது.

இந்த மந்திரத்தை ஜபம் பண்ணினால் ஏற்படக் கூடிய வைபவம், அவரவர்கள் அனுபவித்துத்தான் பார்க்க வேண்டும். ஈசுவரனாலேயே எடுத்துக்காட்டப்பட்டு, உயர்ந்ததாக இதிலே முப்பத்தியிரண்டு அக்ஷரம் இருக்கிறது.

நரசிம்ஹ தாபனீய உபநிஷத்திலே, பிரம்மாவைப் போய் எல்லா தேவதைகளும் கேட்டார்கள். "அந்த எம்பெருமானை இப்பொழுதும் நேரில் பிரத்யக்ஷமாகப் பார்க்க வேண்டுமானால், எதைச் சொல்ல வேண்டும்? எதைச் சொன்னால் அவன் நேரில் வருவான்?"

அதற்கு பிரும்மா பதில் சொல்கிறார்:

'ந்ருசிம்ஹ பூர்வ தாபனீய உபநிஷத்
ந்ருசிம்ஹ உத்தர தாபனீய உபநிஷத்

**"தாபனீய ரஹஸ்யானாம் ஸார: காமாஸிகா ஹரி:"** என்றார் சுவாமி தேசிகன்.

'அந்த நரசிம்ஹ தாபனீய உபநிஷத்தினுடைய ஸாரமாக இருக்கக் கூடியவன், காஞ்சிபுரத்திலே வேளுக்கை என்கிற க்ஷேத்திரத்தில் எழுந்தருளியிருக் கிறான்' என்றும் நரசிம்ஹனைக் கொண்டாடுகிறார் சுவாமி தேசிகன்.

"அந்த முப்பத்தியிரண்டு அக்ஷரங்களோடு கூடிய மந்திரத்தில் அவனை தியானம் பண்ணுங்கள். திரும்பத்

திரும்பச் சொல்லுங்கள். நேரில் நரசிம்ஹன் வந்து காட்சி கொடுப்பான்” என்றார் பிரும்மா.

இப்போதும் நாம் அந்த மந்திரத்தைச் சொன்னோமானால், எதிரிலே அவன் தென்படுவான். நரசிம்ஹனை நாம் பார்க்கலாம்.

முப்பத்திரண்டு அக்ஷரங்களைத் தனித்துத் தனித்துப் பிரித்து, அந்தந்த அக்ஷரங்களுக்குத் தேவதைகளைச் சொல்லி அந்தந்த தேவதைகளுக்கு அந்தர்யாமியாய், சர்வாந்தர்யாமியாய் இருக்கக்கூடியவன் நரசிம்ஹன் என்பதை உணர்ந்து, யார் நித்யம் அத்யயனம் பண்ணுகிறார்களோ, சர்வ யக்ஞ பலனும் அவர்களுக்கு ஏற்பட்டுப் போகிறது. சர்வ கர்ம பந்தங்களிலிருந்தும் அவர்கள் விடுபடுகிறார்கள்’ என்று இந்த மந்திரத்துக்குப் பலச்ருதி சொல்லப்பட்டிருக்கிறது.

நரசிம்ஹனுடைய அட்டகாசத்தைக் காட்டும் அவன் மந்திரமானது ஓரெழுத்து மந்திரமாக, முப்பத்தியிரண்டெழுத்து மந்திரமாக, நூற்றி முப்பத்தியிரண்டெழுத்து மந்திரமாக, ஆயிரத்து முப்பத்தியிரண்டு, பத்தாயிரத்து முப்பத்தியிரண்டு, ஒரு லட்சத்து நூற்றி முப்பத்தியிரண்டு... என்று விரிந்து கொண்டே போய் பலன் தரக்கூடியது. ஆகவே, நரசிம்ஹ மந்திரத்தைக் காட்டிலும் சின்ன மந்திரம் இல்லை. நரசிம்ஹ மந்திரத்தைக் காட்டிலும் பெரிய மந்திரமும் இல்லை. **‘அணோரணீயான், மஹதோ மஹீயான்’** என்று, உபநிஷத் சொன்ன மாதிரி, சின்ன மந்திரத்தினுள்ளேயும் எம்பெருமான் இருக்கிறான்; பெரிய மந்திரத்தினுள்ளேயும் அவனே இருக்கிறான். மந்திர சாஸ்திரம், யந்திர சாஸ்திரம் யாவுமே அவனுக்கு உரியவை.

கேரள தேசத்திலே பார்க்கலாம். அங்கே தாந்திரிகம் அதிகம். தந்திரத்திலே பார்த்தால், நரசிம்ஹ தந்திரம் உயர்ந்தது.

லக்ஷ்மி தேவி, அவன் (நரசிம்ஹன்) கோபத்தை அடக்கிவிடக் கூடியவள். மற்றவர்கள் நெருங்க முடியாது. அவன் யோகத்தில் இருக்கிறபோது உள்ளே நுழையவே முடியாது.

கேரளத்திலே இந்த நரசிம்ஹ மூர்த்தி இப்படி யோகத்தில் இருந்தான் எம்பெருமானுடைய வலது கை கட்டை விரல் நகமிருக்கிறது பாருங்கள்... அது எவ்வளவு தேஜஸோடு இருக்கிறது; அவ்வளவு ஏற்றமுடையது. அந்த நகத்திலேயிருந்து வரக்கூடிய தேஜஸை யாராலும் தாங்க முடியவில்லை. நக நுனியிலே இருக்கும்படியான தேஜஸ் அத்தனையையும் ஒரு கும்பத்திலே ஆகர்ஷித்தார்கள். ஆகர்ஷண மந்திரம் என்று உண்டு. அதைச் சொல்லி, பிம்பத்தில் இருக்கிற தேஜஸைக் கும்பத்தில் மாற்றிவிட முடியும். கும்பத்தில் இருக்கிற தேஜஸை பிம்பத்திடம் சேர்க்க முடியும். ஆகம சாஸ்திரத்திலே இதை நாம் பார்க்கலாம்.

அந்த முறையிலே பிம்பத்தில் இருக்கிற சக்தியை கும்பத்தில் ஆவாஹனம் பண்ணி, திரும்ப பிம்பத்தில் சேர்ப்பதற்கு முன்னால் என்ன பண்ணினார்கள்... அந்த விக்ரஹத்திலிருந்து வெளிப்படும் தேஜஸை முழுமையாய்த் தாள முடியாது என்பதற்காக, அதை பின்னம் பண்ணினார்கள் - கட்டை விரல் நுனியில் கொஞ்சம் பின்னம் பண்ணிய பிறகு, அந்த விக்ரஹத்தில் அந்த தேஜஸை உட்புகுத்தினார்கள். அதற்கப்புறம் தான் எம்பெருமானுடைய தீக்ஷ்ண்யம் குறைந்தது.

ஆகையினாலே நரசிம்ஹனுடைய வீர்யம் என்பது, கேவலம் அவதார காலத்தில் மட்டும் அல்ல... பிரதிஷ்டை பண்ணிய விக்ரஹத்திலும் வீர்யம் விசேஷமாக இருக்கிறது.

மஹா கோபத்தோடு பகவான் நரசிம்ஹனாக எழுந்தருளிருந்தபோது, 'அதோ வருகிறான் உன்னுடைய பர்த்தா! நீ போய் கோப சமனம் பண்ணவேண்டும்' என்று பிரார்த்தித்தார்கள் மஹாலக்ஷ்மியிடம். தூரத்திலே யிருந்தே பார்த்தாளாம் மஹாலக்ஷ்மி! "இவர் என் அகத்துக்காரரே அல்ல!" என்று சொல்லிவிட்டாளாம். "இப்படி அவரை நான் பார்த்ததே இல்லை" என்று கிட்டே போகவே பயப்படுகிறாள்! அவதார காலத்திலே யிருந்த உக்ர ரூபத்தை மஹாலக்ஷ்மிக்கே நெருங்க முடியவில்லை என்றால், யாரால் முடியும்?...

பரம பக்தனான பிரஹலாதனால் மட்டுமே முடிந்தது. பிரஹலாதன் நெருங்கியபோது பகவான் அனுக்கிரஹம் பண்ணினான். அவ்வளவு கோபத்திலேயும் சீற்றத்திலேயும் அருள் செய்கிறான் பிரஹலாதனுக்கு... பக்தர்களுக்குப் பராதீனன் அவன் என்பதையே இந்த அவதாரத்தில் பார்க்கிறோம்.

# 29

**பீஷணம் — பத்ரம்** - இரண்டுமே நரசிம்ஹனுக்குரிய குணங்கள்.

**பீஷண — பீகர** என்று அவனை மந்திரங்கள் அழைக்கின்றன.

பீஷணம் மேலோங்குகிறபோது அவனைக் கிட்டே நெருங்க முடியாது.

பத்ரம் மேலோங்குகிறபோது ஓடி நெருங்கி வரலாம்.

நரசிம்ஹன் இவ்வாறு பத்ரனாகவும் இருக்கிறான், பீஷணமாகவும் இருக்கிறான்.

ஹிரண்யகசிபு மாதிரி இருக்கக் கூடியவர்களுக்கு பீஷண: பிரஹலாதன் மாதிரி இருக்கக் கூடியவர்களுக்கு பத்ர:

ஹிரண்ய கசிபுவாக நாம் இருந்தால்தானே பயப்பட வேண்டும்! பிரஹலாதன் மாதிரி இருந்தால் ஏன் பயப்பட வேண்டும்! இந்த எம்பெருமான் மாதிரி தயை படைத்தவர்கள் உண்டோ? அவனை மாதிரி காருண்யம் யாருக்கு உண்டு! இந்த அவதாரத்திலேதான் காருண்யம் அதிகம்.

முப்பத்து முக்கோடி தேவர்கள் பிரார்த்திக்க ராம, லக்ஷ்மண, பரத, சத்ருக்னர்களாக நான்கு உருவிலே வந்தான்... ஆனால் ஒரு சின்னக் குழந்தை பிரார்த்திக்க,

இங்கே லோகமெல்லாம் நிறைந்தான் நரசிம்ஹன். மற்ற அவதாரங்களைக் காட்டிலும் அவன் திருமேனி அழகிலே ஈடுபட்டு 'அழகியான் தானே' என்று பாடுகிறார் திருமழிசை ஆழ்வார்.

எப்படிப்பட்டவன் அவன்...?

அழகியவன்! அந்தத் திருமேனியைப் பாருங்களேன். 'க்ஷீரம் – சர்க்கரை சேர்த்தாற்போலே...' என்கிறார் பராசர பட்டர்! அதாவது, ஒருத்தர் நித்யம் பால் (க்ஷீரம்) பருகுவார். ஒரு நாள் வெளியூர் போனார். போனால், அந்த கிருஹத்தில் பால் கொடுத்தார்கள். அவர் பிறந்தது முதல் இதுநாள் வரை அந்த மாதிரி பால் அவர் சாப்பிட்டதில்லை. ஏன்.... இப்படி, இந்த கிருஹத்திலே மட்டும் இருக்கிறது? என்று பார்த்தால், அவர்கள் பாலில் சர்க்கரை போட்டுக் கொடுத்திருக்கிறார்கள். சர்க்கரை சேர்ந்த பாலைச் சாப்பிட்டவுடனே, 'ரொம்ப ருசியாக இருக்கிறதே' என்று நினைத்தவர், 'என்ன பண்ணினீர்கள்?' என்று கேட்டார்.

"சர்க்கரை சேர்த்தோம்" என்று அந்த கிருஹத்திலே சொன்னார்கள். மறுநாளிலிருந்து, இவருக்கு ஏற்கெனவே இத்தனை நாட்களாகச் சாப்பிட்டு வந்தாரே அந்தப் பால் – சர்க்கரை போடாத பால் – பிடிக்காமல் போய்விட்டது! சர்க்கரை சேர்த்த பால்தான் பிடிக்கிறது. 'அதைக் கொண்டு வாருங்கள்!' என்கிறார் அவர். 'அதைக் கொடுத்தால்தான் சாப்பிடுவேன்' என்கிறார்!

அந்த மாதிரி... நரமும் சிம்ஹமும் சேர்ந்த நேர்த்தி இருக்கிறதே... அது பாலும் சர்க்கரையும் சேர்ந்த நேர்த்தி! இதற்கு முன் நாம் வெவ்வேறு அனுபவித்தோம். நரசிம்ஹனை ஸேவித்த பிற்பாடு அதெல்லாம் புறக் கணிக்கப்படும். பாலும் சர்க்கரையும் சேர்ந்திருக்கும்

படியான ரூபத்தைப் பார்த்த பிற்பாடு, மற்றொன்றைப் பார்க்க முடியுமா...? மற்றொன்றிலே மனது போகுமா! இவனல்லவோ பரம ருசி!' என்று மகான்கள் அத்தனை பேரும் ஈடுபடுகிறார்கள், அந்த திவ்யமான வடிவழகிலே... அதற்கு அழகான வியாக்யானமும் பண்ணுகிறாள் ருக்மிணிப் பிராட்டி. பொய்யில்லாத பெருமாள் என்று அவனைக் குறித்து அவள் கூறியிருக்கிறாள்.

**'மனதுதுக்கினியானைப் பாடவும் நீ வாய் திறவாய்'** என்று ராமனைப் பாடிய ஆண்டாளையும், ரொம்பவும் ஆகர்ஷித்தவன் நரசிம்ஹன்தான்.

**'அரிமுகன் அச்சுதன் கைமேல் என் கை வைத்து'...** என்று ஆண்டாள் அவன் கரம் பற்றியதைத்தான் பாடுகிறாள்.

ருக்மிணிப் பிராட்டி **'நரலோக மனோபிராமம்'** என்று நரசிம்ஹனை அழைக்கிறாள்.

ராமனோ, நரசிம்ஹனோ, கிருஷ்ணனோ... அந்தந்த நேரத்திலே பார்க்கிறபோது ருசிமிக்க அவதாரம்தான். இருந்தாலும், அந்தந்த அவதாரத்தைச் சொல்கிறபோது, நஹிநிந்தா நியாயத்தால், மற்றவற்றுக்கெல்லாம் குறை என்று அர்த்தம் இல்லை... பகவான், ஒவ்வொரு அவதாரத்தில் ஒவ்வொரு விதமாகக் காட்சி கொடுக்கிறான். நரசிம்ஹ அவதாரம் கொள்ளை கொண்ட மாதிரி, வேறு எந்த அவதாரமும் கொள்ளை கொள்ளவில்லை அந்த மஹாலக்ஷ்மியின் ஹ்ருதயத்தை. **'நரலோக மனோ பிராமம்'** என்றாளே ருக்மிணிப் பிராட்டி – எல்லா உயிர்களின் ஹ்ருதயத்துக்கும் ரம்மியமான ரூபம் உடையவன் நரசிம்ஹன். 'அலைத்த பேழ் வாய்' என்று அவனை வர்ணிப்பதைக் கண்டு நாம் பயப்பட வேண்டாம். சுவாமி தேசிகன் 'பிலவாய்' என்கிறார். குகை போன்ற வாய்! பிடரி மயிரும் பெரிய வாயும்...

அதையெல்லாம் பார்த்தால் பயமாக இராதா? என்றால், இல்லை! ரொம்ப ரம்மியமான மூர்த்தி அவன். கிட்டே நெருங்கி ஸேவித்தால் அவன் சுவபாவம் புரியும். தயாபூர்ண ஹ்ருதயம் அவனுடையது. அதனால்தான் அடியேனுடைய வாக்கிலே **'மட்டபல்லி நிவாஸாய மதுரானந்த ரூபிணே, மஹாயக்ஞ ஸ்வரூபாய ஸ்ரீ நரசிம்ஹாய மங்களம்'** என்று ஸ்துதித்து வரவழைத்தான்.

**மதுரானந்த ரூபிணே!** - அந்த ரூபம் இருக்கிறதே... தீர்க்கமான நாசிகை - திருத்தமான மூக்கு எம்பெருமானுக்கு. மட்டபல்லி பெருமானின் மூக்கு தீர்வையைப் போய்ப் பார்க்க வேண்டும். என்ன அழகான மூக்கு எம்பெருமானுக்கு! மூக்கு பக்கத்திலே இருக்கிற இரண்டு நேத்திரமும் விசாலமான நேத்திரம் (கண்) 'வ்ருதோத்புல்ல விசாலாக்ஷம்' - எத்தனை பக்தர்கள் வந்தாலும் கொள்ளக் கூடிய திருநேத்திரம் எம்பெருமானுக்கு. எத்தனை பேரை வேண்டுமானாலும் அவன் விசேஷமாகக் கடாக்ஷிப்பான். அப்படிப்பட்ட திவ்யமான திரு நேத்திரமுடையவன். அத்தனை அழகாக அங்கே மட்டபல்லியிலே பார்க்க லாம்.

மது வித்யாபிரகரணத்திலே ஆராதிக்கப்பட வேண்டியவன் நரசிம்ஹன். 'அவனுடைய திருவடியி லிருந்து தேன் சொட்டுகிறது' என்கிறது வேதம். அவனை உபாஸனை பண்ணுகிறபோது, அந்தத் திருவடியிலிருந்து ஒழுகும்படியான தேனிலே நாம் மூழ்க வேண்டும்.

ஆவந்தி ஹோமம் என்று விசேஷமாக நடக்கும். உபநிஷத்தில் வரக்கூடிய வாக்கு - உயர்ந்த வாக்கு அங்கே ஜபிக்கப்படும் - மதுவாகிய தேன் எம்பெருமான் நரசிம்ஹனின் திருவடியிலே ஒழுகியவாறு இருக்கிறது. அந்தத் திருப்பாதத்தைப் பாருங்கள், பற்றுங்கள் என்று... இன்றைக்கெல்லாம் அவனை ஸேவித்துக் கொண்டே இருக்கலாம்.

இதைத்தான் பீஷ்மாச்சார்யார் சஹஸ்ர நாமத்திலே **'யோகோ யோக விதாம் நேதா பிரதான புருஷேஸ்வர:'** என்றார்.

நரசிம்ஹ தாபனீய உபநிஷத்துக்கு விசேஷமாக பாஷ்யம் எழுதிய ஆதிசங்கரர், ஞானேந்த்ரியங்கள் ஐந்தினாலே விசேஷமாக மனத்தை ஒருமுகப்படுத்திய யோகிகளின் ஹ்ருதயத்திலே, விசேஷமாகத் தெரியக் கூடியவன் நரசிம்ஹன் என்கிறார்.

யம, நியம, பிராணாயாம, பிரத்யாஹார, தாரண, ஆஸன, ஸமாதி என்கிற நிலையிலே இந்த அஷ்டாங்க யோகங்களைக் கையாளும் யோகயுக்தர்களுக்கு, எம்பெருமான் விசேஷமாய்க் காட்சி கொடுப்பான். அவனைத் தங்கள் ஹ்ருதய குகையிலே அவர்கள் பார்க்கலாம்.

நம்மாழ்வார் சொல்கிறார்:

'பக்கம் நோக்கி அறியான் என்
பைந்தாமரைக் கண்ணன்'

என்று!

எம்பெருமான் அப்படி வைத்த கண் வாங்காது தன் பக்தர்களை, யோகிகளைக் கடாக்ஷிக்கிறானாம்.

திருக்குருகை காவலப்பன் என்ற யோகி, விசேஷமாக திருவேங்கடமுடையான் சன்னிதியிலே உட்கார்ந்து கொண்டு எம்பெருமானை தியானம் பண்ணிக் கொண்டிருந்தாராம். யோக தசையிலே அவர் இருக்கிறார். அப்போது, ஆளவந்தார் வம்சத்திலே - நாத முனிகள் வம்சத்திலே - தோன்றிய ஒருவர் அங்கே வந்து நின்றார். காவலப்பன் - யோகத்திலே இருக்கிறார். யோகம் என்றால் அது என்ன... எத்தகைய நிலை? பரமாத்மாவை இவர் பார்ப்பது; இவரைப் பரமாத்மா பார்ப்பது - இது இரண்டும் இந்த சரீரத்துக்குள்ளேயே நடக்கிறது. ஆகை

யினாலே, உள்ளே அந்தர்யாமியாக இருக்கும்படியான எம்பெருமானை ஜீவாத்மா பார்க்கிறது. அந்த எம்பெருமானை ஜீவாத்மா பார்க்கிற மாதிரி, பரமாத் மாவும் அவரையே பார்த்துக் கொண்டிருக்கிறான். – இது யோகிகளுக்கு உண்டான சக்தி. ஹ்ருதயத்திலே எம்பெருமானைப் பார்க்கிறார்கள். அப்படி அவர் நேருக்கு நேர் பார்த்துக் கொண்டிருக்கிறார்.

இவ்வாறு அவர் யோகத்திலே இருக்கிறார் என்று தெரிந்தவுடனே, வந்தவர் பேசாமல் அவர் பின்னாடி போய் உட்கார்ந்து கொண்டார். யோகம் கலைந்த பிற்பாடு அவரிடத்திலே பேசலாம் என்று இருந்தார்.

அப்போது என்னாயிற்று... காவலப்பரின் உள்ளுக் குள்ளே இருக்கிற எம்பெருமான், வந்தவரைத் திரும்பித் திரும்பிப் பார்க்கிறானாம்! பின்னாலே போய் உட்கார்ந்தவரைப் பார்க்கிறானாம்!

தியானத்திலே இருந்தவருக்கு உடனே புரிந்து போயிற்று...! 'பகவான் நம்மைப் பார்க்காமல் வெளியிலே பார்க்கிறான்' என்று உணர்ந்து, அவருக்குள்ளே சந்தேகம் எழுந்தது. யாரோ யோக தசையிலே கைதேர்ந்த ஒருவர் வந்திருக்கிறார்... இங்கே... அவரை பகவான் பார்க்கிறான் என்று உணர்ந்து, தான் விழித்துக் கொண்ட பிற்பாடு,

"சொட்டை நம்பி வம்சத்திலே பிறந்தவர்கள் யாரேனும் இங்கே வந்திருக்கிறார்களா?" என்று கேட்டாராம்!

கேட்டதும், "இதோ, அடியேன் வந்திருக்கிறேன்" என்று எழுந்து வந்தாராம் பின்னால் அமர்ந்திருந்தவர்.

பக்கம் நோக்கி அறியாத பரமாத்மா பக்கம் பார்க்கிறான் என்றால், அந்த யோகிகள் வம்சத்தவர்தான் வந்திருக்க வேண்டும் என்று இவர் கண்டுபிடித்து விட்டார்.

நாதமுனிகள் யோக சாஸ்திரத்திலே மஹா நிபுணர். சித்தித்ரயம் என்ற விசேஷமான அந்த விஷயத்தை விவரித்தவர்... யோகதசையிலே நம்மாழ்வாரை அவர் சாக்ஷாத்கரித்தார். அவ்வாறு சாக்ஷாத்கரித்ததாலே, இல்லாத பிரபந்தம் - மறைந்து போன பிரபந்தத்தை யெல்லாம் நம்மாழ்வார் அவருக்கு யோக தசையிலே உபதேசம் பண்ணினார். அந்த நாத முனிகளே அந்த உயர்ந்ததான திவ்யப்பிரபந்தத்தை உலகத்துக்குக் கொடுத்தார்.

காலம் வலம்புரியென்ன நற்காதல் அடியவர்க்கு
தாளம் வழங்கி தமிழ்மறை இன்னிசை தந்த வள்ளல்
மூனாம் தவநெறி ஊட்டிய நாதமுனி கழலே
நாளும் தொழுதெழுவோம் நமக்கார் நிகர் நானிலத்தே...!

என்ற நாதமுனி குறித்துப் பாடல் உண்டு.

தாளம் வழங்கி தமிழ்மறை தந்த வள்ளல் நாதமுனிகள், மேலயகத்தாழ்வான் கீழேயகத்தாழ்வான் என இரண்டு பேருக்குத் தாளத்தோடு தமிழ் மறையை உபகரித்தவர்!

அந்தத் தமிழ்மறை அவருக்கு எங்கே கிடைத்தது என்றால், யோகத்திலேயே கிடைத்துவிட்டது.

இப்படிப்பட்ட யோகிகளுக்குள்ளே ஸர்வ சிரேஷ்டர்களாக இருக்கிறார்கள் பாருங்கள்.. அவர்களுக் கெல்லாம் அதிநாயகனாய், அவர்களுக்கெல்லாம் தலைவனாய் இருக்கக் கூடியவன் எம் பெருமான். அதனால்தான் அவனும் யோக தசையிலே அமர்ந்திருக் கிறான்.

**'யோகோ யோக விதாம் நேதா'** என்பது இதையே குறிக்கிறது.

# 30

**ம**ஹா யோகி என்று பெயர் நரசிம்ஹனுக்கு. சோளிங்கபுரத்திலே போய்ப் பாருங்கள் - எப்படி உட்கார்ந்திருக்கிறான் அவன்! கார்த்திகை மாதம்தான் யோகத்தை விடுகிறான். அதனால் கார்த்திகை மாதம் அங்கே விசேஷம்.

**யோகாதிரூடா:** - ஆச்சர்யமாய், விசேஷமாய் அமர்ந் திருக்கிறான், யோக நரசிம்ஹன் சன்னதியிலே, அவ்வளவு தூரமும் நாம் படிப்படியாக ஏற வேண்டும். மகான்கள் அவனை 'மிக்கானை' என்கிறார்கள். எல்லாரைச் காட்டிலும் மேம்பட்டவன் அவன் - மழையாய் விரிந்தவன் அவன். 'அனுபவிக்க அனுபவிக்கத் தெவிட்டாத தெள்ளமுது' என்று கொண்டாடுகிறார் திருமங்கையாழ்வார் - 'மிக்கானை' என்கிறார். **'தக்கானை'** என்றும் அவனை அழைக்கிறார். அப்பேர்ப்பட்ட உயர்ந்த எம்பெருமான் அவன். உலகத்துக்கெல்லாம் தீபமாக ஜொலிக்கக் கூடியவன். அப்படிப்பட்ட உயர்ந்த எம்பெருமான், அக்காரக்கனியாக இனிக்கிறான். அனுபவிக்க அனுபவிக்கத் தெவிட்டாத தெள்ளமுது.

ஆயிரத்து முந்நூறு படியும் (சோளிங்கபுரத்தில்) ஏறி, அந்த யோக தசையிலே எம்பெருமானை ஸேவிக்க வேண்டுமானால், எவ்வளவு கஷ்டம் பாருங்கள்.... அதிலே நாமாக ஏறிவிடமுடியுமா? அவனல்லவா ஏற்றி

விடுகிறான்! நாம் இரண்டு படிகள் ஏறினால் போதும்; அவனே கொண்டுபோய் நம்மை ஏற்றிவிட்டு, திவ்ய தரிசனத்தைக் கொடுக்கிறான். யோகிகளின் ஹ்ருதயத்திலே நித்ய வாஸம் பண்ணுவதால், யோக நரசிம்ஹன் என்று பெயர் அவனுக்கு.

மட்டபள்ளியிலே இருக்கிற நரசிம்ஹனுக்கும் யோகானந்தன் என்று பெயர். சோளிங்கபுரத்தில் ஏற வேண்டும்; இங்கே மட்டபள்ளியிலே இறங்க வேண்டும்! பள்ளத்துக்குள்ளே உட்கார்ந்திருக்கிறான் மட்டப்பள்ளியிலே. சுற்றிலும் பர்வதங்கள். அதன் மத்தியிலே பள்ளத்துக்குள்ளே யுவாவாக, நித்யம் இளமை பொருந்தியவனாகக் காட்சி தருகிறான்.

அவன் மிருகமும் அல்ல; மனிதனும் அல்ல... நரம் கலந்த சிம்ஹ ரூபமாகக் காட்சி தருகிறான். 'யார் அவனை விசேஷமாக ஸ்தோத்திரம் பண்ணுகிறார்களோ, அப்படிப் பட்டவர்களுக்கு விசேஷமாக அனுக்ரஹம் பண்ணுகிறான் அவன்' என்று வேதமே சொல்கிறது. அவனை எங்கே ஸேவிக்க வேண்டும்...? 'குஹர விஹாரம் பஜே!' என்று சொல்லியிருக்கிறது. பர்வத குகைக்குள்ளே நித்ய வாஸம் பண்ணுகிறான் அவன்; அங்கே போய் அவனை ஸேவியுங்கள்!

அந்த குகைக்குள்ளே இப்படியும் அப்படியுமாக நாலடி நடக்கிறான் மட்டபள்ளி நாதன்! சிம்ஹம், அப்படி நாலடி, இப்படி நாலடி நடக்கும்.... அந்த மாதிரி இந்த மட்டபள்ளி குகைக்குள்ளே இந்த நரசிம்ஹன் குறுக்கும் நெடுக்கும் செல்கிறான். அந்த அழகை நாம் ஸேவிக்க முடியும்.

அஹோபிலம் என்ற க்ஷேத்திரத்திலேயும் நரசிம்ஹன் குகைக்குள்ளே பிரகாசிக்கிறான். 'அஹோ - பிலம்' (பிலம்

- குகை) குகை என்றே அந்த ஊருக்குப் பெயர்! அப்படிப்பட்ட திவ்ய க்ஷேத்திரம் அது. யாதகிரி என்ற க்ஷேத்திரத்தில், பர்வத குகைக்குள்ளே நித்ய வாஸம் பண்ணுகிறான். நம் ஹ்ருதய குகைக்குள்ளேயும் அவனே நித்யவாஸம் பண்ணுகிறான்!

அதனால்தான் ஆண்டாளும்,

'மாரி மலை முழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்
சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து
வேரிமயிர் பொங்க எப்பாடும் பேர்ந்துதறி
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்
போதருமா போலேநீ பூவைப் பூவண்ணா! உன்
கோயில் நின்றிங்ஙனே போந்தருளிக் கோப்புடைய
சீரிய சிங்காசனத் திருந்து யாம்வந்த
காரியம் ஆராய்ந்து அருளேலோர் எம்பாவாய்!'

என்று திருப்பாவையிலே கிருஷ்ணனைக் குறித்து, அவனை ஸேவித்து, அவனிடத்திலே பறை பெறுவதாகப் பாசுரங்கள் பாடுகிறபோதுகூட, நாம் கவனித்துப் பார்த்தோமானால், யாரிடத்திலே பிரார்த்தனை பண்ணுகிறாள் அவள்...?

'உள்ளே நீ இருக்க வேண்டாம். குகையை விட்டு வெளியிலே வா... வெளியிலே வந்து உட்கார்ந்து கொள் எம்பெருமானே, நரசிம்ஹனே... யான் வந்த காரியம் ஆராய்ந்து அருள்பவன் நீதான்...' என்கிறாள். ஆகையினாலே, நம் பிரார்த்தனை யாருடைய திருவடியிலே இருக்க வேண்டும் என்றால், நரசிம்ஹன் திருவடியிலே இருக்க வேண்டும். 'நம் காரியத்தை ஆராய்ந்து அருள்பவன் அவன் ஒருவனே' என்று திருப்பாவையிலே ஆண்டாள் அழகாகக் காட்டித் தருகிறாள்.

'மாரிமலை முழைஞ்சில்' என்ற பாசுரமே வேத வாக்கியம்தான். வேத வாக்கியத்தை மனத்தில் கொண்டு தான் ஆண்டாள் நரசிம்ஹனை தியானம் பண்ணுகிறாள்.

'ஏற்றமுடையவன், யோகிகளுக்குள்ளே, தலை சிறந்தவன் அவன் - எம்பெருமான், யோகாதி ரூடனாக அங்கே காட்சி அளிக்கிறான்' என்று ஆண்டாள் பாடியவனே, இன்று அதே தோற்றத்தில், குணத்தில் அர்ச்சாவதாரத்திலே விளங்குகிறான்.

'யோகோ யோக விதாம் நேதா...' என்பது அந்த நரசிம்ஹனைக் குறிப்பதைப் பார்த்தோம். 'ப்ரதான புருசேச்வர!' - என்பது யாரைக் குறிக்கும்...?

பிரதானம் என்று சொன்னால் இந்தப் பிரக்ருதி. இதிலே இருக்கும்படியான 24 தத்துவங்கள். பிரக்ருதி, மகத் முதலான 24 தத்துவங்கள்.

கபில வாஸுதேவனாக அவதாரம் பண்ணி, தன் தாயார் தேவபூதிக்கு இந்த தத்துவங்களை எம்பெருமான் எடுத்துச் சொல்கிறான்.

நாராயண பட்டத்திரி கேட்கிறார் எம்பெருமானை: 'நீ கபிலாவதாரம் பண்ணி இருபத்துநாலு தத்துவங் களையும் விளக்கினாயாமே, அது வாஸ்தவமா?" என்று கேட்கிறார்!

அவ்வாறு விளக்கப்பட்ட இருபத்து நாலு தத்துவங்கள் என்னென்ன...?

பிரகிருதி, மகத், அகங்காரம் - இந்த மூன்று முதல் தத்துவங்கள் இவற்றிலிருந்து பஞ்சதன்மாத்ரைகள் உண்டாகின்றன. அந்த பஞ்சதன்மாத்ரைகளிலிருந்து பஞ்சபூதங்கள் உண்டாகின்றன. அந்த பஞ்சபூதங்களி லிருந்து கர்மேந்திரியங்க்ள் ஐந்து உண்டாயின.

ஞானேந்த்ரியங்கள் ஐந்து, மனது ஒன்று... என, ஆகமொத்தம் பதினொரு இந்த்ரியங்கள் உண்டாயின.

இதைக் கவனித்துப் பார்த்தோமானால், பஞ்ச பூதங்கள் முழுதாக உருவாகாத நிலை - இடைப்பட்ட நிலை என்று ஒன்று உண்டு.

பாலை நாம் தோய்த்து வைக்கிறோம் - இரவு. அது மறுநாள் பூரணமாக, கட்டிக் கட்டியாகத் தயிராகி விடுகிறது. நடுவிலே, பாதி ராத்திரியிலே அதைத் திறந்து பார்த்தால், இளந்தோய்ச்சலாக இருக்கும். பூரணமாக கெட்டியாக இராது.

இப்படிப்பட்ட இளம் தோய்ச்சல் நிலை இருக்கிறது பாருங்கள்... இதைத்தான் தன்மாத்ரம் என்று சொல்வது. இவ்வாறு,

சப்த தன்மாத்திரத்திலிருந்து ஆகாயம் உண்டாயிற்று,

ஸ்பரிச தன்மாத்திரத்திலிருந்து வாயு உண்டாயிற்று,

ரூப தன்மாத்திரத்திலிருந்து அக்னி உண்டாயிற்று,

ரஸ தன்மாத்திரத்திலிருந்து ஜலம் உண்டாயிற்று,

கந்த (மணம்) தன்மாத்திரத்திலிருந்து ப்ருத்வி (மண்) உண்டாயிற்று.

ஆக, தன்மாத்திரமென்பது ஐந்து, அதிலிருந்து தோன்றியது பஞ்சபூதங்கள்.

ஆக முதல் மூன்று தத்வங்கள் + தன்மாத்திரங்கள் + பஞ்ச பூதங்கள் = 13,

இவற்றோடு பதினொரு இந்த்ரியங்கள். (கர்மேந்த்ரியங்கள் ஐந்து, ஞானேந்த்ரியங்கள் ஐந்து, அவை அனைத்தையும் ஆட்டிப் படைக்கக் கூடிய மனம் ஒன்று).

பதிமூன்று + பதினொன்று = இருபத்திநாலு.

இந்த இருபத்து நாலையும் சேர்த்துதான் பிரக்ருதி தத்துவம் என்று சொல்வது. இதற்குப் 'பிரதானம்' என்று பெயர்.

இந்த இருபத்து நாலைக் காட்டிலும் வேறான புருஷன், ஜீவாத்மா! இந்த ஜீவாத்மா, இருபத்தைந்தாவது தத்துவம்.

**பிரதான புருஷேஸ்வர:** என்பதில் பிரதான என்பது, இருபத்துநாலு தத்துவங்களையும், புருஷேஸ்வர: என்பது ஜீவாத்மாவையும் குறிக்கிறது. இந்த இரண்டுக்கும் ஈச்வரன் யார் என்று கேட்டால், அவன் தான் **'நரசிம்ஹ வபு: ஸ்ரீமான்'** – என்கிற நரசிம்ஹன்! இவைகளுக்கெல்லாம் அந்தர்யாமி யாக இருக்கக்கூடியவன், அவதார காலத்திலே சகல வஸ்துக்களிலேயும் அவன் அந்தர்யாமியாக இருக்கக் கூடியதனாலே, அவன் **'நாரசிம்ஹ வபு: ஸ்ரீமான்!'**

அவசரத் திருக்கோலம் என்று பெயர் இந்த அவதாரத்துக்கு! 'இந்தக் குழந்தை கூப்பிட்டுவிட்டதே, என்ன சொல்லுமோ?' என்று அதி வேகமாக வந்து சேர்ந்தவன் அல்லவா!

ராமாவதாரத்திலே, 'நமக்கு யார் தந்தையாக இருக்கக் கூடியவன்...?' என்று நிதானமாகப் பார்த்து, தசரதனை வரித்து, மெதுவாக அவதாரம் பண்ணினான், பன்னிரண்டு மாதங்கள் கழித்து!

அதே மாதிரி வஸுதேவர் கிருஹத்திலே வந்து பரமாத்மா அவதரிக்கப் போகிறான் என்பதை முன் கூட்டியே சொன்னான். தேவகியின் கர்பத்திலே வாஸம் பண்ணினான்.

இந்த நரசிம்ஹ அவதாரத்திலே இதற்கெல்லாம் அவகாசமே இல்லை!

அப்பா யார்? அம்மா யார்? என்றெல்லாம் யோசனை பண்ணவில்லை. 'வித்யுத்!' என்று மின்னல் போல் அவதாரம் பண்ணினான். அதிவேகம் அந்த அவதாரத்திலே...

வேஷமும் வேகம்; அவதாரமும் வேகம். அவசரத் திருக்கோலம் என்று ஆசார்யர்கள் பணித்தார்கள். சில சமயங்களில். நாம் அவசரமாகப் பண்ணுகிற காரியம் ரொம்ப ரம்மியமாக அமையும்.

சமையல் செய்வதற்காக காய்கறிகளெல்லாம் வாங்கி வைத்து, ரொம்ப நன்றாகப் பண்ணவேண்டும், அவர் சாப்பிட வரப்போகிறார் என்று ஏகமாக ஏற்பாடு பண்ணி, கடைசியிலே பார்த்தால் ஒரே உப்பாக இருக்கும்! அல்லது கார்ரமாகவோ புளிப்பாகவோ இருக்கும்! இல்லையானால் உப்பே போட்டிருக்க மாட்டார்கள்.

ஏகமாக முன்னேற்பாடு பண்ணிய பிறகு இப்படி அமையும். ஆனால், ஒருத்தர் திடீரென்று ஊரிலிருந்து வருவார்... மத்தியானம் இரண்டு மணிக்கு! அப்போது சாமானியமாக ஒரு சின்ன தளிகை – சின்ன சமையல் – பண்ணினால், அது பரம ருசியாக இருக்கும்!

ஆகவே திடீரென்று, அவசரத்திலே பண்ணக் கூடிய தளிகை அவ்வளவு ரம்மியமாக இருக்கிற மாதிரி, (பார்த்துப் பார்த்து நிதானமாக வராமல்) அவசரமாக, சாமானியமாக வந்த அவதாரமும் சிறப்பு. இந்த அவசரத் திருக்கோலத்துக்கு வந்த அழகு, அதை இன்னொரு விதமாகவும் முக்கூர் அழகியசிங்கர் சொல்லுவார். ஃபோட்டோ எடுப்பதற்காக ஏகமாக அலங்காரம் பண்ணிக் கொண்டோமானால், அப்போது எடுக்கிற போட்டோ நன்றாகவே இராது; வெயிலில் வியர்த்துக்

கொட்டிக் கொண்டு வருவோம்... அப்போது எடுக்கிற போட்டோ பிரமாதமாக அமையும்!

ஆகவே, நரசிம்ஹ அவதாரம் திடீரென்று தோன்றிய அவதாரம். பிரஹலாதன் வார்த்தையை ரக்ஷிப்பதற்காக முன்னேற்பாடில்லாமல் ஏற்பட்டது.

நரசிம்ஹ அவதாரம் பிரஹலாதனை ரக்ஷிப்பதற்காகவா, அல்லது பிரஹலாதனுடைய வார்த்தையை ரக்ஷிப்பதற்காகவா என்று கேட்டால், பிரஹலாதனை ரக்ஷிப்பதற்காக அல்ல...! அவன் வார்த்தையை ரக்ஷிப்பதற்காகத்தான்.

# 31

பிரஹலாதனைப் படுகுழியிலே தள்ளினான் ஹிரண்யகசிபு.

'விறகடுக்கி, ஆழக் குழிவெட்டி, ஆங்கனயே தீமூட்டி...'

தீக்குழியில் தள்ளி விடுகிறான். நெருப்பிலே பிடித்துத் தள்ளி விடுகிறதைப் பார்க்கிறபோது, ஹிரண்ய கசிபுவுக்குக் கண்ணிலே தாரை தாரையாக ஜலம் வருகிறது...!

"புகை அடிக்கிறாற் போலிருக்கிறது... கொஞ்சம் தூரம் போய் நில்லுங்களேன்" என்கிறான் ஒருவன் வந்து!

"புகையினால் இல்லை... குழந்தையை அக்னியிலே தள்ளினேனே, அந்தப் புத்திர சோகம் என்னைப் பிடித்து உலுக்குகிறது" என்றான் ஹிரண்யன்.

யக்ஞம் பண்ணுகிற எஜமானரை அக்னியானது ரக்ஷிக்க வேண்டும். எப்படி ரக்ஷிக்க வேண்டும் என்று கேட்டால், 'ஒரு தந்தை தன் தனயனை எப்படி ரக்ஷிப்பானோ, ஒரு தந்தைக்குத் தனயனுடைய முன்னேற்றத்தில் எப்படி சந்தோஷம் ஏற்படுமோ, அந்த மாதிரி நீ ரக்ஷிக்க வேண்டும்' என்பது பிரார்த்தனை.

ஹிரண்யகசிபு துஷ்டனாக இருந்தாலும், குழந்தையைத் தள்ளுகிறபோது அவனால் தாள முடியவில்லை.

உள்ளே, அக்னிக்குள்ளே போன குழந்தை, 'தாதா!' என்று கூப்பிடுகிறது! 'தாதா' என்றால் சம்ஸ்கிருதத்திலே அப்பா என்று அர்த்தம். "அப்பா! எனக்கு அப்பா கிடைத்த மாதிரி, இந்த உலகத்திலே யாருக்குக் கிடைப்பார்! இவ்வளவு அழகான படுக்கை. ஆயிரம் தாமரை மலர்களால் அடுக்கப்பட்ட படுக்கை... ஜில்லென்று காற்று அடிக்கிறது இங்கே! சந்தனக் குழம்புக்குள்ளே கையை விட்ட மாதிரி ஜிலுஜிலுவென்று இருக்கிறது... அப்பா! உனக்கு இதிலே ஏதாவது சந்தேகமாயிருந்தால், நீ கொஞ்சம் உள்ளே வா!" என்கிறது அந்தக் குழந்தை.

எங்கேயோ நின்று கொண்டிருக்கிறான் ஹிரண்ய கசிபு. கிட்டே நெருங்க முடியவில்லை. குழந்தையானால் உள்ளேயிருந்து எழுந்து வெளியே வருகிறது! அப்போது பரமாத்மா அந்தக் குழந்தையை ரக்ஷிக்க வில்லையா?

சர்ப்பங்களையெல்லாம் விட்டுக் கடிக்கச் சொன்னான் ஹிரண்யன். எல்லா சர்ப்பங்களும் கிட்டே வருகின்றன... அப்போது கருட பகவானை உபாஸித்தான் பிரஹலாதன். கருட மந்திரம் சொல்கிறான். அப்படி கருட மந்திரத்தைச் சொன்னால், விஷ ஜந்துக்கள் கிட்டே வருமோ! அந்த சர்ப்பங்களுக்கெல்லாம் பிரஹலாதனைப் பார்த்தாலே கருடன் மாதிரி இருக்கிறது! கிட்டே போகவே முடியவில்லை!

ஹிரண்ய கசிபுவானால் பாம்புகளைப் பயமுறுத்து கிறான். சில பாம்புகள் முன்னே போய்க் கடித்தன. கடித்ததும் அவற்றின் பற்கள் மொத்தம் பொடிப் பொடியாகக் கீழே விழுந்துவிட்டன. தலையிலே இருக்கிற மாணிக்கக் கல் சிதறிப் போய் கீழே விழுந்து விட்டது. அது படமெடுத்தால், ஒரே நடுக்கம்! நடுங்கிப் போய் ஹிரண்ய கசிபுவிடம் வந்து "பிரபோ! உங்கள்

பிள்ளையைக் கடிப்பதைத் தவிர வேறு எதையாவது சொல்லுங்கள், இதைப் பண்ண மாட்டோம்" என்கின்றன பாம்புகள்!

எட்டு திக்கணங்களையும் விட்டுத் துகைக்கச் சொன்னான் பிரஹ்லாதனை. அப்போது பகவான் சிம்ஹ பாவனை பாவித்திருந்தார். பிரஹ்லாதனே சிம்ஹமாகக் காட்சி அளித்தான். திக்கணங்கள் போய் தந்தங்களால் அவனைப் புடைத்த போது, அந்த தந்தங்களே முறிந்து விழுந்தன. அப்போது பிரஹ்லாதனை பகவான் ரக்ஷிக்க வில்லையா?

ஒரு சைலத்தினுடைய அக்ர பாகத்துக்கு (மலையி னுடைய உச்சிக்கு) அழைத்துப் போய், அங்கேயிருந்து கீழே பிடித்துத் தள்ளிவிட்டார்கள், யம படர்களைப் போன்ற கிங்கரர்கள். அந்தக் குழந்தை கீழே விழுந்து கொண்டே யிருக்கிறது. அப்படி விழுந்து கொண்டேயிருக்கிறபோது கூட, அதற்கு தான் கீழே விழுந்து சின்னாபின்னமாகிச் சிதறிப் போய் விடுவோம் என்கிற பயமே ஏற்படவில்லை. நமக்கு உள்ளுக்குள்ளே அந்தர்யாமியாக பகவான் உட்கார்ந்திருக்கிறானே! அவனுக்கு அடிபட்டுவிடப் போகிறதே! என்று இரண்டு கைகளாலேயும் தன் ஹ்ருதயத்தை கெட்டியாகப் பிடித்துக் கொண்டே விழுகிறதாம் அந்தக் குழந்தை!

அப்போது பூமாதா பார்த்தாள்... நம் பர்த்தாவை இந்தக் குழந்தை இவ்வளவு ஜாக்கிரதையாக ரக்ஷிக்கிறதே... இந்தக் குழந்தையை நாம் ரக்ஷிக்க வேண்டாமா! என்று பூமாதா அப்படியே குழந்தையைக் கையிலே ஏந்திக் கொண்டு, மெள்ள கீழே விட்டாள். அது கிரி பிரதக்ஷிணம் பண்ணிக் கொண்டு நேரே அதன் அப்பாவிடம் போய் நின்றது!

"அப்பா, நான் வந்துவிட்டேன்..." என்றது. பிடித்துத் தள்ளியவர்கள் திரும்பி வருவதற்கு முன்னால் குழந்தை வந்து நிற்கிறது!

நடுங்கிப் போய்விட்டான் அவன்! தன் பத்னி கயாதுவை அழைத்தான். அழைத்து, கார்க்கோடக சர்ப்பத்தின் விஷத்தை அந்தக் குழந்தைக்குக் கொடுக்கச் சொன்னான்.

எந்தத் தாயாராவது குழந்தைக்கு விஷத்தைக் கொடுப்பாளா...? அதுவும் கார்க்கோடக சர்ப்பத்தின் விஷம்!

நாமக்கல் என்ற நரஸிம்ஹ க்ஷேத்திரத்திலே பகவானுக்குக் கார்க்கோடக சயனம். பகவான் ரங்கநாதன் கார்க்கோடக சர்ப்பத்தின் மேல் படுத்துக் கொண்டிருக் கிறான்; ஆதிசேஷனின் மேல் அல்ல. ஏனென்றால், அந்த ஊரில் கார்க்கோடகன் தபஸ் பண்ண, பகவான் அவனை என்ன வேண்டுமென்று கேட்டான். 'ஆதிசேஷன் மேல் படுத்துக் கொண்டிருக்கிற மாதிரி, என் மேலேயும் நீ படுத்துக்கொள்ள வேண்டும்' என்று கேட்டுக் கொண்டது அது. ஆகவே அங்கே கார்க்கோடக சயனம்.

இந்தப் பாம்பு வரும் வழி மொத்தம் கன்னங்கரே லென்று இருக்கும். அது வந்த வழியிலே காற்றுப் பட்டு, அந்தக் காற்றை நாம் சுவாசித்தால்கூட பிராணன் போய் விடும். அவ்வளவு மகா விஷம் நிரம்பிய கார்க்கோடக சர்ப்பத்தின் விஷத்தைக் கொடு, என்று கயாதுவைக் கூப்பிட்டுச் சொல்கிறான் ஹிரண்ய கசிபு.

அவள் நடுங்குகிறாள். அந்தக் குழந்தை சொல்கிறது: 'அம்மா! நீ ஏன் பயப்படுகிறாய்? பர்த்தாவினுடைய ஆக்ஞையை நீ பரிபாலனம் பண்ணு...' என்கிறது.

“அனுகூலனாக சர்வேச்வரன் ஜகன்னாதன் என்னுள்ளே இருக்கிறபோது, நான் ஏன் பயப்பட வேண்டும்? விஷமே இருக்கட்டுமே... எதற்காக பயப்பட வேண்டும்?” என்று பிரஹலாதன் கேட்கிறான்.

ஸ்வாமி தேசிகன் சுதர்ஷனாஷ்டகத்துக்குப் பலச்ருதி சொல்கிறபோது சொல்கிறார்:

‘விஷமே இருக்கட்டுமே... சுதர்ஷனாஷ்டகத்தைச் சொன்னால் விஷம் என்ன பண்ணும்?” என்கிறார்.

அந்த மாதிரி, பிரஹலாதன் சொல்கிறான்:

‘அனுகூலே ஜகன்னாதே விஷம் ஸ்யாத் மமஸுவ்ருத |
அனுகூலே ஜகன்னாதே விஷம்பத்யம் பவேத் மம: ||’

– அந்த விஷமே எனக்குப் பத்தியமாக இருக்கட்டும் என்று சொல்லி, ‘நாராயணா!’ என்று சொல்லிக் கொண்டே விஷத்தைச் சாப்பிட்டுவிட்டது குழந்தை.

நாமாம்ருதத்தாலே அந்தக் குழந்தையைக் காத்தான் பகவான். விஷமும் பத்தியமாக ஜீரணமாகிவிட்டது குழந்தைக்கு.

நடுங்கிப் போய்விட்டான் ஹிரண்யன். அவனால் ஒன்றும் பண்ணமுடியவில்லை.

சம்பராஸுரனுடைய மாயையைப் பிரயோகம் பண்ணி, உக்கிரமான காற்றைக் குழந்தையின் உடம்பு மேலே செலுத்தி, அதன் உடலையே வற்றச் செய்ய வேண்டும் என்று பார்க்கிறான்... முடியவில்லை!

பெரிய கல்லைக் குழந்தையின் உடம்பில் கட்டி, சமுத்திரத்திலே விட வேண்டும் என்று பார்க்கிறான், அதுவும் முடியவில்லை!

அப்போதெல்லாம் பரமாத்மா வந்து பிரஹலா 5னை ரக்ஷிக்கவில்லையா?

ஆகவே பகவான் நரசிம்ஹனாக ஆவிர்ப்ப்வித்தது என்பது பிரஹலாதனை ரக்ஷிப்பதற்காக அல்ல.- எத்தனையோ சந்தர்ப்பத்திலே நேரிலே தோன்றாமலேயே ரக்ஷித்தவன், கடைசியில் நேரில் நரசிம்ஹமாகத் தோன்றியது எதற்காக...? அந்தப் பிரஹலாதனின் வார்த்தையைக் காப்பதற்காகவேயன்றி வேறில்லை.

குழந்தை சொன்னதைக் காட்ட வேண்டும் என்பதற்காக, எல்லா இடத்திலும் அவனே நீக்கமற நிறைந்தான். ஒரு ஸ்தம்பத்திலேயிருந்து தான் வந்தான் என்றாலும், உலகம் முழுவதும் நிறைந்திருந்தான் அவன்! ஆகவே, உலகம் முழுவதும் யாரைத் தன்னுள்ளே வைத்துக் கொண்டிருக்கிறது என்று கேட்டால், நரசிம்ஹனைத்தான். உலகமே நரசிம்ஹ கர்ப்பம். எங்கு தட்டினாலும் அவன் வருவான்! தூணிலிருந்துதான் வந்தான். ஆனால் எங்கு தட்டினாலும் அங்கிருந்து வருவதற்குச் சித்தமாக அவன் காத்திருந்தான்.

இப்போதும்கூட அவன் அப்படித்தான் நிறைந்திருக் கிறான் என்கிறார் சுவாமி தேசிகன்.

பிரஹலாதன் வார்த்தையைக் காப்பாற்றுவதற்காக மட்டுமல்ல... இன்னொருத்தரின் வாக்கைக் காப்பதற் காகவும், இவ்வாறு எங்கும் நிறைந்து நின்றான் பரமாத்மா...

⁝

# 32

பிரஹலாதனின் வார்த்தையைக் காப்பதற்காக நரசிம்ஹனாக அவதரித்தான் எம்பெருமான். அந்த அவதாரத்திலே அவன் பிரும்மாவின் வார்த்தையையும் காப்பாற்றினான்... எப்படி...?

பிரும்மாதானே ஹிரண்ய கசிபுவுக்கு வரம் கொடுத்தார். 'அந்த வரம் எப்படியானாலும் இருக்கட்டும்; நான் எப்படி வேண்டுமானாலும் கொல்லுவேன்' என்று பகவான் கொன்றிருப்பானானால், அவனை யார் தடுக்க முடியும்?

இருந்தாலும் பிரும்மா கொடுத்த வரத்துக்கு எந்த பங்கமும் இல்லாமல் பகவான் அவதாரம் பண்ணினான். பிரும்மா கொடுத்த வரம் உலகிலே செல்லாது என்று ஏற்பட்டுப் போயிற்றென்றால், பிரும்மாவை யாராவது ஸேவிப்பார்களா! இப்போது பிரும்மாவை ஸேவிப் பார்கள் குறைவு இந்த உலகத்திலே!

பிரும்மாவினுடைய மந்திரத்தை மனத்திலேதான் சொல்ல வேண்டும். வாக் தேவதையினுடைய சாபம் பிரும்மாவுக்கு இருக்கிறது. பிரும்மாவுக்கு அதிகமாக பூஜை நடப்பதில்லை உலகத்தில். கோயிலும் அதிகமாகக் கிடையாது.

ராமாயணம் நாற்பத்தெட்டு நாட்கள் சொல்கிறார் ஒருவர் - உபன்யாஸகர். . பட்டாபிஷேகம் முடிந்து

போய்விட்டது. ஊருக்குக் கிளம்புகிறார். அப்போதுதான் ஒருத்தர் வந்து, "சுவாமி, இத்தனை நாட்களாக உங்களோடு பேசுவதற்கே முடியவில்லை; ஊருக்குக் கிளம்பி விட்டீர்களா?" என்றார். "ரொம்ப நாட்களாக எனக்கு ஒரு சந்தேகம். நித்யம் உங்களைக் கேட்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். முடியவில்லை. அதோடு இந்த நாற்பத்தெட்டு நாட்களில் புதிதாக ஒரு சந்தேகமும் வந்திருக்கிறது. அதையும் கேட்க வேண்டும். கேட்கட்டுமா...?" என்றார்.

ஊருக்குக் கிளம்பியவர் மூட்டையைக் கீழே வைத்துவிட்டார்! "கேளும்" என்றார்.

"ரொம்ப நாட்களாக இருந்த சந்தேகம் என்ன...?" அவர் கேட்கிறார்.

"பிரும்மாவுக்கு அதிகமாக பூஜைகள் நடப்பது இல்லையே... கோயிலும் இல்லையே... ஏன்... – இது ரொம்ப நாட்களாக இருக்கும் சந்தேகம்...! நாற்பத்தெட்டு நாட்களாக நீர் சொல்லிக் கொண்டேயிருந்தீர். 'ராமன், ராமன், ராமன்' என்று நிறையச் சொன்னீர். 'ராவணன், ராவணன், ராவணன்' என்றும் சொன்னீர். நடுவிலே 'ராக்ஷஸன், ராக்ஷஸன், ராக்ஷஸன்' என்று சொன்னீர். இதிலே ராமன் ராக்ஷஸனா? ராவணன் ராக்ஷஸனா?" என்று கேட்டார் இவர்.

நடுநடுங்கிப் போய்விட்டார் உபன்யாஸம் பண்ணியவர்! நன்றாக உட்கார்ந்துவிட்டார். ஊருக்கே கிளம்பவில்லை.

"நீர் கேட்ட கேள்வியிலேயே பதிலும் இருக்கிறது" என்று சொன்னார். "உன்னையும் படைத்து என்னையும் படைத்து, உன் எதிரிலே நாற்பத்தெட்டு நாள் நான் ராமாயணம் சொல்லியும், ராமன் ராக்ஷஸனா, ராவணன்

ராக்ஷஸனா என்பது உமக்குத் தெரியவில்லை. அவ்வளவு அழகாக நான் கதை சொல்லியிருக்கிறேன். நம் இரண்டு பேரையும் படைத்ததனாலேதான் பிரும்மாவுக்குக் கோயில் இல்லாமல் போய்விட்டது" என்றார்.

ஆகையினால், இந்த மாதிரி பிரும்மாவை நாம் பழிக்கலாகாது அல்லவா... அதற்காகத்தான் பகவான், பாருங்கள், கருணையோடு அவதரித்தான். பிரும்மா அவனுக்கு அடியவன்தான். ஆனபோதிலும், பிரும்மா வுக்கு எந்த கெட்டப் பெயரும் வந்துவிடக் கூடாது; அவன் கொடுத்த வாக்கு பலிக்க வேண்டும் என்று அவதரித்தான். பிரும்மா வரம் கொடுத்தால் செல்லாது என்று ஆகிவிட்டால், உலகிலே யாரும் மதிக்க மாட்டார்கள். அதனால், பிரும்மா கொடுத்த வாக்குக்கு பங்கமில்லாமல் பரமாத்மா ஆவிர்ப்பவித்தான். ஹிரண்ய கசிபு கேட்ட வரத்துக்கும் பங்கமில்லாமல் அத்யாஸ்சர்யமான முறையிலே... 'ராத்திரியில் கூடாது, பகலில் கூடாது, கீழே கூடாது, மேலே கூடாது, உள்ளே கூடாது, வெளியே கூடாது, மறைந்த வஸ்துவினால் மரணம் கூடாது, உணர்ந்த வஸ்துவினாலும் மரணம் கூடாது' என்று ஹிரண்ய கசிபு கேட்டான்.

பகவான், சாயங்கால வேளையிலே, வாசல் படியிலே, தன் மடியிலேயே வைத்துக்கொண்டு ஹிரண்யனை முடித்தான்!

எவ்வளவு அகடிதகடனா சாமர்த்தியம்? இந்த நரசிம்ஹ அவதாரத்திலே! அவ்வளவு ஏற்றமுடையவனாக அவதரித்தான், பிரும்மாவினுடைய வார்த்தையைக் காப்பதற்காக!

இந்தப் பிரஹலாதனுக்காக பகவான் நரசிம்ஹ அவதாரம் எடுத்தானே, அவன் சொல் காக்க, நரம் கலந்த



சிங்கமாக வந்தானே... அந்த பிரஹலாதனுக்கு எவ்வாறு அவ்வளவு பக்தி வந்தது?

நாரதர் இருக்கிறாரே... அவர் கயாதுவைத் தம் ஆசிரமத்துக்கு அழைத்துக்கொண்டு வந்து, பக்தியினுடைய பிரபாவத்தை எடுத்துச் சொல்கிறார்: பூரண கர்ப்பதியான அவள், அவர் சொல்வதையெல்லாம் கேட்டுக் கொண்டே தூங்கிப் போய்விடுவாள். ஆனால் அவள் வயிற்றுக்குள்ளே இருக்கிற சிசு, 'உம் உம்' என்று

'உம்' கொட்டியவாறு, நாரதர் சொல்வதையெல்லாம் கேட்டுக் கொண்டேயிருக்குமாம். நாரதருக்கு ரொம்ப உத்ஸாகம்! இந்தக் குழந்தை கேட்கிறதே என்று அவரும் சொல்கிறார்:

அதனால்தான் சீமந்தம் என்று கர்ப்பவதியான பெண்களுக்கு, ஏழாவது எட்டாவது மாதம் பண்ணுகிற நிலையிலே, பகவத் சரித்திரத்தை அவர்கள் படிக்க வேண்டும்; கேட்க வேண்டும் என்றெல்லாம் சொல்லி யிருக்கிறது. ஏனென்றால் உள்ளுக்குள்ளே இருக்கிற சிசுவானது பிறக்கிறபோதே பகவத் வாஸனையுடன், நல்ல புத்தியுடன் பிறக்க, அவ்வாறு நல்ல விஷயங்களைக் கேட்க வேண்டும். அதனால்தான், சீமந்தத்திலே உதகசாந்தி என்ற மந்திரத்தை வைத்தார்கள் பெரியோர்கள். அந்த மந்திரத்தை சிரவணம் பண்ணினால், குழந்தை உள்ளேயிருந்தபடி கேட்கிறது. அவ்வாறு எட்டாவது மாதத்தில் கேட்டால், நற்பண்புகளும் உயர்ந்த பக்தியும் வேதத்தில் பற்றும் ஏற்படும்.

அதனால்தான் பிரஹலாதன் எம்பெருமான் குறித்த ஞானத்தைக் கருவிலேயே திருவாக அடைந்தான். ஞான, பக்தி, வைராக்கியத்தை முன்பு வைத்து, அதை அனுபவிப்பதற்கென்றே பின்பு பிறந்தான் இந்த பிரஹலாதன். அப்படி உயர்ந்த ரீதியிலே, கர்ப்பத்தில் இருந்தபோது, நாரதரிடத்திலே பத்தாயிரம் வருட காலம் பகவத் குணத்தைக் கேட்டு அனுபவித்தான். ஆகவே பிரஹலாதன் பிறக்கிறபோது அவனுக்கு வயது என்னவென்று கேட்டால், பத்தாயிரம் வயது!

பத்தாயிரம் ஆண்டுகள் கர்ப்பத்தில் இருந்து, அவ்வளவையும் கேட்டு, இனிமேல் அவன் கேட்க வேண்டியது ஒன்றுமே இல்லை; கற்க வேண்டியது

எதுவுமே இல்லை என்ற நிலையிலே பூரணமாய்க் கற்றுக் கொண்டான்.

பிறந்த பிறகு வெறுமனே அவனை குருகுலத்துக்கு அனுப்பி வைத்தான் ஹிரண்ய கசிபு. குருகுலத்துக்குப் போய் அவன் கற்பதற்கு என்ன இருக்கிறது! சர்வத்தையும் கற்றுக்கொண்டு பிறந்தது குழந்தை. எதைக் கற்க வேண்டுமோ அதைக் கற்றுக் கொண்டிருந்தது.

ஆகையினாலே, நாரதருடைய வார்த்தையைக் காப்பதற்காகவும், அத்யத்புத ரூபனாக எல்லாவற்றிலும் நிறைந்தவன் பரமாத்மா.

நரசிம்ஹ ரூபமானது அத்யத்புத ரூபம் என்பதிலே, எல்லா மஹான்களும் ஒத்துப் போய் ஈடுபடுகிறார்கள்.

ஸ்ரீமத் பாகவதம் என்கிற புராணம் இருக்கிறது பாருங்கள்... இந்தப் புராணம் இயற்றுவதற்கே காரணம் என்ன...?

சரஸ்வதி நதி தீரத்திலே வியாஸர் உட்கார்ந்து கொண்டிருந்தார். ரொம்ப சிந்தையோடு இருந்தார். அப்போது நாரதர் அங்கு வந்தார். "ஏன் இத்தனை சிந்தையோடு இருக்கிறீர்...? இப்படி நீங்கள் இருக்கலாமா?" என்றார் வியாஸரைப் பார்த்து.

வியாஸர் சொன்னார், "இவ்வளவு வேதங்களை யெல்லாம் விவரித்தேன். வகுத்தேன். உயர்ந்த இதிகாச – சிரேஷ்யமான மகாபாரதத்தை எழுதினேன். இருந்தாலும் மனத்திலே ஒரு நிறைவு ஏற்படவில்லை. ஏதோ ஒரு குறை இருந்துகொண்டேதான் இருக்கிறது; அந்தக் குறை என்னவென்று தெரியவில்லை" என்றார்.

அப்போது நாரதர், "கிருஷ்ண சரித்திரத்தை, பகவான் வாசுதேவன் சரித்திரத்தை நீங்கள் விடிலமாக, **விசிததமமாக** – நன்கு விவரித்து எங்கும் சொல்லவில்லை:

ஆங்காங்கே கோடி காண்பித்திருக்கிறீர்கள். அதனால், கிருஷ்ணனுடைய அவதாரம், அவனுடைய லீலைகள், அதைச் சொல்லக்கூடிய ஒரு புராணத்தை நீர் இயற்றும்; அப்போது உமக்குத் தெளிவு பிறக்கும்...” என்று உபதேசம் பண்ணினார்.

வால்மீகிக்கு உபதேசம் பண்ணிய மாதிரி, இங்கே வியாஸருக்குச் சொன்னவுடனே, வியாஸர் அவர் வாக்கை அனுசரித்து உயர்ந்த ஸ்ரீமத் பாகவத புராணத்தை இயற்றினார்.

பிரும்ம சூத்திராதிகளையெல்லாம் இயற்றிய பிற்பாடு இயற்றியதால்தான் பாகவதம் அவ்வளவு கடினம்! பாகவத ஸ்லோகம் அவ்வளவு சுலபமாகப் பிடிபடாது. ராமாயணம் மாதிரி அவ்வளவு சுலபமாக வராது. இரும்புக் கடலை என்றே பெயர்!

அவ்வாறு உயர்ந்த பாகவதத்தை, கிருஷ்ண சரித்திரத்தைச் சொல்வதற்கென்றே இயற்றிய வியாஸர்,

‘தமத்புதம் பாலகம் அம்புஜேக்ஷணம்’ என அற்புத பாலகனை, அற்புதமான அவதாரம் என்று கிருஷ்ணாவ தாரத்தைக் கொண்டாடினார்.

அதே வியாஸர், நரசிம்ஹ அவதாரத்தைச் சொல்கிற போது **‘அத்ருச்யத அத்யத்புதம்’** என்றார். கிருஷ்ணாவ தாரம் அத்புதம் என்றால், இது அத்யத்புதம்!

ஆகையினாலே, நரசிம்ஹ அவதாரம் மிகவும் உயர்த்தி.

**ந**ரசிம்ஹ அவதாரத்தைச் சொல்ல வந்த நாராயண பட்டத்திரி, ‘ஸ்தம்பே கட்டயத்’ ஸ்தம்பத்தைத் தகர்த்தான் ஹிரண்யகசிபு என்று சொல்லிவிட்டு, **‘குருபவனபுர பாஹிமாம்...’** என்று நரசிம்ஹனைத் துதிக்க ஆரம்பித்து விடுகிறார்! வெறும் நாமங்களாகவே சொல்லிக் கொண்டு

போகிறார்! 'ரூபத்தை விவரிக்க முடியுமா தன்னாலே' என்று எண்ணிக் கொண்டு, 'சர்வத்துக்கும் அந்தராத்மாவான உன்னை என்ன சொல்ல முடியும்?' என்று வியக்கிறார். 'பவனபுரமான குருவாயூரிலே எழுந்தருளியிருக்கும்படியான எம்பெருமானே, பாஹிமாம்! பாஹிமாம்!' என்று நாமங்கள் சொல்ல ஆரம்பித்து விடுகிறார்.

நரசிம்ஹன் பகவான் ஆவிர்ப்பவித்தபோது தோன்றிய சப்தம்தான், மந்திர சப்தாதிகளிலேயும் கலந்து ஒலிக்கின்றது. அந்த மந்திரங்களைக் கேட்பவர்களும், அந்த எம்பெருமானை உபாஸிப்பவர்களும், அந்த பிரஹலாதனைப் போல் அவன் பரிபூர்ண ஆதரவுக்குக் குறைவின்றி பாத்திரமாவார்கள்.

பிரஹலாதன் சொல் காக்க ஓடோடி வந்த பரமாத்மா, எங்கும் நிறைந்து நம்முள்ளும் குறைவின்றி நிறைந்து ஒளிர்கிறான்; ஒலிக்கிறான்; ஜ்வலிக்கிறான்.

(குறையொன்றுமில்லை ஆறாம் பகுதி நிறைவுற்றது.)

